வேறு.

சேனனுந் தரத்தி லுயர்தானஞ் செய்யுந் தருமந் தவநியம
மனனு தரவாற் செயிற்கிடைக்கும் பொற்றா மரைவா வியின்மூழ்கக
கனமார் தீர்த்தஞ் சிவரூப மாமா கத்திற் ப்ரயாகையினி
லினமா முற்றுந் தோய்ந்தபல னெய்து மிதிலோர் நாண்மூழ்கின். ()

புந்தி மகிழ்ந்திப் புனலோராண் டாடிப் புராரி தனையுமையை
வந்தி யரும்வந் தனைசெய்து வணங்கின் மகப்பே றடைந்திடுவ
ரிந்த வுலகிற் றீர்த்தமெல்லா மிதிற்கோ டியிலோர் கலையெவ்வா
பந்த பாவ வினையகலும் பார்க்கிற் றொடினற் பொருள்சேரும். (௩௨)

பானம் பண்ணி னினைத்தவெல்லாம் பண்பி னடைவர் காசியினில்
வானந் தருசக் கரதீர்த்த மாலோ னிருமித் திடவிளங்கு
ஞானந் தரும்பொற் றாமரைநீ ரவற்றின் மிகுநன் னலஞ்சிறக்குந்
தேனந் தியபூங் குழலுமைபாற் சிவனே நிருமித் திடுதலினால். (௩௩)

ஆதி தீர்த்தஞ் சிவதீர்த்த மருள்சேர் தருமக் கினிதீர்த்தஞ்
சோதி செறிதற் பரதீர்த்தஞ் சூல தீர்த்தஞ் சிவகங்கை
நீதி திகழ்பொற் றாமரைமா தீர்த்த நிறையெக் கியதீர்த்தம்
பேத மறுமெய்ஞ் ஞானமுத வுதகம் பரமாம் பிரமமயம். (௩௪)

சறுவ தீர்த்தஞ் சிவஞான தீர்த்தந் தரும தீர்த்தமெழில்
செறிநீர் முத்தி தீர்த்தந்தீர்த் தவுத்த மந்தீர்த் தாசிரயம்
பொறிசேர் பாவ நாசமியல் பொருந்துந் தேவ தீர்த்தநெறி
யுறுசீர்ச் சிவப்பி ரீதிகர மோங்கு புகழ்மங் களதீர்த்தம். (௩௫)

தொடருந் துரித நாசனமுன் றோன்று முரோக நாசனமே
லடரும் வினைதீர் கலியாணி தீர்த்த மெனும்பே ரதற்கியையும்
படரும் புவியி னிந்நாமம் பகர்ந்தெந் நீரிற் படிந்திடினு
மிடர்தீர் பொற்றா மரைத்தீர்த்த மூழ்கும் பேறெய் துவர்திண்ணம்.

பொற்றா மரையின் வரலாறு புகன்றேந் தொகுத்து நுமக்கிங்கு
மற்றா ருரைப்பா ரதன்பெருமை மரபா தகப்பஞ் சிற்கனலா
முற்றா முலையா ளொருபாகன் றானே வல்லன் மொழிதருநூல்
கற்றார் கேட்டார் படித்திடுவார் களிப்பார் முத்தி யெய்துவரால். ()

வேறு.

என்று கூறினன் முனிவரர் பின்னரு மிசைப்பார்
நன்று கேட்டக மகிழ்ந்தன மெனநனி போற்றிச்
சென்று மூழ்கினர் பவந்தொலைத் திடுஞ்சிவ தீர்த்தந்
தொன்று தீர்த்தம துறையென வகத்தியன் சொல்வான். (௩௮)

எந்த நாளுமிங் கதிசயங் காட்டுமித் தீர்த்தம்
பந்த நீங்குற மூழ்கினர் பேற்றையார் பகர்வார்
புந்தி யாலளக் தறியொணு விசேடத்திற் பொங்கு
மூந்த நீர்வினை வியதுநன் றுஎென மொழிவான். (௩௯)

நீடு மாகிய வேதவா கமங்களின் மலரு
மாப ரம்பரன் காட்சிதந் தருளுநாள் வணங்கித்
தாப வெம்மைதீர்ந் தியாங்கண்முன் றழைத்திட வருளின்
றீப மாகிய தீர்த்தமொன் றுதவுதி யெனவும். (௪0)

கருணை நாயக னியம்புவான் வேதவா கமமே
பொருணை யம்பெறு மதிகுய்யம் புகன்றிடக் கேண்மின்
னருணை மார்தரு தீர்த்தமே நமதுருத் தையல்
வருணை மார்தரு பீடமா மிலிங்கத்தின் வடிவம். (௪௧)

எம்மிற் றோன்றியே யொடுங்குவர் மாலய னிமையோர்
தம்மிற் றோன்றிடுஞ் சராசர மெவையுநந் தன்மை
நும்மிற் றோன்றிடக் காண்மினீர் நூல்வடி வன்றோ
கம்மிற் றோன்றிய வுலகர்க்குக் காணுத லரிதால். (௪௨)

இன்ன ணம்புகன் றிலிங்கத்தி னுற்பவ மாகி
யுன்ன ரும்மொரு குரோசது ரத்திற்குள் ளாகச்
சன்னி திக்கெதிர் தோன்றிடத் தன்கரு ணையினுற்
பன்ன ரும்புனற் றீர்த்தமுண் டாக்கினன் பகர்வான். (௪௩)

யாமி யற்றலா லிதுசிவ தீர்த்தமித் தீர்த்தஞ்
சேம மாருயிர்க் கெனப்படிந் திடிற்றரி சிக்கிற்
பூமென் றண்புன லுண்டிடிற் புரோக்கணம் புரியி
னேம கோய்களு நீங்குமெய்ப் பாவமு நசிக்கும். (௪௪)

கங்கை யேமுதற் றீர்த்தங்கள் கருதிநம் விழியை
யங்கை யாற்புதைத் திட்டநா ளமலையங் குலியின்
றுங்க மாகவந் துதித்தலிற் புனிதமாந் தோன்று
மிங்கு நம்மிடத் துதித்தலா லவற்றினீ ததிகம். (௪௫)

இன்னு மொன்றியா மாமகின் மாலிய தீர்த்தந்
தன்னின் மூழ்கினுண் ணிற்றெடிற் காணினுஞ் சரிக்கிற்
றுன்னு பாதகந் தொலைத்துடன் றெல்கதி யளிக்கும்
புன்னு மீதன்றி மற்றொன்று பகருதுங் கேண்மின். (௪௬)

வேறு.

அருப்பூர வெமையாட்டுங் கருப்பூர தீர்த்தமிதி லதிக நீரமே,
விருப்பூரக் கொண்டருளி வேண்டுவோன் வேண்டியதை மிகவு மீ
வோ, னெருப்பூர்பகு சென்மித்த முழுந்தளவுண் பவர்பவந்து ணீறு
முண்மை, கருப்பூர வாஞ்சையினாற் கருப்பூர சொக்கெனும்பேர்
கருதிக் கொண்டோம். (௪௭)

வேதநெடு மான்முனிவர் விண்ணவரோ முதலினர்கள் விரும்பி
யாடுந், தாதுகமழ் கருப்பூர்நின் மாலியதீர்த் தம்விரும்பித் தவத்தாற்
கொள்வா, ரோதுவதென் வேள்விமுதற் புண்ணியமுஞ் செய்தவர்க்
கே யுதவுந் தீர்த்தங், கேதமுறு பாதகர்க்கு நாமளித்தா லன்றியுண்
ணக் கிட்டா தன்றே. (௪௮)

சிவதீர்த்த முதலாநின் மாலியதீர்த் தச்சலத்தாற் சிறப்புற் றோங்கி
நவைதீர்த்து வளர்மினிதி லெழுகடலு நாமமைத்து வருவிப் பேம்பின்
கவைதீர்த்திவ் வருள்கொடுக்கு மெனவருளி யீசனிலிங் கத்தினுறைன்
றவதீர்த்த நீர்நனைந்து கதம்பமும்வில் லமுமெங்குந் தழைத்ததன்றே.

இத்தீர்த்த மாதடத்தி லிறையருளா னெழுகடலு மியைந்த தெ
ன்றான், முத்தீர்க்கு மத்தடத்தின் மூழ்குனர்பே றளவையெம்மான்
மொழிய லாமோ, வத்தீர்த்தந் தருப்பித்துப் பிதிர்க்கடன்க ளொன்று
ற்றி லதிகங் கோடி, புத்தீர்க்கு நரகமூழ்ந்தும் பிதிர்க்களெல்லாஞ் சிவ
லோகம் பொருந்தி வாழ்வார். (௫௰)

உம்பர்புகழ் சிவதீர்த்த மகிமையினை யுவந்துபடித் திடுவோர் கே
ட்போர், வெம்பவமெல் லாந்தொலைத்துச் சிவலோகத் தெய்திவிம
லன்போல் வாழ்வர், நம்பரனுங் குமரகுரு பரன்புகன்ற வாறுமக்கு
நவின்றே மென்றே, கும்பமுனி மாதவத்து வசிட்டாதி முனிவரர்க்
குக் கூறி னனால். (௫௧)

நான்காவது தீர்த்தமகிமையுரைத்த வத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௬௮.

---

ஐந்தாவது

# நடம்புரிந்தவத்தியாயம்.

---

வந்தனை செய்து கேட்ட முனிவரர் மலையக் கோவே
சிந்தனை செய்த வேதா கமந்தரி சிக்க நாத
னெந்தநா ணிருத்தஞ் செய்தா னவன்பிர மாணம் யாதிங்
கந்தநாட் கண்டோ ரியாவ ரவைதொகுத் துரைத்தி யென்றார். (க)

நன்றுநீர் கேண்மி னென்று வகத்திய னவில்வான் ஞான
மொன்றியே வளரு நீப வுருவின்வே தாக மங்கண்
மன்றுளே நடிக்குஞ் சொக்கை யிரண்டற மனத்துள் வைத்தே
நின்றுமா தவங்க ளாற்றி யுறைந்தன நெடுங்கா லங்கள். (உ)

உறைந்திடுங் கான்முன் வந்த வுருத்திரப் பிரள யத்தான்
மறைந்திடு முலகத் தோடு வானுளோ ரையுமொ டுக்கி
நிறைந்திடு மீசன் றானே யொருவனாய் நின்றான் காலத்
திறந்தெரிந் தியாவு முன்போற் சிருட்டிசெய் திடுவா னெண்ணி. (

தன்னிட மாக விச்சா சத்தியைத் தோற்று வித்து
மன்னுமச் சத்தி யான்முன் றொடுக்கிய வாறே நல்க
மூன்றுற வருளிச் செய்தா னவனிட மாக முன்போற்
றொன்மைசே ரயன்மால் விண்ணோர் சனகாதி யோகர் தோன்றி. ()

மற்றுள பிரவஞ் சங்க ளியாவுமவ் வரம்பிற் றோன்றி
முற்றுறு முலக மியாவு முன்னையி னிருந்த திப்பாற்
கற்றையஞ் சடையான் வேதா கமங்களுக் கருளை நல்கச்
சொற்றிடு மிலிங்க நின்றுந் தோன்றினான் விடைமேன் முன்போல்.

வெள்ளிவரு சொக்கன் றன்னை வேதவா கமங்க ளேக்கித்
துளிவரு மன்பின் முன்போற் றோத்திரஞ் செய்து நிற்பக்
களிவரு மன்பர்க் கன்பன் கருணைசெய் தருளித் தூய
நளிவரு முளத்தீர் கேண்மி னல்குவம் வரங்க ளென்றான். (அ)

முன்புநீ யருளிச் செய்த மொழிப்படி யாங்கள் காணத்
தென்புலி விசேட மாகத் திருநடங் காட்ட வேண்டு
மன்பதை யுலகங் கண்டு வாழ்வுற வேண்டு மென்ன
வன்பினாற் றொழுது கேட்ப வவ்வா மளித்தெம் மையன். (எ)

கண்டுசே விக்க ஞானக் கண்கொடுத் தருளி மன்றிற்
பண்டைவே தாக மங்கண் முதலிய பரவிக் காண
வண்டருங் காணொ ணாத பொற்பத மதிர வீசித்
தண்டலி னிருத்தஞ் செய்யத் தரைகடு நடுங்கிற் றன்றே. (௮)

நானில நடுங்கக் கண்டு நந்திரு நடம்பொ றாதென்
றூனிலந் தாடுஞ் சொக்கன் றிருவுளத் தடைத்த ழைத்து
வானிலம் போற்றுந் தூய மாபெருங் கயிலை தன்னைப்
பூநிலச் சிவன் முத்தி புரத்தினி லிருத்திப் பின்னர். (௯)

அக்கயி லையினெட் போது மான்றமுச் சபையி னம்பொ
னொக்கவின் றொளிருந் தூய வுத்தர மன்றந் தன்னிற்
செக்கர்மே னியவெம் மண்ண றிருநடம் புரிந்தான் கண்டு
மிக்குயர் ஞானக் கண்ணாற் றுதித்தவே தாக மங்கள். (௧௦)

மூவரா லறிய வொண்ணாச் சிவலோகந் தனையு முன்னைப்
பாவறிந் துதவு வாணி பவனமத் தியின மைத்து
மேவரு நகர மாக்கி விரும்பினீர் காண்மி னென்ன
யாவருங் கண்டு போற்றி யரகர வெனச்சே வித்தார். (௧௧)

அவ்வுல கத்தின் மேவு மாதிநாட் டிசையெவ ளேற்றைத்
தவ்வுறு துறைக ணங்க டன்னையுங் காட்டி யப்பா
னவ்விசேர் கரத்தி னுன்முன் னவின்றமார் கழிமா தத்திற்
செவ்விய திரைநா * ளீசா னத்திரத் தினமன் றத்தில். (௧௨)

அங்கயற் கண்ணி யம்பொ னாசனத் திருந்து காணப்
பங்கய வலத்தாள் பண்பின் முயலகன் முதுகி லூன்றித்
துங்கநூ புரங்க ளார்ப்பத் துலங்கிடத் தாள்குஞ் சித்தே
செங்கைமான் மழுவோன் றூய சிங்கார நடனஞ் செய்தான். (௧௩)

அரியயன் முதலாம் விண்ணோ ரம்புலி பாம்பு மோனந்
தெரிதரு முனிவர் மற்றுஞ் செப்பிய வனேகர் காண
விரிசடை ரமுத லிங்க முன்னரின் வெள்ளி மன்றிற்
பரிவொடு பரமா னந்தப் பராபர நிருத்தஞ் செய்தான். (௧௪)

உற்றகா ரணத்தி னாற்பூ வுலகமா கயிலை யென்று
நற்றவர் புகழ்பூ லோக சிவலோக மென்று நாமம்
பெற்றது மதுரை யிந்தப் பெருங்கதை படிப்போர் கேட்போர்
கற்றுளோர் பவங்க ணீங்கிக் கதியடைந் திடுவர் திண்ணம். (௧௫)

---

* ஆதிரைநாளிலே, உஷக்காலத்திலே. உஷக்காலம் வடநூலிற்கூறப்பட்டது.

நடம்புரிந்தவத்தியாயம்.

நிகழ்த்தினே மென்னக் கேட்ட நெடுந்தவர் மலையக் கோவே
மகத்துவத் ததிக மிந்த மாபெருங் கயிலை யென்றாய்
தோகுத்தவக் கிரிவ ளங்க டொகைவகை விரிவா யாங்கள்
பகுத்துணர்ந் தறிய வேண்டும் விளங்கநீ பகர்தி யென்றார்.

ஐந்தாவது நடம்புரிந்தவத்தியாயம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உ௬

## ஆறாவது
## மகாகைலைமான்மியமுரைத்தவத்தியாயம்.

வினமிளை யென்னும் பன்னி வினவிடத் தரும சன்மா
முனமுளை செய்தான் றெய்வ முதுபெருங் கயிலை வண்மை
பனவரிற் றவத்தா னன்றேன் பகர்ந்தவா றுரைப்பேங் கேண்மி
னனகமா முனிவிர் காளென் றகத்திய னருளிச் செய்வான். (௧)

சிவனையே பொருளாக் கொண்டு தெளிந்தபே ரறிவின் மிக்கா
ணவமுறு கற்பின் பன்னி வின்மிளை நவில்வாண் ஞானத்
தவர்க்கிரிற் பெரியோய் மிக்குத் தனிப்பெருங் கயிலை யென்றே
யுவமையின் ஞான நூல்க ளுரைக்குமா றுணர வேண்டும். (உ)

அவ்வளை யிருக்குந் தான மதன்கொடு முடியி லக்க
மெவ்வழி யுயர்ப கற்சி யுறைபவ ரியையும் போகர்
தவ்வுறா தவைவி ரித்துச் சாற்றுதி தமியேற் கென்னக்
கௌவைதீர் தரும சன்மாக் கழறுவான் மனைவி கேட்ப. (௩)

சொற்றிடும் புவனந் தோறுந் தொடுகடற் பூவி னுள்ளு
மற்றுள தீவு தோறுங் கயிலைமால் வரைக ளுண்டு
கற்றைவார் சடையெம் மீசன் கருணைமா துமையா ளோடு
முற்றிடு மங்கங் கெல்லா முள்ளவா றின்னுங் கேண்மீ. (௪)

பிறங்குமவ் விடங்க டோறும் வைகுண்டம் பிரம லோகந்
திறங்கெழு கமலக் கண்ண ரெண்கண்ண ரவற்றிற் சேர்வா
ரறங்கொள்பு லாழி நள்ளிற் சுவேதநீ வதிக மாங்க
ணிறங்கெழு மாதி மாயோ னறிதுயில் கொள்வா னிங்கான். (௫)

பிரமலோ கங்க டன்னிற் பெரிதுசத் தியவு லோகம்
பரமனும் பிரம னுங்குப் பரிவின்வீற் றிருப்பான் றூய
வரமுறு கயிலா யங்க டன்னின்மா கயிலை மிக்குத்
திரமுறு மதில காதி சிற்பர சதாசி வன்றான்.

மூலமே முதலா தார மாறினு முக்கட் பெம்மான்
சாலவே யுறைந்தா னேனு மருகதத் தகிகந் தானு
மாலநேர் விழியாய் கேணீ யதுவென வீதுவி சேட
நூலறி வுடையோர் தாமு நுவல்வர்மா கயிலை யென்றே.

தேசுறு மொளியு டைத்தாய்ச் சிலையொடு மண்டா னுக்கண்
மாசுறு வம்பொன் றங்கம் வளர்நவ மணிகள் வெள்ளி
பேசுறி னவையு மன்று பெரும்பரஞ் சோதி ரூப
மாசுறு நித்த மாகு மதன்றிறம் புகல்வா ரியாரே.

அரும்பெருங் கயிலை யாகு மதிலடைந் திடுவோ ரொன்றுந்
திரும்பவும் வாரார் மூலச் சிவத்தொடுங் கலந்து வாழ்வர்
விரும்புமவ் விமலன் போலு மெய்க்கிரி வடிவம் வாசச்
சுரும்பியிர் குழலாய் கேளென் றதன்பிர மாணஞ் சொல்வான். (௯)

வேறு.

"பாங்குறுமிவ் வுலகிலுள்ள தீவுக ளெல்லாம் பகரினடு வயிருக்கு
ஞ் சம்புத் தீவ,மோங்ககற்சி யோசனையோ ரிலக்கஞ் சூழு முவர்க்கட
லு மவ்வளவை யவற்றைறச் சூழ்ந்து, நீங்கரிய வாலந்தீ விரண்டி லக்
க நிறைந்தகன்ன விரதவா ரிதியு மற்றே,யாங்கதற்கப் பாலாஞ்சன் ம
லித்தீ வந்தா னளவைநா லிலக்கமதுக் கடலு மஃதே. (௧௦)

நிறைகுசைத்தீ வோசனையெட் டிலக்கஞ் சூழு நெய்க்கடலத்
தொகையப்பாற் கிரவுஞ் சத்தீ,வுறைதருமோ சனைபதினா றிலக்க ம
ப்பா லோங்குததிக் கடலுமுறைத் திடுவ ரவ்வெண், குறைவறுசா க
த்தீவோ ரிரண்டு முப்பான் கூறுமோ சனையிலக்கம் பாலா ழிக்கு,
மறைகுவரவ் வெண்ணேபுட் கரதீ வந்தா னறுபானன் கிலக்கமவ்
வெண் ணீரா ழிக்கும். (௧௧)

அந்நீரா ழியைச்சூழ்சக் கரவா ளக்குன் றாயிரமோ சனையகல மு
யர்ப்பு மஃதே, தொன்னீர்மை தருமதனமேன் முறையிற் சந்திர சூரி
யர்கீட் டிசையினுதித் திடுவர் மேல்பா,னன்னீர்மை பெறச்சென்றத்
தமன மாவர் நவின்றிடுமக் கிரிக்குளன்றி யப்பாற் செல்லார், பன்னீ
ர்மை வரைக்காணப் பட்டுங் காணப் படாதமையா லுமுலோகா
லோக மென்பார்.

நேமிவான் கிரியப்பாற் புறப்பே ராழி நிகழ்ந்ததைச்சூழ் பூமியும்பொன்மயம தாகுஞ், சேமமுறு பாழிசெறி யிருளே மூடுஞ் செங்கதிரோன் சசியிரவு பகலங் கில்லை, நாமமுறு பல்லுயிர்த்தோற் றமுமங் கில்லை நவின்றிடிலங் கிலமேடு பள்ள மாகும், தாமநறுங் குழலாயவ் விடத்தின் றன்மை சாற்றினே மற்றுமினிச் சாற்றக் கேணீ. ()

நாவலந்தீ வேமுதலா மிக்குன் றந்த நவில்கோடி யிரண்டிலக்க மைம்பா னான்கா, மேவமில்பே ராழிவரைக் கப்பா னூல்க ளியம்பியவண் டச்சுவர்மட் டளவை கூறின், மேவருநாற் பானேழு கோடி மேலும் விளம்புவர்நாற் பானோடா றனையி லக்கந், தாவில்வரைக் கப்புறமிப் புறமு மேருச் சயிலநடு வந்தமைம்பான் கோடி தானும். ()

தகவுறுமிப் பூமிநடு மேருவீ ரெண் டாழ்ந்தெண்பா னான்குசகத் திரமே லோங்கிப், புகலருமுப் பானான்கா யிரம தாகப் புகன்றிடுமோ சனைபரந்தா யிரமென் றோது, நிகரில்கொடு முடியிலங்க விலங்கு மந்த நெடுவரைக்குப் பூருவதிக் காதி யாக, விகலறுமிந் திரனகர முதலா மற்று மியம்புதிசைப் பாலருறை பதியும் வைகும். (௧௫)

நவமுறுமா கயிலைவளஞ் சேட னாலு நவிலவரி ததிகுய்ய நவிற்றின் மாதே, யிவர்புகழ்சேர் குபேரனுறை திசைக்குக் கீழ்பா லீசானமூலதிசைக்கு மேல்பா லண்டச், சுவரினுக்குத் தென்பாலா ழிக்குன் றிற்குத் தொகுத்தவட பாற்பகுத்த பதின்முக் கோடி, நுவலளவை யோசனைதூ ரத்திற் கப்பா லுண்மைபெற விருக்குமது நுவலுங் காலே. (௧௬)

தற்பரமாம் பெரியவட கயிலைச் சுற்றுந் தாவில்வண * பூமியதன் றன்மை கூறி, லுற்பனவங் கிலவளவை பத்துக் கோடி யோசனையோ டிருபத்து மூன்றி லக்கம், பொற்புறுகற் பகம்பாரி சாத மற்றும் பொன்மயமு நவமணியின் மயமு மாகி, விற்பொலியுந் தருக்கள்பல வெங்கு மோங்கு மிக்குநவ நதிமுதலா றனேக மண்ணும். (௧௭)

தாமரைவா விகள்குளிர்செங் கழுநீ ரோடை தண்குமுத மலர்மடுக்க ளனேகம் வைகுங், காமரொளி விளங்கும்வரைச் சோதி யாலே காந்திடுமங் கிலத்திருள்பே ரொளியே தங்கும், பூமருமத் தனுவனத்து ணடுவே யோங்கும் போற்றுபெருங் கயிலாயம் புனித மாகு, மாமறைகாண் பரியசிவன் றனக்கெந் நாளு மருவிரண்டாந் திருமேனி வடிவாய் நிற்கும். (௧௮)

* வணம் - வனம்.

நிலம்பெறுமப் பெருங்கயிலை யகற்சி கூறி னிகழ்த்துமொரு திசையொருபான் கோடி யாக, மலைவறநாற் றிசைச்சுற்று நாற்பான் கோடி வகுத்திடுமோ சனைகீழின் றாழ்வு கூறிற், பிலமுறுகீ ழேழுலக முருவிக் கூர்மம் பிறங்குபதங் கீண்டுமே ரப்பாலோ மேலை வறுமே லுயரமண்ட முகடு தோயு மதுநாளம் போலேக மாகி யோங்கும். (௧௯)

மேருநிகர் தருவொவ்வொன் றத்தன் மைத்தாய் வெய்யகொலைக் கொடுமுடிக ளளவி லாத, சாருமிகு வளத்தொடுமி லங்கு மந்தத் தூணிக்கயிலை சாற்றுகொடு முடிகட் கெல்லாஞ், சேருநடுக் கொடுமுடியிற் சிவலோ கந்தான் செப்புபதின் கோடியொரி லக்கத் தெண்பா, னூறுமா யிரமெனுமோ சனைய கற்சி யதன்மகிமை விரித்துனக்குப் புகல்வாங் கேணீ. (௨௦)

ஓரேழு திருமதில்சூழ்ந் திருக்கும் வாயி லுரைத்திடிலொவ் வொருமதிற்கு நான்காந் துய்ய, பாரேழும் புகழ்தரவுன் னினர்க்கே நல்கும் பல்வளங்க ணெருங்கியதி சயமாய்த் தோன்றுங், காரேழுந் தவழெயில்சூழ்வு லோகங் களங்கமறு நவமணியால் விளங்கி யோங்கு, மீரேழு புவனமுமேத் தரிய சிந்தா மணிமயலீ லாவளாக னெங்கு மோங்கும். (௨௧)

மெத்துபுகழ் பெறுநாலு விதங்க ளாகி விளங்குதிரு வீதிகளு மனேகஞ் சாற்றுஞ், சித்தர்சாத் தியர்முதலாங் கணங்கள் பல்லோர் சிறப்புறவே யவ்விடத்திற் செறிந்து சூழ்வ, ரித்தனையுஞ் சூழ்தருமோர் முதன்மை யாக வியம்புமதி லுயர்ச்சியைக் கோடி வாயி, லத்திலுய ரோசனையே யிலக்க மாகு மவ்வாயி லொன்றுங்காப் பவரைக் கூறில்.

பரவுவிநா யககணங்கள் வரையே யென்னப் பகர்தருகால் கைகளுடன் றடிகை யேந்தி, யுரவுசெறிந் திடுசொன்ன வாயில் காப்பருள்ளிரண்டாந் திருமதிலி னுயர்பு கூறில், விரவுமைம்பா னிலக்கம்யோ சனைநீள் வாயில் விளம்புமுயர் பாதிலக்கம் வாயி லொன்றும், வாமுறக்காத் திடுவர்சிவ யத்த ரான வலிகெழுதிண் புயஞ்செறிமா கணங்கள் பல்லோர். (௨௩)

மூன்றாமுட் டிருமதிலி னுயர்பு கூறின் மொழிகுவரவ் வரைக் கோடி வாயில் கூறி, லேன்றதி னுயரமுமைந் திலக்க மன்ன வெழில்வாயி லொன்றுங்காப் பவரியா ரென்னி, லூன்றதி வேதாள கணங்க

ன் பல்லோ ரோங்குமடல் வச்சிராயு தங்கை யேந்தியானை யூர்ந்து காவல
புரிந் திசிவ ரின்னு மவனுறைவர் சிலாவனைப் புகல்வாங் கேண்மே. ()

சிவகதைகள் சிவாகமங்க ளன்பா னானுந் தேர்ந்துணரும் பெரி
யோர்முக் கண்ண ராகித், தவமறுசித் தியத்துவம்பெற் றிருப்ப ருன்
னிற் சார்ந்திடுநா லாமதிலி னுயரஞ் சொல்லி, னவையறுமைம் பா
னிலக்க முயர்பு வாயி லுன்கிலக்கஞ் சங்கட்ட கணங்க ளங்கை, யுவ
மையிழில்வெங் குலிசியராய் வாயி லன்குங் காப்பர்சிவ சாரூப ருறை
வ ரங்கண். (உ௫)

ஐந்தாமுன் மதிலினுயர் புணர்ந்த கூறி னாக்கோடி யோசனை
மூன் றிலக்கம் வாயின், மைந்தார்சுப் பிரமணிய கணங்க ளாறு வத
னங்கள் விளங்கிடவே லங்கை யேந்தி, மூந்தார்வ முறவாயி லுன்குங்
காப்பர் மொழிதருசா மீபபத மடைந்தோ ரொன்று, நந்தாவவ் வாவ
ரணத் துறைவர் வேண்டு நறியபதார்த் தத்துசித்தந் திருத்தி பெற்றே.

ஒப்பரிய தாய்ச்சுவர்க்க லோகத் திற்கங் குரித்தாம்வத் துக்களவ
னுடைத்தாய்ச் சொன்ன, வப்புவனத் தேவாண்டி லீரைஞ் ஞாறு
ண் டனுபவிக்குஞ் சுகமொருநாண் மத்திபா னத்தாஞ், செப்பரிய சி
வனருளா லவனுற் றோர்க்குத் தேடிக்கிட் டாதவத்து வெல்லாங் கி
ட்டு, மைப்புயன்மே னியன்விரியா லளக்க வொண்ணா வளத்தினிலி
ங் கறிந்தநுகரா புகன்றே மாதே. (உஎ)

வெற்றிமெய் வாவரணத் துள்ளி லாறு நன்மதிலி னுயர்புமறை
க் கோடி யாகும், பவித்திடும்யோ சனைவாயி லிரண்டி லக்கம் பகர்ந்
திடுவ ருன்னதமவ் வாயி லுன்கின், புவித்தலமேழ் புகழ்கிழை வாயி
றன்னிற் புழைக்கைமத வேழமுக னுலக கற்சி, கவித்திடும்யோ சனை
யைம்பா னிலக்கஞ் சூழ்ந்து கனம்பெறுமே ழாவரணத் துடனே
வைகும். (உஅ)

விக்கினே சுரகணங்க ளநேக ராகி வேழமுக னைத்துதிக்கும் ப
த்தர் பல்லோர், முக்கணுடைச் சோடசவைங் கரின் றோர்கள்
மொழிதருமவ் விடத்திற்சூழ்ந் திருப்பர் ளளிற், றக்கலங் தருமோ
ரா லையம்வி ளங்குஞ் சாற்றுறுமவ் வாலயத்தி னிடத்தைக் கூறின்,
மைக்குழலாய் நாற்றிசையு மிருபத் தொன்றும் வகுத்திடும்யோ சனை
யிலக்கம் வகுப்பா மின்னும். (உகூ)

அத்தகைய சினகரத்து ளிருக்கு மோர்பா னைந்திலக்க மகன்றுதி
ன ரணியா லோங்கி, யொத்துமொளிர் மாணிக்க மயம தாகிமேன்

ணம்பெற வளரரிய சனத்தின் மீதே, யுத்தமமா கணபதியாங் கொன்
று மேவும் யோகர்சன காதியராங் குவந்து போற்றப், பத்தியொட
க் கணபதிதன் னனுக்கை பெற்றுப் பத்தர்களவ் வாலயத்தி னுள்ளி
ற் செல்வார். (௩௰)

மேற்றிசைவா யிலிற்சுப்பிர மணிய லோகம் விளம்பிலைக்
கோடியோ சனைவி சாலஞ், சாற்றிடுமே ழாவரணத் துடனே வை
குந் தங்குவர்சுப் பிரமணிய கணங்கள் பல்லோ, ரேற்றமூறுங் குக
சாரூ பத்தைப் பெற்றோ ரெண்ணிலர்சூழ்ந் திருப்பாதி னிருக்குங்
கோயில், போற்றிடும்யோ சனைபதினெட் டிலக்க மாகப் புகன்றிடு
வ ரகற்சியின்னும் புகல்வாங் கேணீ. (௩௧)

மணிகள் * பல சாமரங்கள் விளங்க ரத்ந மயமாகும் விமானமந்
தப் புரத்தூண் மன்னும், பணிகிளரவ் விமானமத்தி யின்மா ணிக்கப்
பரியவயி ரேயத்து மயம தாகி, யிணையிலரி யாசனமைம் மூன்றி லக்
க மியம்பியயோ சனையகன்றே யிருக்கு மாங்க, ணணிகிளர விருமரு
ங்குந் தெய்வ யானை யனைக்குவள்ளி மேவவமர்ந் திருக்குங் கந்தன்.

முனைவடிவேல முருகேசன் வடிவம் பெற்றோர் மூதுணர்யோ
கியர்சனகா தியர்மற் றுள்ளோ, ரனைவரும்போற் றிப்பிரியா திறை
ஞ்சி நிற்ப வருள்கொழிக்கு மவனருள்பெற் றனுக்கை பெற்றே, வி
னைதவிர்மெய் யன்பினரா லயத்துட் செல்வார் விளம்பியதென் றி
சைவாயின் மேன்மை கூறி, னினைவரிய தனிப்பொருளா மகோர
மூர்த்தி நிலவுலக மகற்சியனைக் கோடி யாகும். (௩௩)

பன்னருமே ழாவரணஞ் சூழ வைகும் பயங்கரமா மகோரக
ணம் பலருஞ் சேர்வ,ரன்னதிலா லயத்திலரி யாச னத்தி லமர்ந்தருளு
மாதியாா மகோர மூர்த்தி,யின்னருள்பெற் றாலயத்தி னுள்ளிற் செல்
வா ரெம்பிரா னன்பர்வட வாயி றன்னிற், றன்னிகரி லாவாம தேவ
லோகஞ் சாற்றுவர்யோ சனையகற்சி யிலக்க மைம்பான். (௩௪)

ஓரேழா வரணஞ்சூழ்ந் திருக்கு மாங்கே யுயர்வாம தேவகண
மூவப்பின் வைகுங், காரேழுந் தவழ்மதில்சூழ் கோயி றன்னிற் கதி
ர்விரிமா ணிக்கவரி யாசனத்துப், பாரேழும் புகழாதி வாம தேவப் பர
மனினி துறையுமவ னனுக்கை பெற்றே, யீரேழு புவனமும்போற்
றிடமெய் யன்ப ரிருமைதரு மாலயத்தி னுள்ளிற் செல்வார். (௩௫)

* மணிகள் - ஒலிக்குமணிகள்.

எத்தியவிவ் வாவரணத் துள்ளின் மேவு மேழாமா வரணமதி னுயரங் கூறிற், பூத்திடுமோ சனையைம்பா னிலக்கம் வாயில் பொருந்துமுன்னர் பிலக்கமதிற் பொருந்தி னானு,மாத்திகர்சூழ் தருபிரம தகனைஞ் செங்கை யடலயிற்கு லந்தாங்கி வாயி னுன்குங், காத்தளிப்ப ரன்னானுக் கையினு லன்பர் கருதரும்பே ராலயத்தி னுள்ளிற் செல்வார்.( )

சொல்லியவே ழாவரணத் தகற்சி மூன்று தொகுகோடி யிலக்கத்தா யிரமெண் பானு, மெல்லொளிசே ராவரண முள்ளி லைந்தண் டியம்பிலவற் றகற்சியுமேழ் கோடி காண்க, மல்லல்செறி யைந்தினின்முந் தியதூச் சொல்லு மதிலுயர்ச்சி யோசனையைம் பானி லக்கம், பல்லுலகந் தந்தபரா சத்தி லோகம் பகர்தருமவ் வாவரணந் தன்னின் மேவும். (௩௭)

அம்மையுமை சாமீப மடைந்து ளோர்க ளாங்குறைவ ரவ்வுலகின் றன்மை கூறி, னும்பர்தொழ விளங்குபஞ்சா வரணஞ் சூழு மவ்வொன்றி னுயரமும்யோ சனையைம் பானு, நம்பியவா வரணசத்தி யநேகர் சூழு நாப்பணுறைந் திடுவள்பரா சத்தி கோயி, லிம்பர்புகழ் தருகோடி யுயர மாகுமியம்பியயோ சனையதன்சி ரின்னுஞ் சொல்வாம்.

ஒளிருமிரத் தினவயிடூ ரியமா ணிக்க மூரைமாற்றி லாப்பசும் பொன் னிவற்றி னாலே, தளவிசைசேர்த் தோன்றினுமொப் பிட வொண்ணா தாவிலொளிக் கிங்கிணிக ளநேக நாற்றி, யளவில்விதா னங்கொடிதோ ரணமேற் கட்டி யணிகிளர்பூம் பந்தர்மற்று மலங்கா ரஞ்சேர், கிளருமிரத் தினதீபம் விளங்க வெங்குங் கேழ்கிளர வோங்குகர்ப்பக் கிருகந் தன்னில். (௩௯)

யோசனையைம் பானிலக்க மகல மாகி யொளிருமிரத் தினமயமா யிலங்குஞ் சிங்காசனத்தி லினிதிருக்கு* மாதி சத்தி யன்னவளுநன் னதநாற்பா னிலக்க மென்ப, மாசின்மதி யனேகமவ னுதித்தா லென்ன வண்மைபெறு திருமேனி பிரகா சிப்பத், தேசுபெறு திருவழகி னதிக மாகிச் சிறப்புறுபல் லலங்காரத் துடனே கூடி. (௪0)

அராகமெனும் பாசங்கோ பாங்கு சத்தோ டபயவா தமுமிளிர்பே ரங்கை தாங்கி, நிராகமுறு மெய்யன்பர்க் கருளுங் கண்க ணீண்டகன்று விரவுபெருங் கருணை நல்கப், பாரகமுறு விம்பநறுங் கனியே யென்னப் பவளவள வாயதர மழகு வாய்ப்ப, வராக்னிடை கண்டு கிறை காதொ ளுத மாறிலாப் பொன்னோலை குழையின் மல்க.(௪௧)

* இனிதிருத்தல்-சுகாசனத்திருத்தல்.

திருவடியி னிரத்திநறா புரகின் றார்ப்பச் செங்கழுநீர் சண்பகந்
தண் கருநன் னெய்தன், மருவளர்மா லிகைமார்பி லங்கச் செம்பொ
ன் மாசிலுடை யுத்தரிகம் வனப்பு நல்க,வருள்வடிவா யினிதமரு தே
வி தன்னை யாயிரங்கண் ணன்முதல்வின் னவர்தாழ்ந் தேத்தப்,பரு
வமுகிற் குழல்விசயை சயைமுன் ருண பாங்கியர்பூசிப்பமகிழ்ந் துறை
வா ளென்றும். (சஉ)

சந்திரகலை போலொளிருந் தேவி தன்னைத் தனிப்பிரம ரந்திரத்
தா யிரம்பைந் தோட்டுக், கந்தமலி பதுமவா சனத்தி னுள்ளங் கரு
தியுறை யருள்வடிவந் தியானஞ் செய்யின், மூந்துகவி வாணரென
வாக்குண் டாகு மொய்யொளிப்பொன் னிறமாக விதையத் தெண்
ணி,னந்தலில்லெம் பாவமெலாம் விட்டு நீங்கு நலிவுதரு சத்துருக்க
ளுச மாவார். (சங)

சத்துருவா லுளவுச்சா டனமுன் ருகச் சாற்றியவெண் கருமமும்
போய் நாச மாகுஞ், சித்திரரத் தினசிங்கா சனத்தின் மேவுந் தெள்ள
முத மயவடிவாந் தேவி தன்னைப்,பத்தியொடுந் தியானிக்கில் வாக்கின்
மேவும் பைங்கருப் பஞ் சாறமிர்தம் பசுந்தே னின்ன, வோத்திருக்
குங் கவிதைகங்கைப் பிரவா கம்போ லுதித்துலகெங் கும்பரவு மூண்
மை மாதே. (சச)

கடைக்கணரு ளாற்படைப்பன் கமலன் கண்ணன் காப்பனுல
கனைத்துமுருத் திரனந் தத்திற், றுடைப்பனிவள் பெருமையெவ ரு
ரைப்பார் மூன்று தொழிற்குமுதற் காரணிமா மாயா சத்தி,யுடைப்
பொருளீங் கிவளெனவோர் கணப்போ தேனு முள்ளத்திற் பாவனை
செய் திருக்கிற் றீமை, யிடைப்படியார் திரைக்கடல்சூ ழுலகுக் கெ
ல்லா மிவர்தாமே யதிபதியா யிருப்ப ரென்றும். (சரு)

பெருங்கயிலை நடுவினிற்கற் பகநன் னீழற் பிறங்கிரத்ந சிங்கவாச
னத்தின் மீதே,மருங்கின்மனோன் மணியான தேவி தன்னை மனத்தினி
ற்பா விப்பவர்புண் ணியசொ ரூபர், நெருங்கியசெல் வத்தினரு ம
வரோ யிந்த நீணிலத்தி லிருந்திடுமவ் வளவு கால, மருங்கொடும்பாவ
மும்பழமு மிலையந் தத்தி னவள்பதத்தி லுறுவரிதற் கையமின்றால்.()

பரசிவனோ ரிடப்பாக மேனி யாகிப் பரையாகி விளங்கியமுக் கண்
ணி தன்னை, விரசுறுமெய்த் திடபத்தர் விமல மாகு மிக்கபெருங் கயி
லையிற்சென் றடைவ ராங்க, ணாசிருக்குந் தேவியனுக் கையினைப்

பெற்றே யன்பினரவ் வாலயத்தி னுள்ளிற் செல்வார், பிரசமலர்க் குழலாயிங் கிவற்றி னுள்ளிற் பிறங்கிரண்டா மாவரணம் பேசக் கேண். (சஎ)

கோடியோ சனையகல மதனிற் பாதி கூறிடுவர் மதிலுயர்ச்சி யு திற்பீ டத்தி, னுடியதொல் லறத்துருவா மிடப தேவர் நயந்திருப்ப ரவருயர்வைம் பானி லக்க, நீடியவா லளவையுமவ் வளவாம் பீச நீள மைம்பா னுயிரமோ சனைகோ சந்தான், றேடியயோ சனையாமோ ரில க்க நீளுஞ் செப்பிலொவ்வொன் றோரிலக்கங் கோட்டி னீளம். (சஅ)

காலினீ ளமுமிருபா னோர்தி லக்கங் காதுமொவ்வொன் றோரி லக்கங் கழுத்துக் கூறி, னேனுமுயர் வைம்பானு யிரமா மூக்கு மியம் பிடுமத் தொகையகலங் கண்ணுஞ் சொல்லுஞ், சானுறுபல் லொவ் வொன்றி னிடத்தைச் சாற்றிற் சகத்திரமாங் றாமிடப தேவர் மூச் சின், பானுறுகாற் றிற்றனிமா யேரு வாதி பனிவரைகள் கடல்கண்டு நடுங்கு மன்றே. (சகூ)

வெள்ளிவரை யிஃதெனவே மேனி யெங்கும் வெண்மைநிறம் பொங்குமவ ருங்கா ரத்தாற், றள்ளரிய பிரளயகா லத்து வாயுச் சஞ் சலமுற் றொடுங்குமதி பெலமொப் பின்று, மெள்ளருந்தம் வேகத் தான் மனமே கத்தோ டியைவாயு வேகத்தைச் செயிப்பர் சேர்த, றுள்ளிலை நாசிமூக்கி னுதியிற் சேர்த்தி யசையிட்டாங் கிருப்பர்க ணை மனைகர் சூழ. (ருo)

. எழுதரிய நால்வேதம் பாதந் தூய வியற்றரும மேனிமுகம் பனை யே நாதம், பழுதகனு மிருசிருங்கம் விந்துக் கண்கள் பகர்குடிலை வளர்கன்னம் பாவ மண்டங், கெழுதருவா றிரோதையதா மிடப தேவைக் கிளர்தருசெஞ் சினிவுருவந் தியானித் தேத்தி, லொழிதரும்வெம் பவஞ்சத்து ருநாச மாவ ருறுஞ்சகல சித்தியுஞ்சத் தியமீ துண்மை. ()

பத்தர்களா மனைவருக்கு நன்மை செய்தே பாங்கிறெடு மாங் குறையு மிடப தேவைப், புத்தியுற வீழ்ந்திறைஞ்சி யனுக்கை பெற் றுப் புகழ்ந்தன்ப ராலயத்தி னுள்ளிற் செல்வார், முத்தநகை வினமி னாகே ளியற்றி னுள்ளின் மூன்றுமா வரணமும்யோ சனையோர் கோடி, யத்தினிடை மதிலினுயர் பிலக்க மைம்பா னதிலாதி சண் டேச ரமர்வ தொன்றும். (ருஉ)

விளங்கியகே தனங்கள்கொடி யாடை முத்து மேற்கட்டி யிவற் றினலங் கரிக்கப் பட்டுத், துளங்கொளிய பவளத்தூ ணிறுவிச் செய்

மு தூயமா ணிக்கமதில் செய்து மிக்காய்க், களங்கமறு நாலுவழ து
க்க ளோடுங் கதிரிரவி யொருகோடி யுதித்தா லென்ன, வளங்கெழு
மா ளிகைகண்மணி மண்ட பங்கண் மன்னியுறை யிடங்க ளெல்லி
ன்னுஞ் சொல்வாம். (௫௩)

சந்திரகாந் தங்கள்குளிர்ந் தமுது பில்கத் தளவிசைகள் செறித்து
நவ மணித்தூ ணாட்டி, விந்தைசெறி தருசுவரு மவற்றுற் செய்து
மேன்மைபெறு மாணிக்கக் கொடுங்கை சேர்த்து, நந்தலிலா துவித
மா மணியின் பாவை நாடகஞ்சேர் மண்டபங்க ளடுவ ணோங்கி,
யந்தமுறு செம்மணிவே திகைய னேக மதிசயமா விளங்குமவ்வா வர
ணந் தன்னில். (௫௪)

பாவுசிவ காரியங்கள் பரிக்குந் தூய பண்புடையா ரடைந்தவர்
வெம் பவங்க ணீக்கி, வரமுதவும் பெருமையினார் கருணை யோங்கி
வளாரதி சண்டேச ராங்கு மேவித், திரமுறவே யிருப்பர்சிவ கணங்
கள் பல்லோர் செறிவொழு கன்னியர்க ளொக்கை சாத்த, னுாவுசெறி
மட்டவயி ரவா னேக யோகர்சன காதியராங் குறுவ ரின்னும். (௫௫)

ஆரணர்நா ரணர்செறியிந் திர னேக வாயிரகோ டியரளவி
ட்டறிய வொண்ணாத், காரணமா முனிவர்சிவன் கருணை நல்குங்
காலம்பார்த் திமையாநாட் டத்தோ டம்மன், பூரணமாம் பரம்பொ
ருளைத் தியானித் தேத்திப் பொங்குமல மகன்றுவா ரிருப்பார் கொ
ங்கை, வாரணிகே ளித்தனையா யிரங்கள் போன வருகற்பம் பிரளய
மென் றறியா ரன்றோர். (௫௬)

சண்டேச ருலகறியப் பெறுவோர் தாமே தருமத்தி னுயர்ந்த
வர்மெய்த் தவத்தின் மிக்கோர், வண்டேபு மிதழியந்தார் வேணி யன்
பு வழங்குதற்குப் பாத்திரமு மாவ ரார்வங், கொண்டேயு மத்தேவை
க் கும்பிட் டன்பர் கூறரிய வனுக்கைபெற்று லயத்துட் செல்வார்,
பண்டேயு மொழிமடவா யிவற்றி னுள்ளிற் பகர்நாலா மாவரணம்
பகரக் கேணீ. (௫௭)

நந்தீச ருறைவர்சிவ கணங்கட் கெல்லா நாயகமா வக்கணங்கள்
சூழ்ந்து போற்ற, வந்தீசன் றனக்கிரண்டா மீச னென்ன மழுவுழை
பொன் மணிப்பிரம்பு சுரிகை தாங்கித், தந்தீச னுதவுபிறை வேணி
யோங்கத் தந்திபுலி யுரியுடையுந் தரித மாக, விந்தீசன் போன்றுயிர
சன்ன மாகி யெழில்வதனந் தொழுபவர்க்குக் கருணை நல்க. (௫௮)

சுந்தரத்தில் விடயிலங்க வக்கமாலை கவின்பெறமுத் தாரவி
மார்பின் மல்கச், சுந்தரநெற் றியிற்றிரிபுண் டரவெண் ணீறு து
லங்கி சா மளவல்லி யிடப்பான் மேவ, வந்தரத்தர் யோகர்கறு ம
ரிட்டத்த வருமறையர் கமத்துதிப்ப வகைகொண் டேதாஞ், சிந்
தித்தி னுரிபோர்த்த சிவனைச் சிந்தை செய்திருப்பர் நித்தியதத் துவ
பெற் றோங்கி. (௫௯

அரனுறையுஞ் சிவராச தானி தன்னி லாதிசிவ கணத்தோடி யிரு
ப்ப ரந்த, வரனுறுமா வரனைவிரி யிருபத் தைம்பா னுரைத்திடும்யோ
சனையிலக்க மிலக்க மைம்பான், பரவுமுயர் பயன்மாலெல் லோருஞ்
சொல்லும் பரனறுக்கை யின்றியப்பாற் செல்லக் கூடா, விரவுறு
மெய் யன்பரத்தே வறுக்கை பெற்றே விமலனுறை யாலயத்தி னுள்
ளிற் செல்வார். (௬௦

மருமொய்த்த பூங்குழலா யிவற்றி னுள்ளின் மன்னுமைந்தா
மாவரணை மகலங் கூறி, விருபத்தைந் திலக்கம்யோ சனையாந் துங்
மியம்புமதைக் கோடியுத னடையா ளத்தைச், சொருபத்தை யின்ன
படித் தென்றுங் காறுர் ஆரமறையா யிரமுகத்துஞ் சேடன் மாயோ
னிருமித்த சிவனுமையா ணைந்தி தேவர் நிகழ்த்தியவிம் மூவருமே யுந்
வர் நீங்கார். (௬௧)

அம்மையுமை யொடுமீசன் விளையா டற்கே யாடிடமா வமைத்
தசிவ ராச தானி, யும்பர்தொழு மதற்கிணைவே றியம்ப வொண்ணு
வுன்றாத்திடுமவ் வாவரணத் துள்ளி லந்த, நம்பனுறை தருமந்தப் புர
மொன் றுண்டு நாற்கோடி யோசனையா மகலஞ் சூழ, வம்பவிழ்பூ
நந்தனமா வனங்க ளோடை வாவிகிணை றமிர்தநதி யனேகம் வைகும்.

சிந்தித்த துதவுசிந்தா மணிமா ணிக்கத் திண்ணியமால் வரைகள்
பல வவற்றின் மீதே, வந்தித்த பொன்மயமாந் தருக்கண மல்கும்
லகுத்திடிலொவ் வொன்றினுயர் பிலக்கஞ் சொல்லும், பந்தித்த யோ
சனையத் தருக்கள் பூவும் பலங்களுமம்மையந் தளிர்களுமென் னாளும் பல்
லி,யந்தித்த பணைகவடு சாகை போக்கி யமைந்துதழைத் திடுமொருபா
லனேகங் கோடி. (௬௩)

பதுமரா கத்தருவிந் திரநன் னீலப் பைந்தருப்பன் மணித்தரு
வெவ் வேறு நாளு, விதமுறமென் றுகிர்த்தளிர்மா ணிக்கப் பன்னம்
மிணங்குதரு மலரொருபாற் கனிக ளோர்பாற், புதுமைதருந் தருப்

பூவி னிதழின் பேதம் பொங்குநிறத் தருவிரத்னக் கனிகண் மல்கி, யதிகாசந் தருந்தருவாங் கனேக கோடி யான்றமணி மண்டபங்க ளோங்கி விளங்கும். (௬௪)

புகலுறுமத் தருவனத்து ணடுவிற் றூய பொன்மயமா யியக்கிபங் கதலி புன்னை, மிகவுறுசண் பகமகிழ்மா தளைப லாசு மிக்கமா விலுச நறு நரந்தந் தால, மகிலிடமெங் கும்புகழ்நன் றெளி கேர மாலரசு பச்சிலைமல் லிகைநற் சந்தந், தொகவுறுநாண் மலர்ச்சிறுசண் பகம் வா ளோங்கித் தூமலருங் கனிகளுமெந் நாளு நல்கும். (௬௫)

மற்றுமுள பல்வளங்க ளனேக மாங்கண் வைகியீறி சயம்விளைக் கு நாளு பேதத், தூற்றிடுபுள் ளினமிருக மார்ப்பி னெங்கு முறுமலையி னவமணிப்புள் ளொளிரும் பொற்புள், முற்றியபன் னிறச்சிறைப்புள் ளனேக மோர்பான் மொய்த்திடும்வால் செவிகளுமந் நிறமே யாகத், துற்றமிரு கங்களுமந் நிறமே முற்றுந் தோய்ந்தமிரு கங்களுமாங் குறையு மோர்பால். (௬௬)

மாணிக்கக் களிற்றினங்கள் பிளிறு மோர்பான் மயில்குயில்பொற் சாதகங்க ளொலிக்கு மோர்பால், வேணிக்கண் ணின்கயிலை யக்கி ரத்தில் விளங்கிடுமிவ் வனத்தொடுமவ் வனமற் றுங்கே, பூணிக்கு மாசையின்மாப் பிடியைத் தந்தி பொருந்துதல்கண் டவ்விறைவ னிறைவி யோடும், பாணிக்கு மவ்வுருவாய்க் கூடி வேழப் பணைக்கைமுக விநாயகனை நல்கி னனே. (௬௭)

கூறியநந் தனவனத்தின் பெருமை யாரே கூறுவரிம் மரக்கோட்டி னுனிக்கொம் பிற்கே, மாறகலிந் திரனுடைநந் தனங்குபேரன் மருவுசயித் திரவனமு மொவ்வா தங்ஙன், வீறியவோ டைக்குயர்பா லாழி யொவ்வா மேனிலமே டைக்கொவ்வா மேருத் தீவந், தேறியபின் னேமற்றை வனத்திற் சியுஞ் செப்புமிதிற் சிறுமுயற்குட் டிகளுக் கொவ்வா. (௬௮)

ஈசனுக்கு நிகர்தேவுந் தொகுத்துச் சொன்ன விருங்கயிலைக் கிணையாயு மிலையீ துண்மை, பேசுறுமவ் வனத்தினடு வயிர்த வோடை பிறங்குமவ்வோ டைக்கரையிற் பொன்னி னீபந், தேசுறுமாக் கதலிவளர் நாளி கேரஞ் செழுங்கமுகு சூழ்தரவந் நடுவண் வைகும், வீசுபெரும் பரஞ்சோதி வடிவ மாகி மிக்குயருஞ் சபைமூன்று விளம்புங் காலை.

ஞானவடி வாயிருக்குஞ் சபையைச் சூழு கலந்தருமே ழாவர
ணம் வாயி லொன்கு, மானமுறு சிவகணத்தர் வசிகர் காப்பர் மன்னி
யபூ ருத்திரசி தசபை நீண்ட, பானல்விழி யாய்வடபா லம்பொன்
மன்றம் பரவுமிரத் தினசபையீ சானத் தாகுந், தானமது மிளிர்கரு
டப் பச்சை யாதி தாவின்மணி யால்விளங்கிச் சோதி யாகி. (௭௰)

முத்தியளித் திடுபரமா விசால மாகி முயங்குமிரத் தினசபை
யின் முதல்வி காணச், சித்திதரு சிங்கார நிருத்தஞ் செய்யுந் தெளி
வுடையோர் கண்டுதொழுஞ் செம்பொன் மன்றி, லத்தன்மகா சதா
சிவனன் னடனுங் காட்டு மாதியிர சிதப்பொதுவி லதிர வீசி, நித்திய
மாஞ் சதாசிவநாட் டியத்தைக் கூட்டு நிகழ்சபையின் பெருமையெ
ம்மா னிகழ்த்த லாமே. (௭௧)

புதியநறு மலரின்மண மெங்கும் வீசப் பூமலர்த்தா தளைந்துகு
ளிர் வந்து வீசத், துதிசெயுமா மஞ்ஞைகுயில் செவியி னேறப்பத் தும்
புருநா ரதர்வீணை கானம் பண்ணப், பதியெனுமா பரனடிக்குஞ் ச
பைகண் மூன்றும் பண்புறவே விளங்குமவ ணந்தி தேவ, ரதிகவிற
ற் சிவகணங்கள் சனகர் யோக ரரியயனிந் திரன்முதலோ ரருச்சித்
தேத்த. (௭௨)

நவ்விவிழி யாயுயர மிலக்க மைம்பா னவின்றிடும்யோ சனைபதி
ஞன் கிலக்க மாகிச், செவ்விபெறு திருமேனி யகன்று கோடி. செங்
கதிர்ப்பே ரொளியம்பொன் விமான மீதி, லவ்வியந்தீர்த் துறையுமக
கா சதாசி வர்தா ளுதிவெளி விளைந்தருளே பழுத்துத் தானே, யெவ்
வமின்மே லெவற்றிற்கு மேல தாகி யிருங்களியே விளைந்தெவர்க்குங்
காணொ ணாதாய். (௭௩)

அளிவிளையு மெய்யன்பர்க் கருளின் றூய வானந்த வொளிவிளங்
கு மூகங்க ளையைந், தெளிதெனவெண் ணருஞ்சூல முதல தாங்கு மி
லையி ிருக் கரங்களெம்பான் கண்கண் மூன்றுந், தெளிதரப்பெற் று
ளதுயிறை முடிக ளோங்கச் செம்மணிப்பூ ணணிந்திரவி கோடி
யென்ன, மிளிருநவ மணியரியா சனத்தின் மீது வேதநெடு மாலருச்
சித் திடவே மேவும். (௭௪)

தருமசரு மாவிவற்றைப் புகலக் கேட்குந் தையல்பூகல் வாடவத்
தோ யயன்மால் யோக, ரருமறையா லளந்தறிதற் கரிதா யோங்கு
மாதிசபை யினிற்புரியு நிருத்தன் றன்னை, திருமலையா மளவல்லி நீங்

கலாக நிகழ்த்துதிமற் றையர்தெரிசித் தவரின் றேனொண், றொருமை
பெற வினவுதல்கேட் டினாசெய் வாமென் றுரைசெய்வா னம்முனிவ
ன் மனைவி கேட்ப. (௭௫)

மாசதா சிவநடன மம்மை காண மகிழ்வினொடும் புரிந்தருளி ய
நேகங் காலங், தேசதா மெய்வுறைய மண்ண லங்காட் செங்கண்மா
ன் முதலியர்நன் னடனங் காண்பா, ராசைதாம் பெரிதாகி யிந்நாள்
காறு மருந்தவஞ்செய் குனர்தெரிசித் திடுவிப் போமென், றோசை
தாழ் திருவுளத்தி னுன்ன வன்றோ ருற்றனர்ஞா னக்கணவர்க் குதவி
னானல். (௭௬)

வேறு.

ஆங்கவர் காணப் புரிந்திருத தத்திற் கையவா னுசுரா னகிலத்,
தோங்கிய வதரு வணமன்ற வீதியா லொலிமிகுங் குடமுழா வதிர்ப்
பப், பாங்கொடு நெடுமான் மத்தள முழக்கப் பங்கயன் றாளமொத் தி
சைப்ப, வாங்கரும் பானு கம்பனு யிரஞ்செவ் வாயினாற் சங்கெடுத்
தொலிப்ப. (௭௭)

மூவிரு பாதன் சட்சிர சேனன் மொழிதரு சுணேசரிங் கிவர்க
டாவரு மொலிசேர் தமருகம் விதியின் சதியின்வா சிப்பவர்க் காக்கன்
மேவரும் பேரி வாத்தியங் கொட்ட வேணுகம் பனரிசை மிழற்ற
வேவரும் பரவு மங்கிலர் குய்போ தரரிருங் கொம்பெடுத் தூத.(௭௮)

நந்திமா தேவர் பொற்பிரம் பெடுத்து நாட்டியச் சபையினோர்ப்
படக்கி,வந்திடு மிமையோர் குழுவினைத் தத்தம் வரிசையின் முறைமு
றை நிறுவி, யிந்நுவே ணியநூர் திருமுன்ன ருலாவி யிருமருங் கினு
மெதிர் நடந்து, பந்தமாம் வினைதீர் சித்திரை யெடுத்துப் பகர்தரு
ங் கட்டியம் படிக்க. (௭௯)

மற்றைய கணங்க ளிற்சிலர் வீணை வாசிப்ப வவர்களிற் சில
வர்,சுற்றிடு மற்றைத் தமருக முதல வாத்தியத் தழனியார்ப் பெடுப்
பக், கற்றையங் கூந்த லரம்பையர் கமலக் காலிற்கிங் கிணிசிலம் ப
ணிந்தே, யுற்றவே ழிசையின் கானவா ரமுத மொண்குழைச் செவி
யின்னின் வார்க்க. (௮௦)

சாமரங் குடைபா வாடைநீள் விருது கொடிசில தையல ரெடு
ப்பத்,தோமறு சந்தக் குழம்புகொண் டிமையோர் தொழச்சில தோ
கைய.ரிறைப்பக், காமரு தூப தீபத்தட் டேந்திக் கன்னியர் சிலர்ட்

ணி மேற, மாமறை விதியான் மங்கலம் பாடிப் பலாண்டுமொ ழிற்சி
லர் கூற. (அக)

மின்சயையே செயையாம் பாங்கிய ரோடும் வேழமா முகன்குக
னென்னு, மிசைபெறு மைந்த ரிருவர்க ளோடு மெய்ம்பெரு மாட்டி
யுஞ் மகிழ்ந்து, நகைதரு கயற்கட் பார்வையி னுலு நலந்தரு புன்ன
கை யாலும், திசையெலாம் பரவு திருநடம் விளங்கச் செய்துகெம் பீ
ரமே செலுத்த. (அஉ)

தெரிதரு பதினே ருருத்திரர் மற்றுஞ் செப்பிய வுருத்திர கண
ங்க, ளரியயன் மகவான் முதற்றிசைப் பால ரவுரவர் கணங்கள்விண்
ணோர்கள், விரிதவ முனிவர் சித்தர்க ளியக்கர் விஞ்சையர் சாரண ருர
கர், பரிவினே டிந்து ரூரியர் வணங்கிப் பரமவா னந்தத்தின் மூழ்க. ()

மற்றுள கிரக முடுக்களென் வசுக்கண் மருத்துவ ரிராசிபுட் கலமா
கற்றுளி முகில்க ளேழிரு புவன ஙளிகட லேழுமா நதிகள் [வரைகண்
பொற்றுண ரோடை குளங்கிணை றுவி புகலுமெண் கயங்கண்மால்
முற்றுறு மண்டா லானைத்தத் தேனே முகந்துகண் வழியுளந் தேக்க. ()

ஐங்கரன் கணங்க ளறுமுகன் கணங்க ளாதிசண் டேசன்மா நந்தி
யெங்கணும் புகழ்தூந் திலர்மகா வாகு வுற்பனர் கிரீசருன் மத்தர்
தங்கிய பிரோங்க ருற்சிலர் கணத்துட் சாற்றுருண் டிகர்பணி கிர்க
துங்கவைங் கண்ண ரெழுகணர் பூத பசாசுவே தாளங்க டுதிப்ப. ()

வேதநான் காறு சாத்திரம் வேத சிரசொடா கமங்களு லேழு
கோதிலா வுபவி டதங்கடோத் திரஞ்சூத் திரம்வியாக் கியானங்க
மிருதி, யாதியீ ரொன்பான் புராணகா வியம்பர வந்தர டகமலங்
கார, மீதெலாம் பரம வடிவெடுத் திறைஞ்சி யிறைநடந் தொழுது
வாழ்த் தெடுப்ப. (அசு)

அத்திரி விண்டு புலத்தியர் புலை ரங்கிராக் கர்க்கர்பார்க் கவர்மா
கித்திய வற்சர் குற்சர்கா லவர்நன் னிலைபெறு மிருகண்டு விசுவா [ம
மித்திரர் சுகர்மார்க் கண்டர்மத் தியந்தர் வியாசர்மாத் தேந்தினி வா
ரித்தனே பிரம விருடியர் கணங்க ளிறைஞ்சினர் குணைலயிட் டேத்த.

கண்ணுவர் சங்கர் தெக்கர்சம் வர்த்தர் காத்தியா யனர்தொழு
தேத்தப், பண்ணிசை வீணை நாரதர் முதலாந் தேவமா விருடியர் பர
வத், தண்ணளிச் சனகா தியசிவ யோகர் தனித்தனி கண்டுதோத் திர
ஞ்செய், துண்மகிழ் சிறந்து நடனவா னந்தத் தேன்முகந் துண்டுக
ண் களிக்க. (அஎ)

பம்பிய வேத துந்துபி முழங்கப் பங்கயன் செய்தொழின் மடங்க, வம்பிகை தாளுந் தாளமொத் திசைத்தே யரகர நடேசவென் றேத்த, வும்பர்நா யகர்பொன் வேணியின் சோதி யோங்கிய திங்களும் விளங்கி, வம்பவிழ் குழலா யுலகவான் மாக்கள் வல்வினை மல்லிரு ளகற்ற. (௮௯)

சிற்சபை தன்னிற் சுற்றியே நடிக்குந் திகம்பரன் குஞ்சித பதத்திற், பொற்சிலம் போசை கேட்டுளோர் புளகம் பொலிசிவ மோகத்தி லழுந்தச், சற்சிதா னந்தத் தாண்டவ ரசத்தைத் தனிவிடை ஞானநேத் திரத்தான், முற்செறு மன்பிற் பருகியுள் ளுருகி முடிவிலற் புதத்தொடு மிருப்ப. (௯0)

இத்திரு நடன வர்ணத்தேனுண் டியாவருந் திருத்தியை யடைந்தார், மொய்த்தெழு வான்பூ மழையம்பொன் மழைநன் முழுநவ மணிமழை பொழிந்து, வத்தரு னந்தத் தாண்டவ ராய னனைவர்க்குங் கருணைசெய் தருளி, நித்தமா முத்தி யளித்திட வன்னோர் நிறைபரஞ் சோதியுட் புகுவார். (௯௧)

அனேகமால் பிரம ரனேகமிந் திரரு மனேகமாம் விண்ணவர் முனிவ, ரனேகமா யோகர் சித்தரு மனேக மற்றும்விண் ணவர்குழா மனேக, மனேகமெய் யன்ப ரனேகமா தவங்கள் செய்தலா லனேகநீத் தேக, மனேகமும் பொருளி னிரண்டற வொன்றி யாதிசா யுச்சிய முடைந்தார். (௯௨)

மானினேர் விழியாய் தொழுதவெல் லோரும் வழுத்தரு முத்தியை யடைந்தார், மோனமா யிருந்து நீயுமந் நடன மூர்த்தியைத் தியானஞ்செய் திடுவா, யினமார் பவந்தீர் முத்தியெய் திடுமென் றியம்பயான் றியானிக்கும் பொருட்டான், ஞானமார் சபையி னடனமூர்த் தத்தின் பிரமாண நவிலெனக் கென்றாள். (௯௩)

என்றவள் கூறத் தருமசன் மாவங் கியம்புவா னீதறி குய்யந், துன்றுபூங் குழலாய் கற்பின்மேம் படுநீ வினவியது சொல்லுதல் வழக்கா, லொன்றுமன் பினிற்கேண் மாசதா சிவந்தா னுறைப்பற நடித்திடு மம்பொன், மன்றமாம் விமான மொன்றரைக் கோடி யோசனை யுயர்ந்து மாபரல். (௯௪)

அகலமு முளைக்கு மத்தொகை வாயி லுயரமு மிலக்கமோ ரறுபான், புகலும்யோ சனையச் சபையினு ளிலங்கும் பொற்பொது மத

லமா றிலக்கம், விலைமொன் றின்றி யுயர்புமத் தொகையோ மிரத்ந
சிங் காசன மீதிற், சகளநிட் களமா சதாசிவ நடனம் புரிதருக் கையை
லக்கண் டிவப்ப. (கூ௫)

செங்கதிர் கோடி யுதித்தென விளங்கித் திக்கண்ணர் காணுதற்
கரிதாய்ப், பங்கமின் ஞானக் கண்ணினர் காண்டற் கெளியவாந் தனி
ப்பரஞ் சோதி, யெங்குமா நிறைய நிட்களஞ் சகளீ கரித்துநாட்
டியம்புரிந் திடுமாற், றுங்கமா நடேச னுயரமு மைம்பா னிலக்கம்
யோ சனையெனச் சொல்வார். (கூ௬)

பாதமோ ரிரண்டு மிருபத்தைந் திலக்கம் யோசனை நீளங்காற் ப
டங்க, ளோதுமைந் திலக்க நீளமா மளாயி னகலமு மத்தொகை யு
ளைக்குஞ், சோதிசேர் திருமே னியின்வழு வகலந் தோன்றிடு மே
ழிரண் டிலக்க, நீதிசேர் காள கந்தர மிலக்க மிரண்டதாம் யோசனை
நீளம். (கூ௭)

அருள்பொழி முகத்தி னீளமு மிலக்க மிரண்டியோ சனையணி
யுடக்கின், மருளறு முயர்பு மயுதமா மலர்க்கை நீளமு மிருபஃதி லக்
கம், தெருளுறு வுளைக்கின் விரல்களி னீள மிருபதி னாயிரந் தெளியும்,
பொருளுடைப் புருநந் திருச்செவி திருக்கண் ணீளமும் புகலுமத்
தொகையே. (கூ௮)

இத்திற நடேசன் கேசாதி பாத பரியந்த மியல்பெற விளங்கு,
முத்தம மூர்த்திக் கியைந்திட விமலை யுருவமும் பொலிதர விருக்கு, நி
த்தமா மிடப தேவர்நந் தீசர் நிகழ்சிவ கணத்தவ ருருவு, மத்தக விள
ங்கும் புந்தியா லளந்து காணுதி யறைகுவ மின்னும். (கூ௯)

இரசித சபையாம் விமானமு மைம்பா னிலக்கமோ சனையுயர்
பகலம், பரவுறு மதிசெங் கதிரொரு கோடி யுதித்தெனப் பல்லொளி
பரப்புந், திரமுற வுளைக்கு நிட்களந் தானே சகளமாய்த் திருக்கர மொ
ருபான், வரமுறத் தோன்றத் திருநடம் புரியும் வனிதைநீ யதுமனக்
கோடி. (க00)

வான்கதிர் கோடி யுதித்தென வொளிரு மிரத்தின சபைமணி வி
மானந், தேன்கமழ் குழலா யகலமு முயர்புஞ் செப்புமவ் விலக்கமோ
ரைம்பா, னொன்குறின் புயத்தோ டிரைத்தநிட் களமே சிங்கார நடஞ்
செயு முருவா யூன்கெழு பவந்தீர்த் தருளுமிப் பொருளோச் சபையொ
டு மூன்றித்திற் கோடி. (க0க)

ஓங்குமப் பொருள்சேர் கொடுமுடி விரிவு மாவா ணங்களு மு ணைத்தேம், டாங்குறுஞ் சத்துக் கோடியர் மாட மாளிகை யவற்றை ப்பண் புறச்சூழ், ரீங்கரும் பரிதி காந்தமாம் பன்னோர் முடிகித முரு த்திர ரிருப்பர், தாங்குமத் தொகைய ரவற்றைச்சூழ் நூற்றெட் டணி முடி சந்திர காந்தம். (௧௦௨)

அவற்றினைம் பத்தோர் சத்திகள் பொருனா லுணர்பவ ரானு ருப் பெற்றோர், கவற்சிதீர் நவசத் திகளினை யோர்கள் கருத்துறச் சதாசிவப் பொருளை, யுவப்பொடும் பரவி யுறைகுவ ருவற்றைச் சூழ் முடி யாயிரந் தோன்று, நிவப்பழ னிறந்தாண் டவஞ்சந்த கோடி மந் திர முருப்பெற்று நிலவும். (௧௦௩)

பகர்தரு மவற்றைச் சூழுமோர் பதின யிரத்தொரு முடியவை படிக, நிகரறு தந்தி முகன்குகன் சாத்த னிகழ்த்திய வினைசெயு மூவர், மகரவா ரிதிசூழ் புவிபுகழ் காளர் வயிரவ னந்திபிங் கிருடி, சிகரநோர் கணங்க டிறற்சிவ குமாரர் தேனுமால் விடைபடைத் துர்க்கை. ( )

சத்திக ளினையோர் தவமுயற் சியினு லினிதிருந் தப்பதஞ் சரிப்பா ர், மொய்த்திடு மலைசூழ்ந் தொன்றுபெற் றிடுமோர் சிலிக்கமா முடிம ணி மயத்த, வைத்தமேற் றிசையில் வைகுவர் கோடி நாரணர் ம லத்தினீங் கிடுவார், சித்தசுத் தியினுற் றனிமுத லான சிற்பர மற் பொடும் வணங்கி. (௧௦௫)

வடதிசைச் சிகரத் தளவிலாப் பிரமர் வைகுவர் முத்தியை விரும் பி, மிடையுமிந் திரர்க ளனேகர்கீட் டிசையின் விமலனைத் தொழு துட னமைவார், படர்தரு தென்பா னெடுமுடிச் சிகரத் துறைகுவர் பரந்தெழு கணங்க, ளிடரறு தவத்தோ ரளவிலர் கருணை யெம்பிரா ன் றன்பத மிறைஞ்சி. (௧௦௬)

பத்திலக் கத்தொன் றவைமருங் குடுத்துப் பைம்பொனின் விள ம்புமச் சிகரம், புத்திகூர்ந் தாங்க ளுருத்திர கணங்கள் பூதசே னுதி பர் சித்தர், வித்தியா தரர்மா கருடர்கந் திருவர் மேவுவர் சூலமே முதலா, மொய்த்திடுங் கருவி சுரபிநன் மணிநீண் முழுநிதி மொய்ம் மலர்த் தருக்கள். (௧௦௭)

ஏலவார் குழனற் கணிகைய ரீட்ட மிறையுருத் தரித்தவ ணிருப் பார், சாலுமித் தகைய கொடுமுடிக் கீழாய்த் தாவற நிலவினங் கிரு ச்கும், பாலுறழ் வெள்ளிக் கொடுமுடி யவற்றின் பகர்தொகை கோடி

யொ டொன்று, மேலுற வவற்றிற் சரிப்பன யாவும் விதம்பெற வர ன்முறை விரிப்பாம். (௧0௮)

பிரணவத் துருவாய் விளங்கும்வெண் ணிறத்திற் பிறங்கிரண் டாயிரம் கேழு, மூவாறுறு வேதப் பரிகளான் முகற்கு முழுதளந் தறிந்திட வொண்ணா, வரனொடு முறைவ தனேகமோர் தாள மூன்றுடைத் தாளின வான்ற, காணுறு பொற்றைத் தாள்பல வுடைய தாளிலாக் கணங்கணக் கிறந்த. (௧0௯)

ஒருமுகத் தனவோ ரிருமுகத் தனமூன் றுடைமுகத் தனமுக மில்லாத, திருகுமேனுஞ் சிற்றக் கண்களுஞ் செறிந்த கைகளு மின்னண ஞ் சிறந்த, மருவுவெண் பிறைபோ லெயிற்றன பிலம்போல் வாயின செம்மயி ரினவாய்ப், பொருவருங் கணங்க ளளவில வின்னும் புகலுவங் கணங்களின் பொலிவு. (௧௧0)

மானிடர் பறவை மதகரி முகத்த வரிப்புலி முகத்தவெவ் வழல் வாய்க்,கானமர் நரிவெங் கரடிமா முகத்த கடியபல் விலங்குமா முகத்த, வானபல் பூத மெண்ணில வமல னாணையி னியங்கியாங் கமர்வ, தூநிற விமானந் தேர்பல பொருந்துந் தொகுத்தல்வின் ணவர்க்குமற் றரிதால். (௧௧௧)

அப்பெருங் கயிலை மருங்குமீத் துயர்ந்த வணிகிளர் கற்பகப் பொதும்பர், வைப்புறு மண்ட மாதியந் தமுஞ்சூழ் மருங்கும்வீசியபூணைத் தருக்க, ளொப்பற விளங்கு மாங்கவன் புதுநீ ரோங்கிய நவநதி நண்ணு, முப்பரம் பொருளின் முதலுரு வேண்டி முழுத்தவர் தவம்புரிந் திருப்பார். (௧௧௨)

நீடுமித் தன்மை யாயமா கயிலை நெடுவரைக் கொடுமுடி யிலக்கங், கோடியோர் பதினொ ரிலக்கத்தோர் பதினொ ராயிரத் தொருநூறுங் குணித்து, நாடிய விருபத் தைந்துமென் றுரைப்பர் நவிலுமிக் கயிலையின் றுழ்வின், மாடுசூழ் தரும்பொன் னிலமதிற் கணத்தோ ருத்திர ராயிரர் வதிவார். (௧௧௩)

ஆங்கவ ருறையுந் தமனியத் தளத்தி னளவையோர் கோடியோசனையா,நீங்கரி தாமத் தமனியத் தளத்தை நிலைபெறச் சூழ்ந்துகொண் டிருக்கும், பூங்கதி ரொளியாற் கதிரொளி யகற்றும் பொற்பொடு மிளிர்தர விளங்கித்,,தாங்கரும் வெள்ளி மதிலுடுத் திருக்குந் தமனிய விருத்தியொன் றுளதால். ௧௧௪)

துன்னிய கோடி யோசனை யகன்று தொகுத்திடுங் கோடியிற் கோடி, மன்னியே யூடு போகிமேக் குயர்ந்து வளர்ந்தன வாறுற வோங்கி,மின்னுகோ புரங்க ளெட்டுள வவற்றின் வாயிலின் வேலியே காப்போ, ரின்னரென் றவரைப் புகலுதல் செய்வாங் கேட்டியென் றியம்புவான் முனிவன். (கக௫)

ஐங்கரன் றிகழ்பூ ருவதிசை வீர பத்திர னழற்றிசை தென்பாற், றுங்கமா நந்தி வயிரவன் றென்மேற் றுலங்கிய மூலமேற் றிசையிற், றங்குவேற் குமரன் வாயுவின் றிசையின் வயிரவி சாற்றிய வடக்கி, னொங்குமா காளர் சாத்தனீ சானத் துறைந்துதங் கணத்தொடும் புரப்பார். (கக௬)

இயம்பிய விவற்றை வளைந்துசூ ழாண மொன்றுள வினமணிக் குலங்கள், வயங்கொளி விளங்கி வானுற நிவந்த வன்மனத் தாக்கர்வ ல் லசுரர்,முயங்கியே சேறற் கரியதாய்ப் பிரள யஞ்செலற் கருமுழுக் காவல், வியன்பெருங் கயிலை நிலையிது புகன்றேம் விமலனோ டிது மணக் கோடி. (ககஎ)

வளப்பெருங் கயிலை வண்மையு மூன்று மன்றமூ கடேசன்மா வடிவு,மளப்பரி தேவர்க்கு மவனரு ளதனா லறிந்தவா றியம்பின கடேசன், னிளப்பரும் பஞ்ச சத்திகட் கருளிச் சுவேச்சையா யுறங்கின ருருவி, னுளப்படு மூரோம மொன்றிற்பல் கோடி யண்டங்க டோன்றி யே யொடுங்கும். (ககஅ)

மலரயன் றிருமா லிந்திரன் முதலாம் வானவ ரவனரு ளடைந்து,நிலைபெறுஞ் செல்வ மெய்தின ரவனை நிகழ்த்துமால் கண்மலர் சாத்திப்,பலர்புகழ் சுதரி சனப்பெயர் படைத்த சக்கரம் பெற்றன னெவனோ, லிலைவறு மவனை யளந்தவன் வடிவம் வருணிப்ப தியாவர்க்கு முடியா. (ககக)

உவன்மதுப் புகித்த வேடன்பூ சித்தே யுயர்தரு முத்தியை யடைந்தா, னுனவற் குதவு வானெவ னவனை யடைவிற்றன் சரிதத்தையக் கேட்போர், வானமும் பரவு சிவகதி யடைவார் வந்தருள் வானெவ னவனைப், பான்மைசே ரண்டப் புவிரோ மனைப்பல் விதத்தினும் வருணித்து முடியா. (க௨0)

இத்தக விளங்கு கடேசனைக் கயிலை யுச்சியி லிருப்பதாய் நினைப்போர்,பத்தியா யீசன் சந்நிதி யிருந்து பரவுமிக் கதையடித் திடுவோ

வித்தகக் கதைகேட் பவர்பவ மகன்று விமலமா கயிலையை யடைந்
தித்திய போகந் துய்த்திரண் டற்ற சேயமா முத்தியை யடைவார்.

என்றுமா தவத்துத் தருமகன் மாவங் கியம்பலும் வினவிரை கே
ளா, நன்றுநன் றென்று கசிந்துள முருகித் தியானித்து நன்மையை
யடைந்தாள், வென்றிமா தவத்தி ரத்தக முனிவன் விளம்பிய வாறும
க் குரைத்தேந், தொன்றுமா கயிலைச் சபையொரு மூன்றுஞ் சூக்கும
மாக்கியே சொக்கன். (௧௨௨)

நடனவிக் கிரக மாகிய தனையு நவிலருஞ் சூக்கும மாக்கி, யடை
வினைப் பொதுவி னுவந்துதா பித்தே யமுதலிங் கத்தினி னுறைன், கட
லுல கேத்து மதுரைபூ லோக சிவலோக மாகயி லாயந், திடமுற
வுரைத்தேஞ் சத்திய மென்றே செப்பினன் மலையமா முனிவன். ()

ஆறுவது மகாகைலமான்மியமுரைத்தவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௩௭.

---

ஏழாவது

## தேவியறம்வளர்த்தவத்தியாயம்.

வினவு மாதவர் மீளவும் வினவுவார் மெய்த்தமிழ் முனித்தேவே
நனிவி ரும்புவே தாகம முதலிய விண்ணவர் கடங்கரணப்
புனித சுந்தரன் புரிதிருத் தத்தைநீ புகலக்கேட் டெம்வாழ்ந்தே
மினிய மாதவப் பயன்சிவ பத்தியு மெய்தினோங் கதிபெற்றேம். (௧)

அன்ன தாயினு மின்னுமொன் றுரைக்குது மாலவாய்ப் பதிதன்னின்
முன்ன மம்பிகை யறம்வளர்த் தனளென மொழிந்தனை யதுகேட்டே
கன்னி•பாகன்ற னருளினு லங்கயற் கண்ணிநா யகியங்ஙாண் [ங்
மன்னு முப்பத்தி ரண்டறம் வளர்த்ததை வகுத்துரை விரித்தென்றார்.

இந்த வாசகங் கேட்டவு மகத்திய னியம்புவான் முனிவீர்காள்
புந்தி கூர்தரக் கேளுமின் புகலுவாம் பூருவ கதைகேட்போர்
முந்தை வல்வினை நீங்கியே சிவகதி முற்றுவ ரிஃதுண்மை
சிந்தை•செய்குதி ரென்றவ ருளங்கொளத் தெருளுற வுரைசெய்வான்.

வேறு.

ஆதி நாளினிற் சோமசுந் தரியர்முதற் கடவுட்
சோதி தோற்றமெற் குரையெனச் சுந்தரி வினவ
நாத னங்கணிற் றோன்றியே நான்வரி லொடுங்கும்
பாதி மாதுகே ளெனவிளை யாடலைப் பயில்வான். (௪)

வான ளாவிய கயிலையி லரனைமா துமையா
டேன ளாவிய மலர்க்கையாற் றிருவிழி புதைத்தா
ளான காலையி லிருட்பிழம் புருக்கியம் புவியு
மேனை யாவையும் பூசின வாமென விருண்ட. (௫)

நீல மாமலை போற்கறுத் தனநெடு வரைகண்
ஞால மேம்புகழ் யமுனைபோற் கறுத்தன நதிகள்
சீல மாதவ முனிவர்மே தகுபுவித் தேவ
ரோலுந் தத்தமா தவமுநன் னியமமு மிழந்தார். (௬)

கண்பு தைத்தகை திறக்குமுன் கணமலர்க் குலகிற்
கெண்பு தைத்திடும் யுகங்களு மெண்ணில சென்ற
பண்ப றுத்திடு மன்னவ ணிலைமையைப் பாராத்
தெண்க டற்கடு மிடற்றினன் றிருவுளங் கறுத்தான். (௭)

கறுத்த கண்டனுட் கருப்பினைக் கவுரிகண் டறிந்தாள்
சிறுத்த குற்றநீ பொறுத்தியான் செய்தது பிழையா
லுறுத்து மிப்பவந் தீர்வழி யுரையெனப் பணிந்தாள்
மறுத்து ரைத்திலன் கருணைசெய் தருளியே வள்ளல். (௮)

எத்த லத்தினுந் தீர்வுறு திப்பவஞ் சிவன்
முத்தி மாநக ரடைந்துமுப் பானிரண் டறமும்
பத்தி கூர்ந்துநீ புரிந்தெமை வழிபடிற் பாறும்
புத்தி யீதென விடைகொடுத் தருளலும் பூவை. (௯)

என்ன மாதவஞ் செய்தன னியற்றமிழ் மதுரை
தன்னி னல்லறம் வளர்ப்பதற் கெனமனந் தளிர்த்தா
ளன்ன செய்குவ லென்றர னடியிணை யிறைஞ்சிப்
பொன்னின் மானமீப் பொலிந்தன ளத்தலம் புகுவாள். (௧௦)

வேறு.

விசையை யேசயை சண்டி மெல்லிய
லசைவின் மங்கலை யருகு சூழ்வரத்
திசைவி ளங்கநற் றீர்த்த கன்னிய
ரிசையுந் தேவமா முனிவ ரெய்தவே. (௧௧)

பணங்கொள் பூதலஞ் சிறப்பப் பல்சிவ
கணங்க டேவருந் துயிக வித்திடக்
குணங்கொ ளன்பர்சென் றெதிர்ந்து கும்பிட்
மணங்கொ டென்றிசை வழிக்கொண் டேகினள். (கஉ)

கங்கை சூழ்தரு காசி யேமுத
லங்கு மற்றுள தலங்க ளியாவையும்
பொங்கு மாசையாற் றொழுது பூம்பொழின்
மங்கு றேய்பருப் பதம்வ ணங்கினள். (கங)

முத்தி நல்குவிபான் முகலி சூழ்ந்தகா
ளத்தி யானதென் கயிலை யீசனைப்
பத்தி யாற்பணிந் தேத்திப் பாங்கர்சூழ்
மெய்த்த லங்களும் விரைந்து போற்றினள். (கச)

கம்பை பாலிசூழ் காஞ்சி யானவே
கம்ப மேவுமே கம்பர் தாள்களை
யம்பை முன்புபோற் போற்றி யாங்கெழா
வம்பெய் வேணியா ரருள்பெற் றேகுவாள். (கரு)

பொன்னி நாட்டுள தலங்கள் போற்றிச்சென்
றென்னை யாளுடை யிறைவி யாலவாய்
மன்னு மாசையால் வழிக்கொண் டேகியே
கன்னி நாட்டினிற் கடிது செல்கின்றாள். (கசா)

சதிர்த வழ்ந்தெழுங் கதம்ப கானத்தை
யெதிர்ப ணிந்துசென் றேத்தி யன்பினன்
முதிர்த வந்தரு முத்தி மாநகர்
மதுரை யெய்தினள் மதுர வாய்மையாள். (கஎ)

வேறு.

பாலின் மென்மொழி விமானகின் றிழிந்துதன் பரிசனர் புடைசூழச்
சூல தீர்த்தப்பொற் றாமரை யொடுசிவ தீர்த்தமுந் துளைந்தாடி
ஞால வஞ்செழுத் தோதிநீ றணிந்துதம் முதல்வனு றுறைகோயில்
காலி னால்வலஞ் செய்திலிங் கத்தினைக் கண்டுகண் களிகூர்ந்தாள். ()

அதித்த ருச்சனை செய்துதாழ்ந் தெழுந்துதம் பரிசனர் சூழ்ந்தே
த்த,வுதித்தெ ழுந்துமெய் யன்பினு லனுக்கைபெற் றுவந்துதா னுறை
கோயிற், கதித்தி றம்பெறு சந்நிதி யனுங்கயங் கயற்கண்ணு யிதன்னை
ப், பதித்த மெய்யன்பிற் பணிந்தனள் விசயையைப் பார்த்திது பகர்
கின்றாள். (கக)

ஆதி மூலமாம் பரையிவள் கலையிலா யிரத்தினி லொருகூறு
சோதி சேர்கயி லையிலிருந் தனனருட் சோதியு மிதுபோது
நீதி மாதுநீ காணெனத் தர்ச்சனி சுட்டிநே ரிழைகாட்டக்
காத லான்மற்றைப் பாங்கியர்தாமுங்கண்டருச்சித்துக்களிகூர்ந்தார்

சோதி நாயகி மூவிரு சத்திக்கு மேலதாய்த் தொழினல்கு
மாதி நாயகி பரம்பரை நாயகி யாலவாய்ப் பதிமேவு
நீதி நாயகி யங்கயற் கண்ணியா நிமலநா யகிமுன்ன
ரோது மாதவஞ் செய்தன னறஞ்செயற் கெனவிச யையைநோக்கி.()

உறையு மில்லிடம் பொருட்டுணை புயர்மகப் பெறுமவர்க் குவந்தித, னிறைய வேபடிப் பவர்க்குரை நற்பொரு ணிகழ்த்துவிப் பவர்க்காத்தல், குறைவ றுஞ்சிவ நேசர்வாழ் திருமடங் குலவுசத் திரமுனறா, லறையும் வேற்றறம் புதுக்குதல் சிறையுள வனைவர்க்குந் தீர்ப்பண்டம். (௨௨)

சமைய மாறுமே வரைந்திடா துதவுமூண் சாற்றிய பேரைய
மமைவு றுதிறு மிறுதிசே ருயிரினை மீட்டலா டியாக்காத்தல்
சுமையு றும்மலர்க் காக்குள நீர்ப்பந்தர் தூய்மணங் கமழெண்ணெய
கமைத ரும்விலங் குணவுகா தப்பிணங் கதிதெரிந் தீடேற்றல். (௨௩)

மருத்து வச்செயல் கணிகையர் போகநன் மணங்கொளுந் தமதான
முருத்தி கூர்தர வானிலந் திருமுறை கண்டிகை யணிநீறு
திருத்து பூசனை வத்திர தானமே செப்பிய கடன்றீர்த்தல்
பொருத்த முற்றிடு குருவுப தேசமெண் ணெண்கையும் புரிகென்றான்.

அன்ன மேமுத லிடுதரு சட்டுவ மீந்தன ளதுவன்றி
மன்னு முத்தமத் தலைவன்முன் றருமிரு நாழிநென் மகிழ்ந்தீந்தாள்
பின்னு மற்றுளவறமெலாஞ்செய்கெனப்புகழ்ந்துபேரருள்கூர்ந்தாள்
பன்ன ரும்புகழ் விசயையே முதலினர் பணித்தவா றவைசெய்வார்.()

அம்பி கைக்குமுன் னிருந்தறம் வளர்த்தரும் பலமொழித் தருள்பெற்றான், செம்பொன் மாமழை நவமணி மலர்மழை பொழிந்தன செறிவானம், பம்பு துந்துபி வாத்திய முழக்கினர் சிவகணத் தவாபல்லோ, ரும்பர் வானமே முதலமு வுலகுமாரப் பெழுந்தன வொன்றாகி. (௨௬)

வால கில்லியர் முதலிய விருடியர் மகிழ்ந்துபூ ரணகும்பஞ்
சால்பி னேந்தினர் வேதமந் திரங்களாற் றனித்தனி துதிசெய்தா
ரால வார்குழ லம்மையைக் கண்டுகண் டிறைஞ்சினர் கரங்கூப்பி
ஞால முய்யவெண் ணான்கறம் வளர்ப்பது நாங்கள்செய் தவமென்றார்.

மற்று மாதவச சுமந்துவே முதற்பதி னாயிர வாத்தோரும்
சுற்றி யம்பிகை யுடன்வருங் கோதமன் முதலிய தூயோரா
வுற்றெ திர்ந்தழு வாயிர முனிவரு முவந்தன ளாய்ப்போற்றிக்
கற்றை யுங்குழ லுமையைநல் லறம்புரி கவுரியைப் புகழ்கின்றார்.

ஆடி னார்சில ரார்த்தெழுந் தார்சில ரருமறை யொடுகீதம்
பாடி னார்சிலர் பணிந்தெழுந் தார்சிலர் பங்கயப் பதஞ்சென்னி
சூடி னார்சில ரறங்களெண் ணான்கொடு மற்றுந்தோத் திரமாக்கித்
தேடி னார்பொருள் கண்டெனக் கண்டுகண் களித்தனர் துதிசெய்தார்.

இல்லை மேமுத லியம்புமெண் ணான்கற மியற்றுவித் தருள்வாளை
யொல்லையாகங்கள்சுருதிவேதியர்கள்செய்துவந்திடப்புரிவாளைத்,தொ
ல்லைநான்மறையாகமபுராணந்தோத்திரஞ்செய்வோர்ப்புரப்பாளை
முல்லை வாணகை யங்கயற் கண்ணுமை முதல்வியைத் தொழுவாமே.

ஞான ரூபியா யருட்பரை யாகியே ஞானசத் தியுமாகி
யேனை யிச்சுவ வடிவமா யவற்றினை யியல்புறப் புரந்தாளை
யான தொன்மையிற் சிருட்டிகா ரணமதா யந்தர்ப்பூ தமுமாகி
வான மேமுத லுலகங்காத் தருளுமை மாதினைத் தொழுவாமே. ()

பத்தி யாய்ப்பெருங் கருணையங் கடலுமாய்ப் பத்தியைத் தருவாளை
சித்தி யம்பெறு விச்சுவ முதல்வியாய் நிகழ்கயி லையின்வாழ்வாய்ச்
சுத்த மாயைமுன் னணமா யையைத்தரித் தவற்றினுட் டேயாளை
முத்தி மாககரி மையமீன் றளித்தருண் முதல்வியைத் தொழுவாமே.()

நிட்க ளத்தொடு சகளமா யடியவர் நினைத்தவா றருள்வாளைக்
கட்பு லப்படக் காரணைப் பூரண கலையொடு நிறைவாளை
யுட்பு லப்படத் திரிவித காணமொத் தருச்சிப்போ ருளத்தாளைத்
தட்ப மார்பிறை சூடிய வானிடத் தையலைத் தொழுவாமே. (௩௩)

கந்த னுக்கொரு தந்தனுக் கருடருங் கருணைத்தா யானுளை
வந்த னைக்குவந் தறமுத னான்கையும் வழுத்தினர்க் கருள்வாளை
மூந்து லோகவா தாரமா முதல்வியை முகுந்தனுக் கிளையாளைச்
சுந்த ரேசன்ற னிடத்திலங் கயற்கண்மின் றோகையைத் தொழுவாமே.

என்று தோத்திரஞ் செய்தலு மிறைவிகேட் டகமகிழ்ந் தனமின்னே
மன்ற நல்வரங் கேண்மின்க ளென்னவும் மாதவ ரிவைகேட்பார்
நன்றி கூர்தர யாங்களித் தலத்தினி னனிவசித் திடவேண்டுங்
கொன்றை வேணிய னெடுநினை யனுதினங்கும்பிடும்பதம்வேண்டும்.

காசி மேருமா மந்தர மேமகூ டம்பெருங் கயிலாயம்
பேசு மத்தலங் களினுமிங் கதிகமாய்ப் பின்னுக ளொடுமேவி
மாசி லெல்லாங் கொடுக்கவும் வேண்டுமென் றியம்பமா துமைகேளா
வீசு தண்டமிழ் மதுரையத் தலங்களின் மேம்படு தலமென்றாள். (௩௬)

ஆல வாய்பெருங் கயிலையக் காசிசாஞ் சிக்குமுற் பதியாகு
ஞால மேழ்புகழ் சுந்தர னேகயி லாயன்விச் சுவநாதன்
பால லோசனத் தேகம்ப னங்கயற் கணிபனை விசாலாட்சி
கோல மேவுகா மாட்சியாஞ் சமட்டிவித் தியாகக ரிதுகூறில். (௩௭)

இத்த லத்தொடெம் பெருமையை யாமலாதெவ ரறிந்துரைசெய்வார்
புத்தி கூர்ந்துநீர் கேட்டநல் வரமெலாந் தந்தனம் புகழ்ந்தன்னை
பத்தி கூர்தரு சைவருக் குறைமின்பா டண்டிகட் குரையாதீர்
முத்தி மாதவி ரென்றருள் செய்தனள் பின்னரு மொழிகின்றாள். (௩௮)

மூனு மாசையி னித்துதி கேட்பவர் படிப்பவர் முனிவீர்காள்
கேளு நன்குறத் துதிப்பவர் நம்முயர் ளொர்பதம் பெறுகென்றே
நாளும் போற்றிட வரமளித் தருளியங் கங்கையங் கயற்கண்ணு
ளாளு நாயகி யுருவிலொன் றியின ளின்னுநல் லறஞ்செய்வாள். ()

மாத வத்திரொன் றகத்திய னுரைசெயக் கேட்டமா தவர்சொல்வார்
நீத வத்திறு னுயர்ந்தனை யின்னருள் பெறுதலால் வினைநீத்தேக்
கீத கற்றுமம் பிகையறம் புரிந்தது செப்பினை யெமக்கின்னும்
போத முற்றிய மாலருந் தவஞ்செய்து பெற்றனமை புகலென்றார். ()

ஏழாவது தேவியறம்வளர்த்தவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௯௯.

---

## எட்டாவது

## விட்டுணுவரம்பெற்றவத்தியாயம்.

---

பண்டொரு கற்பாந் தத்தி லொடுங்கிய முறையே பண்பார்
விண்டுவே முதலோர் தோன்ற வேதங்கள் சனகர் யோகர்
தண்டலி றவத்தோர் மிக்க பதஞ்சலி முனிதாழ்ந் தேத்த
வண்டர்நா யகனின் றாடு மானந்த நிருத்தந் தன்னில். (௧)

வானனந் திசைப்போல் விண்டு வித்தள முழக்கு வின்றான்
மேணுயர் காசி யெய்தித் தவஞ்செய்தா திக்கம்பெற் றாற்போற்
றாணுவாந் துவாத சாந்தத் தலத்திலெத் தனைகா லங்கள்
பூணுமெய்த் தவத்தி னெந்தப் புனிதமா தவத்தைச் செய்தான். (௨)

சொக்கனம் முராரி முன்னந் தோன்றியெவ் வரங்க டந்தான்
மிக்கவச சரிதை கேட்கும் விருப்பினேம் விரித்துச் சொல்லென்
றக்கணு முனிவர் கூற வகமிக மகிழ்ந்து கேட்கும்
பூக்குவர் நீவி ரென்று வகத்தியன் பகர்வ தானான். (௩)

சிவனடி யார்க டம்முட் சிறந்துளோன் றிருமால செப்பு
மவனொடு சிவனும் பேத மின்றரி யலர்க்கண் சாத்தப்
பவந்தவிர்த் திடுதம் பாதம் பரித்தன னையிற் பாங்கர்
நவமுறு நார சிங்கச் சருமத்தைத் தரித்தா னாதன். (௪)

மார்பினி லாமை யோடு புனைந்தனன் மலர்ப்பூங் கையிற்
சீர்பெறு மவன்கங் காள மேயினன் றிறற்சூ லத்திற்
சூர்பெறு முடல முற்றுந் தூக்கினன் றுணர்ப்பூங் கொன்றைத்
தார்முடி தன்னில்விண் டுக்க டலைமாலை யணிந்தம் பூண்டான். (௫)

அன்றியு மிடப்பா கத்தி லவதரித் திடுதே லானும்
வென்றிசேர் சத்தி தானே விண்டுவா யிருத்த லானு
மொன்றிய சத்தி யீச னிடத்திலெப் போதுண் டானுன்
மன்றவப் போது தானும் வந்துதித் திடுதே லானும். (௬)

ஈசனு றிச்சை தேவி யிசைந்தனு சரித்தாற் போலு
நேசமார் விண்டுத் தானு மனுசரித் திடுவ னீங்கா
வாசையாற் புருட ரூபஞ் சத்திரூ பமுந்தா னவன்
மாசிலவ் வீச னிச்சைச் சுந்தர மாக வைகும். (௭)

என்கையாற் பேத மில்லை யியம்புமால் சிவனை நோக்கி
நன்குறப் பூசை யாற்றி நற்றவ நெடுநாட் செய்தான்
பொன்கமழ் மதுரை நண்ணும் புரிசடைப் புனிதன் காணு
மின்கம ழிடையா ளோடும் வெளியின்மால் விடைமேல் வந்தான்.()

மான்மழு வபயந் தூய வரதமு மலர்க்கை தோன்றக்
கூன்பிறை வேணி தோன்றக் கோதையு மொருபாற் றோன்ற
வான்மிசை வந்து தோன்று மழகிய சொக்கைக் கண்டான்
பான்மைமா தவனு மன்பிற் பன்முறை பணிந்து வீழ்ந்தான். (௯)

போற்றினன் பரவி னின்றான் புளகித் துடல்கம் பித்தா
னூற்றுறு கண்ணீர் வார வானந்த வெள்ளத் தாற்றான்
சாற்றுவ தினியென் யான்செய் தவோபலங் கிடைத்த தென்றான்
மாற்றினும் பிறவி யென்றென் றாடினன் மகிழ்ச்சி கொண்டான். ()

அக்கணத் தமல னோக்கி யமுதவாக் கருளிச் செய்வான்
சக்கர பாணி நீயுந் தவத்தினு விளைத்தாய் போவு
முக்கிர மாகச் செய்யுந் தவங்கண்டின் மகிழ்ச்சி யுற்றே
மிக்கமா வரங்க ளீவ மென்றலும் விண்டு சொல்வான். (கக)

உன்னையே காணப் பெற்ற பேற்றினு முறுபே றுண்டோ
வென்னையா ளுடையா யன்ன தாயினு மியம்பு கேன்யான்
முன்னநான் றேடிக் காணு முழுமல ரிணைப்பொற் றாளிற்
பன்னரு மன்பு பூணும் பத்தியெற் குதவ வேண்டும். (கஉ)

அரியுடன் பிறந்தா னென்றே யமலைபேர் விளங்க வேண்டும்
பரிவினீ யவண்மேல் வைத்த பரிவென்மேல் வைக்க வேண்டும்
புரிமணத் தமையா னுக்கு வரிசையான் புரிய வேண்டும்
பிரிவிலா நீயு நானும் பிரிவிலா திருத்தல் வேண்டும். (கங)

அமலயா மேனி தன்னிற் பாதியெற் களிக்க வேண்டும்
விமலநிற் றுதிப்போ ரென்னை விருப்பொடுந் துதிக்க வேண்டும்
கமலமென் கண்ணாற் கண்டு கதம்பகா னத்தி ருந்தே
நிமலலிங் கமதா யென்னை நித்தியம் பணிய வேண்டும். (கச)

சுயம்புலிங் கங்க ளெங்கு ண்டங்கெலாந் தொழுது சூழ்ந்து
வயம்பெற நின்னைப் போற்றித் தெரிசித்து வசிக்க வேண்டு
மியம்பிய பதிட்டை பூசை யெனக்குமுன் டாக வேண்டும்
பயம்படு நித்ய நைமித் தியமும்பா லிக்க வேண்டும். (கரு)

நீசநீ யுறையுங் கர்ப்பக் கிருகத்திற் சூழத் தென்பால்
வரிசையைங் காத்தன் றெக்க ணமூர்த்தி வடபால் வேதன்
றுரிசறு துர்க்கை வைகித் தொழுவர்மேல் பாலின் வைகிப்
பரசின் னிருதாள் போற்றும் பதமெனக் குதவ வேண்டும். (கசு)

சிவலிங்க பூசை செய்வோர் சிறந்தநின் வாம பாகங்
கவலின்றி யென்னை யன்பாற் கருதியர்ச் சிக்க வேண்டு
நவலிங்கப் பதிட்டை செய்து நானருச் சித்த லிங்கந்
தவலின்றிச சுயம்பு வேபோற் றழைக்கநீ யுறைதல் வேண்டும்.(கஎ)

இவ்வற்றினு மேல தான வரமொன்றி னின்று மொன்று
நவிற்றும்வா ணனைப்போற் றாய நந்தியைப் போல யாரும்
புவித்தலம் புகழ்நீ மன்றிற் புரிநட னத்துக் கேற்பப்
பவித்தமத் தளமு முக்கி யென்னாளும் பரவ வேண்டும். (கஅ)

எத்தனை பிழைசெய் தாலு மிதுபிழை யென்றெண் ணாதே
யத்தவென் மயக்க நீக்கி யாண்டருள் புரிய வேண்டு
முத்தனே யென்று விண்டு மொழிதலும் வாநல் கென்னப்
பத்தர்கள் பத்தன் றந்தோ மென்றனன் பகர்வ தாறேன். (ககூ)

மாசயி லாய மிந்த மதுரையம் மன்றிம் மன்ற
மேசுமா விருந்து நாமே யியல்பெற நிருத்தஞ் செய்வோ
மோசுநாட் டியத்திற் கேற்ப மத்தள முழக்கிக் கொண்டே
நாகமும் புலியும் போனி நடனங்கண் டுறைதி யென்றும். (உ0)

இன்னுமொன் றிசைக்கே நாமே யெங்கணு நிருத்தஞ் செய்வோ
மின்னொரு கலையை மற்ற நிருத்தமா தலங்க டன்னிற்
பன்னரு முழவ மார்த்துப் பணிந்தவ ணிருப்ப தாக்கிப்
பொன்னொடு மிருந்து வாழ்தி பூரண கலையொ டென்றான். (உக)

நம்முரு விலிங்கத் திற்கு நிருதியி னயந்து நாமே
யிம்மையே தருவா * னென்றே யருச்சிக்கு மிறைக்கு மேல்பாற்
றம்மையே தமக்கு நல்கும் தலத்தினி லுறைக வாய்ப்பச்
செம்மையோ டுறைதி கூட லுறைகுரு நிருப்பேர் பெற்றே. (உஉ)

என்றருள் புரிந்து சொக்க லிலிங்கத்தி னுறைந்தானை போற்றி
மனறவெவ் வரங்கள் பெற்றே வைகினன் கமலக் கண்ணன்
இன்றுமிக் கதைப டிப்போர் கேட்பவ ருயர்மா னத்தற
சென்றுவிண் கயிலை மேவிச் சாயுச்சிய மடைவர் திண்ணம். (உங)

ஈதுமால் சரிதை யென்றே யியம்பினன் மலையக் கோமானை
நீதுதிர் முனிவர் கேட்டுச் சிந்தையுண் மகிழ்ச்சி கொண்டா
ராதிமா தவனே கண்ணன் சரிதையை யறைந்தாய் கஞ்சப்
போதினன் சரிதை யிங்குப் புகலென்றார் பின்னுஞ் சொல்வார். (உச)

எட்டாவது விட்டுணுவரம்பெற்றவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - சுoக.

---

* இம்மையே நன்மைதருவானெனப்படும் இம்மையேதருவான் என, இடைக்குறைந்து நின்றது.

ஒன்பதாவது

## பிரமன்பூசித்தவத்தியாயம்.

வாமபா கத்திலரி வலப்பாலில் விதியுதித்தா னைந்த ரன்றே
காமனு கங்கருக்குங் கண்ணன்மணி வண்ணனுக்கே கருணை கூர்ந்து
தாமமா ருயர்பூசை கோயிலவர்க் குண்டாகத் தம்போ லாக்கிப்
பூமனுக் கிப்புவியிற் பூசையுங்கோ யிலுமின்றிப் போகச்செய்தான்.

அக்கார ணத்தையெமக் கியம்புதியென் றருந்தவத்து முனிவர் கூற, முக்காலங் களுமுணரு மகத்தியன்கேட் டுரைசெய்வான் முனிவர் கேண்மின், மிக்கபமக் கதைபுகல்வேம் விமலனுமவ் வவர்செய்யும் வினைக்கீ டாகப், புக்காவிக் குள்ளிருந்து கன்மானு போகமெலாம் புசிப்பிப் பானுல். (௨)

ஒருவரிடத் தேயன்பு மற்றொருவ ரிடத்தில்லையென் றுரைக்கவேண்டா
மிருவரிடத் தினுஞ்சமமா மீசனருள் வாரபக்க மில்லை யென்றும்
வருவதற்குக் காரணமே தென்பீரே லுலகநடை வளர்க்கு மாற்ற
லொருவருக்கும் பாவியனா யறத்தினனா விருப்புறாநல்லருளைசெய்யும்

நான்முகன்பொய் யுரைத்தலினு லவனிலத்தி னிலையிழந்து நகை யுமுற்றான், மான்முகங்கண் டோருலைப்பர் பொய்யெனமா னுடர்சுராக்கிக் கினைவு வாய்ப்பப், பான்முகங்கொண் டிருந்திடுதும் மதலையையுந் தண்டித்திப் பரிசு செய்தா, னான்முகங்கண் டறிதிரென வனுரைப்ப முனிவரரு ளவல்வ தானார். (௪)

அத்திருநான் முகன்சொலும்பொய் யேதுரைத்தி யென்னவகத் தியனுஞ் சொல்வான், சத்தியமே பரமபாந் துமமென்று மசத்தியமே பாவ மென்றும், பத்திதரு சத்தியத்தோர் புண்ணியராமசத்திய ர்பா வியர்க ளென்று, நித்தியமா மியசிவன்கற் பனைசெய்தா னவ்வர ம்பு நீக்கற் பாற்றே. (௫)

சத்தியமே பலவேள்வி தவந்தீர்த்தம் பரமசிவன் றங்கும் தானஞ்
சத்தியமே மேலான தவந்தருமஞ் சோடசமா தான மாகுஞ்
சத்தியமே சிவபூசை சரியைகிரி யாயோகந் தருமெய்ஞ் ஞானஞ்
சத்தியமே புகலுமிக பரத்தினுக்குக் காரணஞ்சத் தியமீ துண்மை. (௬)

பொய்யுரைப்போ ரொத்தவங்கள் புரியினுமத் தவோபலத்தைப் பொருந்த மாட்டார், பொய்யுரைப்போ ரொத்தருமஞ் செய்யினுமத்

தரும்புயன் புசிக்க மாட்டார், மெய்யுரைப்போர்க் கண்டளவிற் சி வன்விலகி நெடுந்தூரம் போவன் வேதன், பொய்யுரைப்போர்க் குல கின்றபோ சனங்கிட்டா தெனும்பழஞ்சொற் புதுக்கி னுனல். (எ)

ஆதிகர் லத்தினிக ழுவன்சரிதை விரித்துரைக்கே மடைவிற் கே ண்மயின், மாதுபா கனையிகந்தவ் வாரணனு நாரணனு மயங்கிக் கூ றுஞ், சோதிசேர் பரம்பொருளியா னியான்பெரியன் பெரியனென விகலித் தொன்மை, நீதியாய்ந் தளந்தறிந்து மறியார்போற் பொரு டேரு நினைவு தீர்ந்தார். (அ)

எம்மினுநித் தெமையிகழ்ந்தா யாவையுநல் குவம்பெரியே மெ ன்றுன் மாயன், வெம்மையொடு நான்முகனு மவன்போலப் புகன்ற னன்பின் வெகுளி கூர்ந்து, நம்மினுமிக் கோரிலையென் றகந்தையி னுல் வருங்குறியை நாடா ராகித், தம்மின்மிகு போர்புரிந்தா ரிரு வோரு நெடுங்காலந் தணவா ராகி. (கூ)

தொர்தப்போர் புரிந்திடுங்கா லிருவோரும் பாசுபதந் தொட்டா ர் விட்டார், வந்தப்போ ரத்திரங்க ளொன்றொடொன்று தாக்கவழு ல் வானத் தோங்கி, யிந்தப்பூ வுலகுமுத லியம்பியசத் தியவுலக மீறு யெங்கு, மூந்தப்போந் தெரித்திடுங்கான் மானிடர்வி ணவரெவரு முறையிட் டாரால். •(க0)

இறைவனது கண்டிரங்கி யாமுதவா திருக்கிலெலா மிறக்கு மெ ன்றே, நிறையுமழற் றம்பமென விலிங்கமதா யளப்பரிதாய் நீண்டு நின்று, றுறையுமழற் பாசுபத வத்திரங்க ளதிலொடுங்கிற் றும்ப ரு யந்தார், மறையவனுந் திருமாலு மச்சுடர்கண் டார்மயங்கி மற்போர் விட்டார். (கக)

கட்புலனி லளக்கவொண்ணுச் சோதியைக்கண் டார்கண்டு கல க்க முற்று, ருட்புலன்க ளொடுங்கியித னடிமுடிகாண் பவர்பெருமை க் குரிய ரென்றார், விட்புலனிற் சென்றுமுடி யறிவனென விதிசபதம் விளம்பி னுன்மால், கொட்புலனி லடிகாண்ப னெனவரியு நெடுஞ்ச பதங் கூறி னுனல். (கஉ)

யோசனைநீண் டகன்றுயர்ந்த வெகினவடி வாய்மலரோ னும்ப ரோங்கிப், பாசனையும் வகையறியா னொக்கணத்தா யிரங்காதம் ப றந்து போனுன், மாசனையு மலர்க்கண்ண னிரண்டியோ சனையுயர் ந்த வாராக மாகித், தேசனையும் படிதுளைத்துக் கணத்தினுக்கா யிரங் காதந் துருவிச் சென்றுன். (கரு)

இம்முறையா விருவருந்தே[illegible]ண்டினிலா யிரம்பறந்து மிடந்துங் தேடித், தம்முருவந் தேய்வதன்றிச் சிவனுருவி ளுதியந்தந் தரமோ காண்பா, ரம்மலரோ திமன்சிறைகான் மூக்கலகோ டுடறேய்ந்தங் கறமூர்ச் சித்தான், கம்முகங்கால் கோடுடல முழுவதுந்தேய்ந் தறக் குறுகிக் கவன்றான் கண்ணன். (௧௪)

கவலுறுமான் மூர்ச்சைதெளிந் தறமெலிவான் கருதியுளத் தெண்ணி நோக்கி, யவலுறக்கூ டாபுவியின் மீதும்வரக் கூடாதென் னறிவென் ளுகுந், தவலறுநான் பொருளென்றுஞ் சிவன்பொருளன் றென்றுமிந்தத் தவறுற் றேனியா, னுவலுறுமா றென்கெட்டே னிதுவருமோ விப்பாவ நுனிக்கற் பாற்றே. (௧௫)

எனமனத்தி னெண்ணியர னடியையித யத்திருத்தி யெந்தா யந்தோ, யனமயக்கா விதுசெய்தேன் பொறுத்தியெனத் தியானித்தான் வருத்த நீங்கிக், கனமிகுத்த வதிபெலமுற் றனன்மீண்டும் பூவுலகிற் கடிதி னெய்தி, யனமயக்கிற் காணுதென் றறிந்தோனுஞ் சுடரிலிங் கத் தருகே வந்தான். (௧௬)

மோட்டுமா வரியுருவாய்த் தவறிழைத்தே னத்தவறு முழுது நீங்க, வீட்டுமா தவப்பொருணீ யருளுகெனச் சோதியிலிங் கத்துட் டோன்றித், தோட்டுநாண் மலரிதழித் தொடையோனுந் தருப்பணத்துட் பொருள்போற் றன்னைக், காட்டினுன் கண்டுபணிந் தெழுந் துநின்று துதிசெய்தான் கவலை தீர்ந்தான். (௧௭)

பயத்தானம் மால்பின்னு மறைந்துநின்றான் பங்கயத்தோன் றன்மை கூறி, லயர்த்தாவி தேய்ந்தொடுங்கி மூர்ச்சனையா லங்குமிங்கு மணுக மாட்டா, னுயத்தானும் வகையறியா னலம்வருங்கால் யோகியரவ் விடத்தி னுற்றார்,வியர்த்தாவி வருந்துமவன் வரக்கண்டா ளொருமாற்றம் விளம்பு கின்றான். (௧௮)

எங்கிருந்து வருகின்றீ ரெவ்விடத்திற் செல்குவிரென் றியம்ப வேழை,யங்கிருந்தின் னருள்கொழிக்கும் பரனருள்பெற் றியாம்போந்தே மென்றார் பார்ப்பா, னங்குமிங்கு மெத்தூர மெத்தனைநாட் சென்றதென்று னன்னோர் சொல்வார், கொங்கிருந்த மலர்ப்பிரம கற்பமனந் தந்தொகுத்துக் கூடா தென்றார். (௧௯)

வாசமல ரோய்நீயிங் கெய்தியதென் னென்றார்நம் வாம பாகத், தீசன்முடி காண்பனென விண்டுவிரோ டிகலியிவ ணுற்றே னென் றா, ருசிவன்மா முடிநீயோ காண்பாய்பே ரகந்தையுற்றா யறிவொன்

றில்லாய், சிசிபிந்தப் புந்தியைவி[illegible]டினித்திரும்பென் றவர்போனார் திளைத்து நின்றான். (௨௰)

•பஞ்சமலத் தான்மயங்கப் பங்கயனு முடிதேடிப் பார்த்தே யில்லைக், கஞ்சமலர்க் கண்ணனடி காணும னம்போலக் கவல்கின் றானே, தஞ்சமுறக் கண்டனனே சபதமென்ற மென்றுபா தபிக்குங் காலே, வஞ்சமலர்க் கைதையொன்று வரக்கண்டான் கையேந்தி வாங்கிச் சொல்வான். (௨௧)

மணங்கமழ்கே தகையெவணைத் தனைகாலஞ் சென்றதிவண் வாரீ யென்னா, வணங்கொருபால் வீற்றிருக்குஞ் சிவன்முடியின் றிழிந்துமிவ ணடைந்தேன் கால,மிணங்கவுரைத் திடமுடியா தெண்ணிறந்த காலமென்ற றியம்ப வேத,னுணங்குமறி விழந்தனனக் கைதையைப்பார்த் தனன்பின்று றுவல்வ தானுன்.  (௨௨)

வேறு.

கைதையே யெனக்குப கார நீயொன்று
செய்தையே யுன்னையே துதித்தல் செய்வலென்
றெய்தவே யியம்பயா தியம்பென் றோதலு
நொய்தையே யதுவரை நுனித்துக் கூறுவான். (௨௩)

படியிசை விடுசுடர்ப் பரனை யெள்ளியே
யடிமுடி காண்பமென் றறுதி யிட்டனங்
கடிமல ரடியரி காணப் போயினன்
முடியிது காணயா னிங்கு முற்றினேன். (௨௪)

கண்டில னுனைக்கண்டு கவலை தீர்ந்தனன்
விண்டுமுன் னேயெனக் காக மெய்ம்மையே
யண்டர்நா யகன்றிரு முடிகண் டானய
னுண்டெனப் பொய்ம்மையொன் றுரைக்க வேண்டுநீ. (௨௫)

மறுத்துரை யேலென வழங்கக் கேதகை
சிறுத்தவர் தொழிலிது செய்யொ ணாதென
வெறுத்தன கூறியும் வேதன் வாதையா
லுறுத்துபொய்ச் சான்றுரைக் குடம்பட் டுள்ளதால். (௨௬)

நின்னிக ரில்லென நிகழ்த்தி யயது
தன்னையுங் கொடுவிதி யிழிந்து தாரணி
முன்னிய சுடரொளி யிலிங்க மூர்த்திமுன்
மன்னியே துதிசெயு மாலைக் கண்டனன். (௨௭)

நாரணு செய்திசொல் லனமு[illegible]ரணன
காரணு திபனடி கண்டி லேனியான்
பூரணு திபன்முடி காணப் போகிய
வாரணு நின்செய லறைகென் றோதலும். (௨௮)

முடியது கண்டனன் முடியிற் சாத்திய
கடிமலர்க் கைதையீ தென்று காட்டினன்
படியிடந் தவனவன் பான்மை நோக்கியே
பிடிபடா தெவர்க்குநின் பேச்சுப் பொய்யென்றான். (௨௯)

யாதிறாற் பொய்யென் வியம்பு வாயலர்த்
தாதுசேர் கைதையே சான்றென் றனயன்
மாதவன் றனுமம் மலரைக் கேட்டலுந்
தீதிலா யுள்ளதென் றியைந்து செப்பிற்றால். (௩௦)

பொய்ம்மையே யிருவரும் புகன்ற வாய்மொழி
மெய்ம்மையன் றென்றறி மீண்டுங் கூறலு
மெம்மையோ வீதுபுகன் றிடுதி யென்றெதிர்
கொம்மென நான்முகன் கோபங் கொண்டனன். (௩௧)

மருத்துயில் பாப்பணை மாயன் றன்னொடவ்
வுருத்திர னென்னிடத் துதித்து ளோனெனக்
கருத்தினி லிகழ்ந்தன னகந்தை காட்டினன்
பொருத்துற வறிந்தவ னகந்தை போக்குவான். (௩௨)

சுடரொளி யிலிங்கத்தி னின்று தோன்றியே
யடல்விடைப் பாகனின் றடர்ந்து சொல்லுவான்
மடல்கெழு மலரினோய் மதித்தி டாதிவண்
டிடமொடு பொய்யுரை செப்பற் பாலையோ. (௩௩)

பொய்ம்மையுஞ் சூதுங்கட் கொலையும் புன்மையுஞ்
செம்மையில் குருநிந்தை தேவ நிந்தையும்
கைம்மிகு மகந்தையுங் களிப்புங் காமமு
மிம்மையு மறுமையுங் கெடுக்கு மெந்திரம். (௩௪)

கணத்தினி லனந்தநான் முகனைக் காட்டியக்
கணத்தினி லொடுக்குது நம்முட் காணவே
பணத்தினிற் றுயில்கொளும் பச்சை மாலொடு
மெணத்தகா வினையொரு பொருளென் றெண்ணலேம். (௩௫)

ஆயினும் பொய்யுரை பகர்ந்திட் [illegible]யதான்
மாயிரும் புவியினுன் றனக்கு வ[illegible]மைசேர்
கோயிலும் பூசையும் போக கோமுறை
சாயுக வெனக்கடுஞ் சாபஞ் சாற்றினான். (௩௬)

பயிரவன் வந்துபொய் பகரைந் தாந்தலை
செயிருறக் கிள்ளியக் கணத்திற் சென்றனன்
வயிரங்கொண் டொருதலை யிழந்த மான்மக
னுயிருற வொடுங்கியுண் ணடுங்கி யோய்ந்தனன். (௩௭)

தணியற மறந்துபொய்ச் சான்று கூறிய
பணிமலர்க் கைதையை நோக்கிப் பண்ணவ
னினிதென வணிகல மெமக்கு மாகலை
புனிதநீ யலையெனப் புகன்று நீக்கினான். (௩௮)

சிவனொராந் தொன்மையுஞ் செப்பொ ணாதவ
னவன்செயும் வினையறு பவித்துத் தீர்வுறுந்
தவநெறி முனிவரர் கேண்மின் றுவறு
புவனமுண் டவருறு பொய்சொல் லாமையால். (௩௯)

பூசையுங் கோயிலும் புராரி மேல்வைத்த
வாசையு முடையன யவற்குச் சத்தியாய்
மாசறு சாத்தனை யின்று மற்றுள
பேசருங் கடவுளர்க் கதிகம் பெற்றனன். (௪0)

அகந்தையுற் றுளனவ னாயி னும்பல
ரிகந்திடும் பொய்யுரை யியம்பி டானென
நிகழ்ந்திடு மயக்கத்தை நீக்கி நின்மலன்
முகந்துதன் கருணையே முற்று நல்கினான். (௪௧)

அரிசெய லீதந்த வயன்பின் செய்ததைத்
தெரிவுறக் கேளுமி னென்று செப்புவான்
புரிசடை யமலனை யிகந்து பொய்யுரை
துரிசறப் புகன்றனன் சொல்வ தேதென. (௪௨)

அன்றியும் பூசையு மால யங்களு
மின்றியே புவியினி லிகழ்ச்சி யுற்றுளேன்
கொன்றைவே ணியன்பொரு ளென்று கொண்டிலேன்
கன்றிய சிவத்துரோ கத்த னாயினேன். (௪௩)

இக்குறை தீர்ப்பதெம் மீச னேயலாற்
புக்கெவர் தீர்ப்பரென் றெண்ணி போதனு
மக்கணத் தறிவுவந் தடைவிற் போற்றியான்
புக்கன னபயநீ பொறுத்தி யென்பிழை. (சச)

மைந்தர்க ளொருகுறை செய்யின் மாற்றியே
தந்தையர் வெறுத்துடன் றயவு செய்குவ
ரெந்தைநீ யிரங்குகென் றீசன் றாண்மலர்
சிந்தைசெய் தருந்தவஞ் செய்கின் றனரோ. (சரு)

பருவமோ ராயிரப் பஃது பங்கயன்
பொருவரு மருந்தவம் புரியுங் காலையில்
வெருவலை யெனச்சிவன் வெளிநின் றோதுவான்
றெருமரு மிப்பவந் தீரு மாறுகேள். (சசு)

எத்தவ மியற்றினுந் தீர்வு றாதிது
சத்திய மேனுநீ தனைய ளுதலாற்
புத்தியுட் கொள்ளுதி புகல்வன் சிவன்மா
முத்திதன் னகரெச் மொழியு மோர்தலம். (சஎ)

புவிபுகழ் தருவிராட் புருடன் மேனியி
லவயவ மாமற்றைத் தலங்க ளாலவாய்
விவிதமாந் துவாதசாந் தத்தின் மேம்படுங்
கவலுறே லத்தலங் கதம்ப கானனம். (சஅ)

பூரண கலையொடும் புகறென் கூடலிற்
காரண காரியங் கடந்து வைகுதுந்
தாரணி புகழ்ந்தநத் தலத்தின் மேவியே
யாரண நீசிவ பூசை யாற்றுவாய். (சகூ)

ஆங்கணின் பவமொழிந் திடுமங் கேகெனத்
தேங்கம ழிதழியான் செப்பக் கேட்டலும்
பாங்கொடு மவன்பதம் பரவிப் பங்கயன்
வாங்கரும் பெரும்புகழ் மதுரை யெய்தினான். (ருo)

வேகமா நதிசிவ தீர்த்த மிக்குயர்
மாகமார் தருபொற்றா மரையித் தீர்த்தத்தின்
மோகமார் வினைகெட மூழ்கிச் சொக்கெனு
மேகமா லிலிங்கத்தை யிறைஞ்சி யேத்தினான். (ருக)

அங்கயற் கண்ணுமை யம்மைமையன் பொடு
பங்கயக் கண்ணனும் பணிந்து போற்றியே
வெங்கொடும் பொய்புகல் வினைய கன்றிடத்
தங்குநா ளுண்டருந் தவம்பு ரிந்தனன். (௫௨)

வேறு.

பொற்புறு பெருங்கல் யாண புரத்தனைக் குரோச மேல்பா
லற்புதச் சொக்க லிங்கத் திற்கொரு வடபா லான்ற
சொற்றமி ழறியும் வேக வதிவட கரையிற் றோன்றுந்
தற்பர லிங்கந் தன்னிற் பூசித்தான் றன்பே ராக்கி. (௫௩)

முந்திய சிவதீர்த் தத்தின் மூன்றுகா லமுநீர் மூழ்கி
விந்த * மா மலரோர் காலத் தாயிர மாக மேன்மை
தந்தமூ வாயி ரத்தாற் சாற்றுமவ் விலிங்கந் தன்னிற்
சிந்தித்துப் பூசை செய்தான் சிவசகத் திரநா மத்தால். (௫௪)

அஞ்செழுத் தயுத நாவி னடைவினுச் சரித்தா னித்தம்
விஞ்சுமிப் படியால் வேதா கமவிதி விதியர்ச் சித்தே
தஞ்சென விருந்தா னாளுண் டத்தல விசேடந் தன்னாற்
செஞ்சவே யிலிங்க நின்று சிவனவற் கருள்வா னெண்ணி. (௫௫)

தோன்றினன் சேவின் மீது தோன்றிடக் கண்ட வேத
னென்றவா தரவாற் கும்பிட் டிருகணீ ரருவி சோரத்
தான்றனி முடிந டாழச் சதமுறை வணக்கஞ் செய்தான்
வான்றுணை யெனக்கு நீயென் றன்பினுல் வழுத்த லுற்றான். (௫௬)

வேறு.

தேவா திபர்தந் தேவே சரணஞ் செகநா தபுரா தனனே சரண
மூவா முதலே திருவாய் புடையாய் முதல்வா கருணா கரனே சரண
நாவா ரவழுத் தியபத் தர்கள்பா லவமிக் குதவுந் தலைவா சரணங்
காவா யெனைமவந் தாள்வாய் சரணங் கமலே சசதா சிவனே சரணம்.

சத்தா நிரும லசுத்தா சரணந் தருநான் மறையின் பொருளே சரணம்
வித்தா யொருமு தலானாய் சரணம் வியனு குவ்வியா பகனே சரணங்
கொத்தார் புரமெ ரிசெய்தாய் சரணங்குழகாவன்னவினோதா சரணம்
பித்தா மலமொ ழியந்தா சரணம் பிரமே சசதா சிவனே சரணம். ()

---

* அரவிந்தம் என்பது விந்தமெனத், தலைக்குறைந்து நின்றது.

ஞானத் துருவே சரணஞ் சிவமெய்ஞ் ஞானந் தருவாய் சரணஞ்சரண
மோனத் தெளிவா யுயிருக் குயிராய் முழுதுந் தெரிவாய் சரணஞ் சர
கூனற் பிறையா யரவமணிந்தாய்குரவங்கமழ்குழல்பாகாசரண [ணம்
மீனத் துவசற் கருள்வாய் சரணம் வேதே சசதா சிவனே சரணம். ()

எந்தாய் தந்தையு மானாய் சரண மெத்தே வினையு மளித்தாய் சரண
மைந்தா ரிடபத் தூவசா சரணம் வரநல் கிடுமுத் தமனே சரண
முந்தா ருருவ மனந்தா சரண முறைசே ரும்விகா ரமிலாய் சரணஞ்
சிந்தா மணியே சரணங் கமலத் தேவே சசதா சிவனே சரணம். ()

நாதா வுலக வதீதா சரண நலமார் விழிக ளனேகா வுலகுக்
காதா ரமுநீ யானாய் நதிகட் கதிவே கவதிக் கரையாய் சரணங் [ம்
தாதார்மலர்கொடுனைப்பூசித்திடுதமியன்பிழைகள்பொறுப்பாய்சரண
பூதா திபகு ருநாதா சரணம் போதே சசதா சிவனே சரணம். (கூக)

வேறு.

என்றுதுதித் தேகமலன் பின்னருநல் லருள்கொழிக்கு மிறைவ நின்னைத், தொன்றுதரு நான்மறைகண் டறியாதென் றுரைஞே தொகுத்துக் காண்பேன், கன்றுவினை தீர்த்தெம்மைக் கைவிடே லெனத் தொழுது கழறி நின்றான், வென்றிமழ விடையானு மவன்முகம்பார்த் தருளியிவை விளம்பு வானால். (கூ௨)

கமலநீ நங்கடம்ப வனத்திலருந் தவங்கருதிப் புரித லானு
நிமலமா விளங்குபுரா தனலிங்கம் பூசித்த நேர்மை யானு
மமலமாந் தோத்திரத்தி னானுமக மகிழ்ந்தனமிப் பதியி லான்ற
விமலையோ டுறைலிங்கம்பூசிப்போர்க்கெப்பவமும்வீடுந்திண்ணம்.

காசியினிற் சிவலிங்கம் பதிட்டைசெயும் பலத்தினுநங் கதம்ப கானத், தேசறவே பதிட்டைசெய்யி னூறுமடங் கதிகமென்று வி னமயோர் போற்றும், தேசுபெறு சிவதீர்த்த முப்போது மூழ்கிநடே சனைச்சே வித்தே, நேசமுறு புராதனலிங் கம்பூசிப் பவர்பயனை நிக ழ்த்தற் பாற்றே. (கூச)

வேகவதி மணன்மறையோ னனமாக்க லாலன்ன வினோத மொன்று
மாகமுறு பசுப்பூசித் தருள்பெறலால் வளர்திருவாப் புடையாரொன்று
நாகமருச் சித்தணியா விளங்கலா லரவமணி நம்ப னொன்று
மாகமநூல் விதிநீயர்ச் சனைசெயலா லாதிபிர மேச னென்றும். (கூரு)

தழைத்திடுமெய் விலிங்கத்தின் றிருநாமம் புகலன்குந் தவமோர் கோடி, பிழைத்தபயன் றூரத்தே தெரிசித்தோர்க் கடையும்வினை யெ

ல்லா, நீறுங், குழைத்திடுமெய் யன்பினரா யித்தலத்து வசித்துநித்தங்
கும்பிட் டேத்திற், பிழைத்திடும்பொய்ப் பவமகன்று கதியுறுவர் சுய
ம்புவின்முந் தியதாய்ப் பேசும். (௬௬)

நாரதமா முனிமுதலாந் தேவவிரு டியர்நலஞ்சேர் வசிட்டன் மு
ன்னும், பேருறுமா தவத்தின்மிகு பிரமவிரு டியரிமையோர் பேணிப்
போற்றுந், தாரகமா மவ்விலிங்கத் தனேகவதி சயந்தோன்றுந் தகுவா
கீசர், பூரணராந் திருஞான சம்பந்தர் சுந்தரர்போற்றுவர்நக் கீரன்.()

திருநாம முச்சரிக்கக் கிருதத்திற் றிரேதத்திற் றெரிசித் தேத்தக்,
கருநாமங் கெடத்துவாப ரையிற்பூசிக் கக்கலியு கத்திற் பூசித், தொ
ருநாம முச்சரிக்கப் பவமகலுஞ் சொக்கலிங்க முதவும் பேறு, தருநா
முண் மையைப்புகன்றே மிவ்விலிங்க னின்பெயராற் றழைக்க வெ
ன்றும். (௬௮)

கேட்டிநீ வரங்களுனக் குதவுவமென் றாணருளக் கேட்டு வேத,
நாட்டமூன் றுடையாயின் னிகழ்ந்தசிவத் துரோகத்தா னலியுந்
தோடம், வாட்டமுறு பொய்யுரைத்த தோடமனை நீக்கியருள் வழங்
கல் வேண்டும், வேட்டலெனிற் றமியனுக்குப் பூசையுங்கோ யிலுமுன்
போல் விளங்கல் வேண்டும். (௬௯)

முத்தியே யுதவுறுநின் னிருத்தத்திற் கிசைந்திடயான் முறையிற்
றுள, மொத்தியே தொழவேண்டும் பிரமதா ளப்பெயர்பெற் றோங்க
வேண்டு, மத்தனே யருளுகென வவ்வரந்தந் தேமெனப்பின் னமல
ன் கூறும், பத்தியே தருமித்தப் பதியினில்வந் தடையுமுனின் பவநீங்
கிற்றால். (௭௦)

ஆயினுமப் பவந்தீர்த்தே மருமறையோர்க் குதவுதனிற் கருளிச்
செய்தே, மேயுறுநந் திருநடத்தின் றிருத்தாளப் பணியுமுனக் கீந்தே
மிந்த, மாயிருஞா லம்புகழப் பிரமதா ளப்பெயரும் வழங்கி னேம்வ
ண், சேயெமக்கு நீயதனுந் திருட்டியுமுன் போற்றழைக்கச் செய்தே
மென்றே. (௭௧)

வரமுதவி யமலனுமம் மூலவிலிங் கத்தானுன் மலருளோனுந்,
திரமுறவவ் விமலனடத் திற்கியையத் தாளமொத்தித் தெரிசித் தேத்தி
ப், பரமுறுமற் றையதலத்துந் திருத்தாளப் பணிசெய்து பரவி வாழ்ந்
தா, னாமுறவிக் கதைபடிப்போ ருரைப்போர்கேட் போர்கயிலை
யுற்று வாழ்வார். (௭௨)

விதிசரிதை யிதுவென்ன மலையமுனி விளம்பினான் விளம்பக் கேளா, வதிசயமுற் றருந்தவத்தோர் மீளவுஞ்சொல் வார்மதுரை யால வாயிற், கதிதருமெம் பரனெண்ணெண் டிருவிளையா டற்கதை காசியின்முன் சொன்னாய், துதிபாவு மித்தலத்துங் கேட்கவிரும் பினமின்னுஞ் சொல்வா யென்றார். (௭௬)

என்றுமுனி வரரியம்ப வகத்தியனங் குரைசெய்வா னினிது கேண்மி, னன்றிதரும் யுகமொன்றி னானான்கு நானான்கா நான்கு கத்தும், வென்றிதா விளங்கியதிக் கதைமுழுதுஞ் சாரமா விளம்புகின்றேந், தொன்றுவினைப் பவமகற்றுங் கதியுதவு மெனத்தொகுத்துச் சொல்வ தானான். (௭௭)

ஒன்பதாவது பிரமன் பூசித்த வத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௭௫.

---

பத்தாவது

# லீலாசங்கிரகவத்தியாயம்.

---

### ௧-வது இந்திரன்பழிதீர்த்த திருவிளையாடல்.

புரந்தரன்முன் விருத்திரா சுரனை வீட்டும் புன்பழிநாற் கூறாக்கி நீக்கி வந்தே, யரந்தைதவிர் விருத்தங்கண் டாங்கத் தேவர் மனங் கவரு மடல்வேட்ட மென்னப் போந்து, வரந்தருநற் கதம்பவனத் தருளா லெய்தி வரதனைக்கண் டாவிப்பொற் கமலஞ் சூட்டித், திரன்றருசித் திரையில்விடாப் பழிநீங் கற்கெண் டின்கயமா னஞ்சாத்திச் சிறப்பின் வாழ்ந்தான் *. (௧)

### ௨-வது வெள்ளையானைக்குச் சாபந்தீர்த்த திருவிளையாடல்.

வாசவன்கூ றிடவயிரா பதநீ பக்கான் வந்தருளா லீசனைக்கண் டிறைஞ்சி வேந்தன், றேசுபெறு துருவாசன் கொடுத்த சேடந் திரு

---

* இச் செய்யுண் முதல் ‘‘பொற்புறுகண்ணுவன்,, என்னுஞ் செய்யுளிறுதியாகவுள்ள அறுபத்து நான்கு செய்யுள்களாற் றனித்தனி சங்கிரகமாகச் சொல்லப்படுகின்ற அறுபத்துநான்கு திருவிளையாடற் சரித்திரங்களும், அவற்றின் வைப்பு முறையும் வேப்பத்தூரார் திருவிளையாடற் புராணத்துச் சரித்திரங்களையும், அவற்றின் வைப்பு முறையையும் ஒத்திருக்கின்றன; ஆதலால் இச் சரித்திரங்களின் விரி அப்புராணத்தாற் செவ்விதிற் பெறப்படும்.

மூடிசூடாதிகழத் தென்னர்கோவாற், பேசருமா மூடிபிளக்க வெ ற்றுன் னென்றும் பெரிதுறுகைத் திடுமெனவின் னகன்று மண் ணிற், கரசுறச்செல் கென்றமுடன் சபிப்பப் போர்ந்தே னெனக்கழ றிக் கடுஞ்சாபந் தீர்ந்தே கிற்றல். (உ)

௩-வது மும்முலைத்தடாதகையம்மையவதரித்ததிருவிளையாடல்.

தென்னன்மலை யத்துவசன் காவன் மாதர்ச் சேர்ந்தநெடுங் கா லங்கன் போக்கி வேந்த,ரின்னகைமா தினைமணந்து மகவி லாமலிய ற்றுதவத் தான்மூன்று முலையி ளேர், மின்மகவை யருளவரு ளா ல மைச்சன் விளங்கியபேர் தடாதகைநன் கணவற் கண்டான், மன் னுமுலை மறைந்தரசா மெனப்பொன் மேரவி வைத்தரசன் வானடை ந்தான் மதுரை யாண்டாள். (௩)

௪-வது திருமணஞ்செய்ததிருவிளையாடல்.

மும்முலையாள் கணவனைவேட் டெழுந்தெண் டிக்கு முடுகிவிச யஞ்செய்து கயிலை மேவ,வய்யினென விமையவர்போர்புரிந்தாற் றுது வந்துரைப்ப வந்தவென்றி சன்முன் கண்டாள், செம்மையிற்காண் பாவின்மற்றைத் தனம றைந்த செயலறிந்தே யருளெனறுந் திருக் கண் சாத்தித்,தம்முறையான் மணந்துமுடி சூடி வையந் தனையாண் டசிவலிங்கார்ச் சனையுஞ் செய்தான். (௪)

௫-வது பதஞ்சலிக்குநடனஞ்செய்ததிருவிளையாடல்.

திருமணத்தின் வந்தோர்க டமைநீ ராடிச் சென்மினிவ னென மூழ்கி முனிவர் தேவர், வருமவரிற் பதஞ்சலிமா முனிவன் றில்லை மன்றினடங் கண்டல்லாற் புசியே னென்னத், தருமகவான் சாத்திய பொன் மான மீது தனிர்ப்பொடுகண் டறிதியெனக் காட்டி முன்னை, யருமறைநூழ் கனகசபைத் தென்பால் வெள்ளி யம்பலத்தி னடம்புரி ந்தான் புசித்தான் கண்டு. (௫)

௬-வது பூதமுண்டதிருவிளையாடல்.

தடாதகைசொல் வானிறைவ கின்னே டிங்குத் தாலில்பலர் வரு வரென வமைத்த வன்னம்,விடாதசுரர் சுரர்நரகர் நரர்க ளுண்டு மிக வளரும் தொலைந்ததிலை யென்னும் வேலை,யடாதபசி யால்வருந்தி மெ லிந்த குண்டோ தரனுற்றே னெனவலற வீசன் காட்ட, வடாதுகயி லைக்கிரிகோ ரன்னக் குன்றை வாரியயின்றதுகொடியின் மங்கை நாண.

### எ-வது வைகையாறழைத்ததிருவிளையாடல்.

பொருவருமா தபத்திரந்தாங் கியகான் சிற்றாண் புசித்திளைத்தே னென்றன்னங் குழிக ளுண்கின், வருதலுகாற் றிரளையாய் விழுங்கித் தெண்ணீர்த் தாகத்தான் மடுப்பொய்கை வாவி கூடப், பொருபுனலு ள் ளனகுடித்தும் புனிதா நீரென் றேவிட்ட பூதகதி யழைத்துக் காட் ட, வொருவுகிழக் ககன்றபுனன் மீண்டுஞ் செல்ல வுறிஞ்சியது மணல்பிறங்க வாயங் காந்து. (எ)

### அ-வது கடலழைத்ததிருவிளையாடல்.

அன்புடைய வன்னைகட லாடற் கெண்ணி யவண்மொழிகேட் டீசனைத்தன் வசத்த தாக்கு, நன்புடையா டொழுதுரைத்தம் மாற்றங் கூற நயந்தறியா ரெனவிருந்து முகம்வா டக்கண், டின்புடைகின் முக வாட்டந் துணிந்து காண்பா னெண்ணியிருந் தேனெனவேழ் கடலு ங் கூவத், தென்புடவி கடவாதவ் வடைவின் வந்து சிவதீர்த்தத் தடத் துறவேழ் கடலென் றூர்கள். (அ)

### கூ-வது மலையத்துவசபாண்டியனையழைத்ததிருவிளையாடல்.

வாரிதியொன் றுவந்தனையேழ் கடலு மிங்கு வந்ததுநம் மிறைய ருளா லாடு கென்னப், பேருததி மாமடவ ராடிற் கொண்கன் பிறங் குசுத னுன்கன்றே டாடி னல்லாற், சாருறவா டாரென்பர் வரரென் றியாய்முன் சாற்றுதல்சாற் றப்பதியை யழைத்துக் காட்டிச், சீருதவு கணவனொடா டிப்போற் றுமுன் சிவலோகங் கொடுக்கவவர் சேர்ந் து வாழ்ந்தார். (கூ)

### க0-வது உக்கிரப்பெருவழுதியாரவதரித்ததிருவிளையாடல்.

பொன்மலைய மயிலரசு புரிந்து காக்கும் புவிமுழுதோர் புரமெனவே புரக்கும் வேந்தன், மன்மதிமா மரபோங்க வருங்கோ மாறன் மாறறுசுந் தரமாற னுதி மாறன், மென்முளரிக் கண்ணுவந்தோ னருளான் வேலோன் விமலதடா தகைவயினுக் கிரனு ரொன்றோர், நன் மகவரச் சடையொடுமுற் பவிக்க மோலி நனிகவித்தான் கோச்சடில வருமனென்றார். (க0)

### கக-வது வளைசெண்டுவேல்கொடுத்ததிருவிளையாடல்.

தாவறுமுக் கிரன்றலையிற் புவிவன் பாரந் தாங்கெனவைத் தருள்புரிந்தங் கிமையோர் வேந்த, னுவமுடி சாடுகென வளையுந் தந்து. நூக்குகடல் சுவறவெறி யெனவே லீந்து, மேவருகம் துகம்போல

விண்டையோர் வாழ்பொன் மேருவினை யடியெனவன் செண்டை நல்கித்,தேவர்புகழ் மணம்புணர்வித் தமலை யோடுஞ் சிறந்தகணத் தொடுமறைந்தான் செழிக்க வையம். (கக)

கஉ-வது நான்மாடக்கூடலானதிருவிளையாடல்.

தானுவலி யறிவானங் கெண்ணி யேவுந் தடங்கடலைச் சுரர்சித் தர் மனிதர் நாகர், பூணரவா வெனுமுன்விடக் குடித்த வென்றிப் புட்கலர் வருத்தமுதற் புயல்க ளுண்கை, மானுறுமா மழையையே வுறநான் மாடமாக்கிவலி தொலைவிக்க விகல்விட் டேகி,நானுமோர் தாழ்ந் தருச்சித்தான் வருணன் றாய நகரினையு நான்மாடக் கூட லென்றார். (கஉ)

கங-வது சித்தரானதிருவிளையாடல்.

மாத்திரைபொக் கணம்யோக பட்டத் தோடு மதுரையினெல் லாம்வல்ல சித்த ராகி, யேத்திமட வாரெல்லாம் வீதி தோறு மினவளைசிந் திடவெங்கும் வந்து லாவிச்,சேர்த்திமெங் காட்பிடிப்ப வகப்ப டாது சென்றுமருத் தின்றிசைக்கல் லிபத்தின் பாங்கர்,தோத்திரஞ்சே ராலயத்துட் டென்னர் கோமான் றொழுதிடுவான் வரமதியா திருந் தான் சொக்கன். (கங)

கச-வது கல்லானையைக்கரும்புதின்னுவித்ததிருவிளையாடல்.

வல்லவனீ யர்ச்சனைநீ சித்த னுயின் வாங்குவிகல் லியத்தால்யாங் காண்ப மென்றே, யெல்லவர்கா ணக்கைக்கன் னலைக்காட் டாமுன் வாங்கியயின் றிதுகமல நாள மென்றே,சொல்லருமார் பணிதாள வடமும் பற்றித் துனைவினையின் றதிரமுழங் கிடாமுன் சீறும்,வில்லரசனஞ் சியதி சயிப்ப வானில் விரைவினொடு நகைத்தொளித்தான் விமலச் சித்தன். (கச)

கரு-வது சங்கப்பலகைகொடுத்ததிருவிளையாடல.

தவிசுவிரும் பிப்புலவர் வேண்டக் கைம்மாப் பாவறிவ தொருபலகை தந்தே பின்பு,புவிபுகழ்கீ ரன்பரணன் கபிலன் முன்னுப் புகழ்ந் தடைவி னிருந்துதமிழ் வைத்தாங் கெய்தி, விவிதமெனுங் காலனீ ளத் தாற் செய்யுட் டலைமயங்கி மீண்டொருகான் மலைதல் கொண்டான், டவைபொருந்து பொருள்செய்து கூட்டித் தானு மேறினுற் பத் தொன்ப தின்ம ரென்றார். (கரு)

கசு-வது கிழியறுத்த திருவிளையாடல்.

திருந்துசிவ முனிதருமி தளர்ந்தேன் மன்றல் செய்வான்வன்
பொருளிலையென் றேத்த விங்குப், பொருந்துமடந் தையரெரீடுயர்
தலத்து லாவும புகழ்மாற னணைந்தமணங் கண்டீ தென்கொ, லருந்த
மிழா விதுபொருவப் பாடு வாரோ லளிப்பலென்றோர் பொற்கிழிநற்
சபையுட் டேக்க, மருந்தனையான் கொங்கென்றோர் கவிதை பாடிக்
கிழியறுப்பான் வழங்கியொப்பித் தனன்கீழ் நின்றே. (கசு)

கஎ-வது நக்கீரனைக்கரையேற்றின திருவிளையாடல்.

நாவலரன் பர்கள்பிழை பொறுக்குஞ் சொக்கே நக்கீரன் பிழை
பொறுத்துன் னுதற்கட் டீயால், வேவுறச்சுட் டிடுதுயர்தீத் தருளை நல்
கி விளங்கியசொல் லெனும்புகழ்ந் தாதி கேட்டுப், பூவைகயற் கண்
ணியொடும் பொய்கை மேவிப் பொன்மலர்ச்செங் கைகொடுத்துக்
கரையேற் றென்றே, தேவர்புக ழாலயத்துட் சென்று போற்றத்
தேவியொடுஞ் சென்றுகரை யேற்றி னானே. (கஎ)

கஅ-வது குறுமுனிக்குத்தமிழுரைத்த திருவிளையாடல்.

ஒண்கவிஞன் றம்பின்னை முறுவீ ரற்கிங் குரைதமிழ்நூ லருள்ப
வர்யா ரெனவெம் மன்னை, திண்புவிப்போந் துயர்தருதென் றிசை
வை கென்று தென்முனிக்குக் கயிலையின்முன் புகன்ற ஞான்று, விண்
புகழ்முத் தமிழுரைத்தா யென்றி றைஞ்ச விளம்பியயான் மறந்தனனீ
யினைத்தி ருந்தா, யென்வழிநன் றென்றவற்கு முணர்த்து வாயென்
றியன்முனிவா வெனவழைத்துள் ளுபதே சித்தானே. (கஅ)

ககூ-வது ஊமைப்பிள்ளை தமிழறிந்த திருவிளையாடல்.

சங்கத்தா ரிறையவனூர் பொருட்கே ளேரும் தகைமைபெற வுரை
யெழுதி மலைந்து முன்சென், றெங்கட்கீ தறிபவனே யல்ல சொல்
லென் றியம்பவெல்லா மறிவனிவ்வூர் வணிகன் மைந்தன், றங்கவு
ருத் திரசரும னூமன் றன்னைத் தூயமண்ட பத்துவைத்துச் சொன்மி
னன்மைக், கங்கமுறும் புளகெனப்போந் திருத்திக் கண்டே யக்கீரன்
முதன்மூவ ருரைகொண் டார்கள். (ககூ)

உ0-வது இடைக்காடன்பின்போன திருவிளையாடல்.

கூறுமிடைக் காடனியற் கவிதை பாடிக் கொடுகோண மன்னனிக
ழ்ந்து தள்ள கொங்தே, வீறுயரா லயத்தணுகிப் பொருணீ சொல்லுன்
மெலியவென மறைபுகலு மிகந்த துன்னை, மாறகலுன் றேவியயற்

றிலையென் றேத்தி வணங்கேக யானுமே குவலென் றேகி, யேறியவ் கத்தொடிருந் தழைப்பப் போந்தா னிடத்தைவட திருவால வாயெ ன்றார்கள். (௨௰)

௨௧-வது கடல்சுவறவேலெறிந்ததிருவிளையாடல்.

சீலமது னையயாழி கொள்வான் மேவச் சிவனருண்ணா னக்க ண்ணுற் கண்ட போதே, யேலவருங் கனவினிலுக் கிரமா றன்பா லெயதியரும் புதல்வகே ளெதிர்சென் றேகின், றேலமொடுங் கழிய வருங் கடலை யாமுன் னுதவுவே லெறிந்துசுவற் றென்று போதும், வேலைசுவ றிட்டவேலை யெறிந்தா னும் வேலைவடி வலம்பகின்று வென்று னன்றே. (௨௧)

௨௨-வது வலைவீசிமணஞ்செய்ததிருவிளையாடல்.

அம்பிகைக்கா கமங்களியம் புங்காற் கேட்ட வரியபொருண் மற ந்திடக்கண் டமலன் சீறி, வெம்பாதர் குலத்துதிபோ கெனவு தித்த மெல்லியைக்கொள் வானுருக்கொண் டனுகிக் கேட்பக், கம்புதநிக் கொலைமகர வனையொன் றுண்டெங் கவலறநீ வலைவீசிப் பிடித்து வந்தா, னம்புதரு குவமெனவம் முறையி னேகி நனிமகாம் பிடித்த டைவின் மணஞ்செய் தானால். (௨௨)

௨௩ - வது வளையல்விற்றதிருவிளையாடல்.

மாதவர்க ளாச்சிரமத் தெய்தி மாதர் மாமைகவர்ந் தவர்கொழு நர் சவிப்பப் போந்தே, கோதையரங் கீன்வணிகர் குலத்தி லங்கக் கோலவளை வணிகனுக் கூறிச் சென்று, வீதியின்மா லாக்கிச்சூ லரிக் கித் தியின் வீழ்ந்திடவா ளொருப்படுங்கால் விருப்போ டஞ்சி, யாதியு ரு மறைந்தொருதன் னுருவங் காட்டி யவருவப்ப வுயர்குலமென் ற ருளிச் செய்தான். (௨௩)

௨௪ - வது விடையிலச்சினையிட்டதிருவிளையாடல்.

காடுவெட்டி யென்பானோர் பழுதில் சோழன் கனபடையோ டெய்திவைகை வடதீ ரத்தி, னுடிவணங் குதற்கிரங்க வல்லி னொக்க னயந்திரவு பகலாக்கிச் சென்று மாற, னீடுகெயல் பொறித்தடைத்த வ டபால் வாயி னெடுமதிலி னெடுமுரித்துக் கொணர்ந்து தான்றன், சேடுருவங் காட்டிவிடுத் தடைத்தா னேற்றின் றிகழுமிலச் சினைவா (௨௪)

## உரு-வது மாணிக்கம்விற்றதிருவிளையாடல்.

செழியர்குலத் தருளிறு னுதித்தோர் மைந்தன் செலும்பருவ னும ந்தினடல் வேட்டைக் காட்டிற், றழியபுலி தாதையைக்கொண் டே க வங்குச் சார்பில்லாப் புதல்வர்பிதி கவர்ந்தே கக்கண், டொழிவின் முடி சூடுவான் மறைத்துக் காத்த வமைச்சர்முடிக் காமணியின் றெ ன்றே யுங்காற், கொழிதமிழ்தேர் பட்டினத்துச் செட்டி யென்று கொணர்ந்துவிற்றான் மாணிக்க மவுலி சூட்ட. (உரு)

## உசா-வது யானையெய்ததிருவிளையாடல்.

தவறறுமீ னவனையொரு சோழன் சென்று தன்படையால் வெல மாட்டான் சமணர் தம்மாற், புவனிவளர் மதுரையையோர் கவள மாகப் போந்துவிழுங் கெனவிட்ட களிற்றை வீழ, வெவர்புகழ்பே ரட்டாலை மீது நின்றே ரேவிடக்கண் டியானைமலை யென்றா னன்று, குலைகொள்சொரி யிலத்தியிலத் திமலை யென்றார் கோறெட்டா ன ட்டாலை வீர னென்றார். (உசா)

## உஎ-வது வாதவூரருக்குபதேசித்ததிருவிளையாடல்.

கணநாதர் தமிலொருவன் விடையிற் போந்து கம்ழமதுக மகிழ் வாத புரத்து வாழுந், தணராமாத் தியர்குலத்துட் டோன்றி மாறன் றனக்குரிய மந்திரியா யிவுளி கொள்வான், வணமார்பொன் னேடு பெருந் துறைசேர்ந் தாசான் வழங்குபதே சமும்பெற்றுத் தமிழ்பா டித்தன்,னிணையாந்தொண் டருக்கிரும்பொ னீந்தே சென்ன வேகி னான் றென்மதுரை வேந்தன் றன்பால். (உஎ)

## உஅ-வது நரியைக்குதிரையாக்கியதிருவிளையாடல்.

வருமிவுளி யிடம்போதா மதுரை யென்றோர் மண்டபத்து மா றனுயர் சிறப்பின் வைகி, யொருமையொடு வினவவரும் வருமென் றோதிப் பாதவிப்ப வுரைத்துவிட்ட முறைசெய் வோர்க, ளிருநிலெ ணக் கொடுந்தண்ட மாற்றா ராகி யின்புறுவா சகமோத விரங்கிச் சொக்க,னருநரிமா வாய்க்கொணர்ந்திட் டுகைத்துக் காட்டி யாடை யும்வாங் கிப்பரிமாற் றறுதி யென்றான். (உஅ)

## உகூ-வது குதிரையைநரியாக்கியதிருவிளையாடல்.

அருணாற்பங் கியிற்கட்டும் பரிக ளெல்லா மருக்கனெழு முன்னி மையோர் நகைப்ப வாழ்ந்த, பொருளாரம் புவிமாறன் பொருமி யேங்கக் குறுநரியாய் நெடியகுரல் காட்டப் போந்து, மருளாருக்

துறையாள ருரைப்பச் சால மகிழ்ந்திருந்த மன்னவன்பால் வாதவூரர், வெருளாதுண் மகிழ்ந்தறியார் போன்று செல்ல வெகுண்டுகொண்டு சிறைவைத்தான் மிகவுஞ் சீறி. (௨௯)

### ௩௦-வது மண்சுமந்த திருவிளையாடல்.

மீதுயர்ந்து பௌவமெனப் பெருகும் வைகை மேன்மைநதி யுடைப்படைப்பா னடைந்த வம்மை, யாதரிக்கும் பிட்டுதிர்க்கு மண்சு மந்தாண் டடிபட்டம் மாறெங்கும் படவிதேதென், றோதுங்கான் முனியைவிடு விடென்றோர் வாக்காங் குயர்வான்றோன் றச்சிறைவிட் டழைத்துவ ஞ்சிப், பாதமல ரிறைஞ்சிநம்பிச சையிற்போமென்று பகர்ந்துவிட்டான் பெயர்மாற்றான் மாற்றா னென்றோர். ()

### ௩௧-வது விருத்தகுமாரபாலரான திருவிளையாடல்.

வாமுனிவன் றொருவன்றன் மகவைப் பாக வதன்வாவே தங்கண்டீங் கிடச்சி றுற்றா, றுரைசெயமுன் டென்றுறி விடுப்பச்சென்றே னுறுசைவன் மகளென்று தொடானம் மீச, னாவிருத்தனாய்ப்புகுந்துள் குமாா னுகி நனிமாமி வரவழும்ப லனுமாய்க் காட்டிப், பெரிதுமழ கிதென்றுதள்ள வுருவங் காட்டிப் பேதையையுங்கொண்டகன்றான் வியக்க யாரும். (௩௧)

### ௩௨-வது மாறியாடின திருவிளையாடல்.

தென்னனுவந் தறுபத்து மூன்றாய்ந் தெண்ணெண் டின்கலைவல் லானெனவாங் கனைந்தோர் பட்டன், மன்னியநாட் டியமறியாய் வளவ னுமம் வருசகல கலாவல்ல னென்னக் கற்றாங், குன்னுமுன்னோர் தாள்வருத்தம் பொறுவெனு நீச னொருதாளி னின்றானென்றழுங்கு வான்கண், டன்னவட கீழ்பாலிந் திரற்கு முன்ன மாடினான்கான்மாறி வெள்ளி மன்றில். (௩௨)

### ௩௩-வது பழிக்கஞ்சின திருவிளையாடல்.

மனைவியொடும் போந்திருந்து வழிக்க ளன்மேல் வனசான்முன்கனிபெய்த வம்பு வீழ்ந்து, தனியாணம் வரவருவே டனைத்த தேத்துத்தலைக்கடைசார்ந் தபயமிடும் பனவ னோடு, நனியிருளின் மனமனைபோ யருளா னிற்ப நமன்படர்மா தினைக்கொன்ற விசேடஞ் சொல்லி, யினியிவனைப் பசுவாற்கொல் வமெனக் கொல்ல வெழில்வழுதி யிதுணர்ந்தெளிந்தான் மறையோ னுள்ளம். (௩௩)

## ௬௪-வது மகாபாதகந்தீர்த்த திருவிளையாடல்.

அனையமன மருட்டியொரு மறையோன் புல்லி யுளவஃறியா வ
த்தனைமண் கொட்டால் வெட்டாக், கனையிருளிற் கொடுபோங்கா
ல் வேடர் மாதைக் கைக்கொடுசெல் வாரடித்த புண்ணீமொய்ப்பத்,
துனைவினின்மன் னுலகினில்வா வென்பா ரின்றிச் சுழன்றுதவத் தீ
ர்கடம்ப வனத்தின் மேவத்,தனையடைந்தோர்க் கருள்சொக்கன் வெ
றுத்து வேளைத் தவிராமா பாதகத்தைத் தவிர்த்தா னன்றே. (௬௪)

## ௬௫-வது அங்கம்வெட்டின திருவிளையாடல்.

அன்பர்தமக் கிடர்வருமோ கருணைச் சொக்குண் டாகவெனும்
பணிக்கணிடத் தடைந்து கற்குந்,தென்பாவா யுதக்கலைகள் பயில்வோ
ர் தம்முட் சித்தனெனுமொருத்தம்பன் முற்றுங் கற்று,மின்பாவா சான்
மனைவி தொடக்கண் மகன் விருத்தனென்றோ வதுமினைந்தாய் வெ
ட்ட வாவென்,றென்பகர்வ தவனுருக்கொண் டறைகூ றிச்சென் றி
ல்லிறுட்போய் மறுகேறி வெட்டி வீழ்த்தான். (௬௫)

## ௬௬-வது மதுரையான திருவிளையாடல்.

வெஞ்சமணர் வைதிகமன் னெறிபொ றாது விடுமரவை நாகம
லை யென்ன முன்னம்,பஞ்சவனோர் கணையிறை லெய்து வாயாற் பட
க்கக்கும் விடம்பரந்து நகராற் றுது,நஞ்சணிகண் டாவெனச்செவி
ந்தேநத் திங்க ணமுதம்வியாளன் மதுரையென மதுர மாக்கி, வஞ்சகர்
பின் பகைவிட விடையை யேவி வலிதொலைத்தா னிடபகிரி பசு
வெற் பென்றார். (௬௬)

## ௬௭-வது வெப்புத்தீர்த்த திருவிளையாடல்.

புகலியினில் வைதிகவா ரணமென் றியாரும் போற்றியசம் பந்த
னென்றோர் புதல்வர் தோனறித்,தகவுமையா டிருமுலைப்பா லமுத மு
ண்டு தந்தருண்ஞா னம்பெற்று மதுரை மேவிப், பகவனரு ளால்வி
ட்ட மடத்தி லிட்ட படுதழன்மா றனுக்கேவித் தனியாவெப்புந்,திகை
யமணோ காணவொழித் தொழியாக் கூனுந் தீரநிமிர்த் தார்பூனிதத்
திருவெண் ணீற்றால். (௬௭)

## ௬௮-வது கழுவேற்றின திருவிளையாடல்.

திரண்டமண ரெரியினிடை யெழுதி யிட்டாற் றிறல்வேகா
வேடுடையார் வென்றா ரென்று, முரண்டருவா துரைத்தேறி யழல
வன்னி மூடுகியிசை யேடேடையும் வேவ வேவா, தாண்டருஞ்சலே

டெடுத்தார் தம்மோ டின்னு மாற்றினிட வாவென்றுற் றிட்டுத் தம் கள், காண்டருமே டாழிசெலக் காழி யாரே டெதிரேற வேதினார் கழுவாய் மீது. (கஅ)

கக-வது மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.

அடற்படையா ளனவேண்டு மம்பொ னல்கி யரனடியார்க் கமுதாக்கி யளித்த வென்றிச், சுடர்ப்படைவேற் படைத்தலைவன் கொணர்ந்த வீரன் சுந்தரசா மந்தனென்போன் றன்னைக் கூவி, மிடற்ப டைமீ னவனுண்ட படையா வென்ன விமலனுண்டே லவையுண் டென் றுரைத்தோ னுக்காய்த், திடப்படுபுள் ளியுங்காட்டி நாட்டிச் சொக்கன் சேனைகொணர்ந் தரியுகைத்து மெய்க்காட் டிட்டான். ()

சo-வது உலவாக்கிழிகொடுத்த திருவிளையாடல்.

ஈசனையுன் னுன்றேத்தி மறையோர் தம்மை யிகழ்ந்திமையோ ரவிவெள்ளி குன்றி வானும், பெருலகம் பொழியாமல் வாடக் கண்ட பெருவழுதி தளர்ந்திரவு துயிலும் போது, கேசமுனி வரைமறந்த தா னின் றுடு கிழிதளர்ந்த தவனைம்போற் பழிச்சி னென்றும், தேசொடு கீா ணிப்பொழியும் பெயும்வா னென்றே செப்பினன்பொற் கிழிக னவில் வைத்தான் சென்றே. (சo)

சக-வது மாமனாய்வந்துவழக்குரைத்த திருவிளையாடல்.

மகவிலா வொருவணிகன் றங்கை மைந்தன் மைந்தனெனத் தன் செல்வ நல்கி யிங்குத், தகைமைபெற விருமெனைத் தேகத் தள்ளித் தாயத்தா ரில்லமொடு தனங்கைக் கொள்ள, விகழ்ப்போம் வனிதை மக வொடுங்கோ யிற்போந் திறைவனைச் செய்திசொல்ல விரங்கி ச் சொக்கன், மிகையறுமா துலனுருக்கொண் டவையி லேறி வேண் டானை விடவென்றான் வியப்ப யாரும். (சக)

சஉ-வது அட்டமாசித்திபகர்ந்த திருவிளையாடல்.

அரன்கயிலை யின்கணிறைஞ் சியக்கி மாரோ ராறுவருயர் சித்தி யெட்டுங் கேட்குங் காலைத், திருமுறைக்கே ளாதுமறந் திறைஞ்சு நீர் போய்த் தென்னாட்டிற் பட்டமங்க லத்தாற் கீழ்வீழ்ந், தாறாறுகல் லாக்கிடத்திர் நீயக் கானத் துறைகுவம்யா மவனுற்றென் சித்தி யா வும், விரவவுறை குவறுங்கல் லுருநீத் தென்ன மேயினர்க்கு மேவிய நிவித்தா னுய்ய. (சஉ)

### ௬௩-வது தண்ணீர்ப்பந்தல்வைத்ததிருவிளையாடல்.

பரிவேத்தா வெனும்வழுதி தமையன் கொள்வான் பகர்ந்திடுபெண் கொண்டபய னெடுங்கூ டிப்போய், வரவேற்று வடகாட்டுப் பலகையும் வென்று வந்துதமிழ் மதுரைகொள்வா னெதிரக் கண்டு, தெரிவேகத் துடன்முன்னோன் சொக்கனுண் டென்று சிந்தித்தேற் றிடச்சென்று பாலை யாக்கி, யரிபோற்றுங் கடவுளனை யினத்தற் சேர்ந்த வரவுவெல வுதவிவைத்தான் றண்ணீர்ப் பந்தர். (௬௩)

### ௬௪-வது இந்திரன்முடிமேல்வளையெறிந்ததிருவிளையாடல்.

மன்னவர்மூ வரும்வாவிந் திரனைக் கென்னீர் வந்ததென விருவர் மழை யென்று போற்ற, வுன்னுமுன முதவியுணா கொடாத மாறற் குறுவலிகாண் பானு முதவப பூண, வின்னருளா லிருந்துளங்கண்டேகு மென்ன வேவினருள் வழுதிபுய லரசர் தம்மை, மின்னிகள மிடவனெனுந் தோலை போக்க வேளாளர் பிணையில்விட்டான் மழைமல்கிற்றால். (௬௪)

### ௬௫-வது பொன்னனையாளுக்கருள்புரிந்ததிருவிளையாடல்.

பூவணத்திற் பொன்னனையாள் பதியி லாண்முன் புனிதனுருக் கும்பிடுவாண் மெழுகு சாத்தி, மேவணகற் பொருள்பெறாள் சொக்குண் டென்று மிகவருந்துங் காற்சித்த ராச்சென் றுண்டு, மாவணைவல் விரும்புதாச் சொல்லித் தியின் மாட்டென்று பரிசனஞ்செய் தொளித்தான் றந்து, பாவணைத்தாள் சொலிச்செய்திறை யுருக்கண்டாண்மெய்ப் பத்தியெழில் கண்டள்ளி முத்தங் கொண்டாள். (௬௫)

### ௬௬-வது சோழனைக்கொடுவர்தாழியிலாழ்த்தியதிருவிளையாடல்.

செம்பியன்றென் மதுரைகொள்வான் றிறங்கள் பேசிச் சென்றடா வெந்தையுண்டென் றிசைக்கு மாறன், றம்பமென வவனெதிரே தோன்றச் சொக்கன் றானுபெரி மேல்வேடக் குதிரை யாளாய், நம்புவிசை போந்துபரி காட்டிக் காட்டி கணிபாய்ந்து மேறடத்துத் திரத்தேற, வம்பினுடன் பாய்ந்துகுசை தாங்காச் சோழ மனைகொண்டா முத்தடங்கொண் டாழியென்றார். (௬௬)

### ௬௭-வது திருவாலவாயானதிருவிளையாடல்.

ஓங்குயிர் ளயத்தச்சுக் குலையா வாறிங் குயர்ந்திடகிற் றலினடுவூ சென்றார் மாறி, நீங்கியபின் னெருசெழியன் றோன்றிச் சொக்கே நீணகருக் கெல்லைகாட் டென்று போற்றப், பாங்குபெறக் கட்செட்

ன்று விட்ட பாந்தள் படியினில்வாய் வைத்துத்தன் கதியாற் சூழத், தேங்குபுகழ்ப் பதிமுடங்கல் வாய்வைத் தத்தாற் றிருவால வாயால வாயென் றார்கள். (௪௭)

### ௪௮-வது வரகுணபாண்டியனுக்குப்பிரமகத்திதீர்த்துச் சிவலோகங்காட்டியதிருவிளையாடல்.

சினமாவேட் டம்போய்மீள் வாசித் தாளிற் றிகழ்சிவியில் வழி யுறங்கு மறையோன் றுஞ்சக், கனசாயை பலதருமஞ் செய்து நீங்கக் காணன்மெய் வருந்துங்கால் வெல்வான் போந்த, வினைமார்செம் பிய ற்செயித்துத் [illegible] கைக்கொண் டிடைமருதிற் பிரமகத்தி யொழி த்துப் போகி, மனமார்வண் புலிக்காணக் காட்டென் றேத்தும் வரகு ணற்குச் சிவலோகங் காட்டி னானால். (௪௮)

### ௪௯-வது விடைக்குறியம்பெய்ததிருவிளையாடல்.

அன்புடையோ னொருசோழன் மதுரை கொள்வா னணுகலுங் கண் டுளந்தளர்ந்தா லவத்துட் சென்றே, மன்பரம னருள்பெற்றுச் சிறிய தானை மருங்குவரப் போரின்கண் பொருவான் போந்த, பொ ன்பரவு முளந்தெளிந்த செழியற் காயோர் பொருகணையா லருக்கணை யுஞ் சேனை மாளக், கொன்பரவ வணைந்தறிவான் பொறித்து விட்ட கோலின்விடை கண்டுவிடை கொண்டு போனான். (௪௯)

### ௫௦-வது உலவாக்கோட்டைவைத்ததிருவிளையாடல்.

அஞ்சியவன் புடைவேளாண் டலைவ னொரு மரனடியார்க் ககம கிழ மாதும் தானும், விஞ்சுமனத் தழுதுபடைத் தொழுக மாய மிடி புகுந்தாங் கமுதளித்தன் முட்டக் கண்டே, யெஞ்சினமண் ணிற்ற னிசும் தருவா ரில்லை யிபவரைக் காட்டாயேன் மடிவே னென்ன, வஞ் சிடான் கனவின்கா ணப்போய்க் காட்டி யுலவாமன் மிகவரிசிக் கோட்டை வைத்தான். (௫௦)

### ௫௧-வது மூர்த்திக்கரசளித்ததிருவிளையாடல்.

வைதிகத்தை யொழித்தமணர் கையின் வீழ்ந்து மதுரைகொ ண்டு வழுதியைவென் றுலகை யாளுங், கைதவக்கன் னடனையுமேன் மழையான் மாற்றிக் காதலினாற் சாத்தொருநாண் முட்டக் கண்டு, பைதலொடு சந்தனைத்தான் முழங்கை வட்டப் பாறையிற்றேய்த் திடு மெம்வணிக மூர்த்தி தன்னை, மொய்சடைமா மவுலியக்க மணிப்பூ ணீறு முழுப்பூச்சா மும்மையா லுலகாள் வித்தான். (௫௧)

### ருஉ-வது காரியார்பாரியார்பாப்பகுத்துகொண்டதிருவிளையாடல்.

இலகுபுகழ்க் காரியார் பாரியாரா மிருவர்கவிப் புலவர்வட் கா ட்டி னின்று, நிலவுபுகழ்த் தென்னனைநன் கவிதை பாடி நேருங்கா ணெறிமயக்க முறக்கண் டீசன், றிலகவடி விடையனாய் நிரையான் மேய்த்துச் செலும்வனத்திற் றோன்றியீது முன்னங் தென்னர்க், குல குபுக ழுரியதென நவின்று காட்டி யுடன்பகுத்து சாத்துதமிழ் மாலை கொண்டான். (ருஉ)

### ருங-வது புலிமுலைபுல்வாய்க்கருளினதிருவிளையாடல்.

சித்திரைச்சித் திரைக்குவந்து மகவான் பூசைசெயுங்காலை மணை ப்புரத்தை நோக்கிச் செல்லு, மெத்துபுகழ் வணிகன்கண் டவண்ட ரித்து வியன்வனத்தை மற்றைநாட் சென்று சொல்லப், பத்தியொடு வருஞ்செழியன் புலிமுலைப்பால் பயந்தபுல்வா யுணக்கண்டு விசேட முன்னா, நித்தியவிப் பதிக்கெல்லை காட்டென் றேத்த நிகழ்சித்த னெ னவெல்லை காட்டி யருளல். (ருங)

### ருச-வது விறகுமாதுசாதாரிபாடினதிருவிளையாடல்.

இசைவல்லா னெனும்பாணன் வடதே யத்தா னெய்திடமா று னைபத்தி ரனைவா வென்றே, வசையில்லா யவனெடுபோ டுகவா தென் ன வந்துசொக்கன் டென்றிருப்பப் பாணன் வேந்த, னிசைவில்லா வடிவுடையென விறகு கூறி யாளையிருளிற் சாதாரி யிறைவன் பாடத், திசையில்லா தொளித்துவிடி வதன்முன் போனான் றிறற்பாணன் வி ளையரொடும் வெருக்கொண் டாங்கு. (ருச)

### ருரு-வது திருமுகங்கொடுத்ததிருவிளையாடல்.

இன்னிசைபா டும்புகழ்ப்பத் திரன்கொ டுப்பா னிறைவனிதி யில்லை யென வருந்துங் காற்போய், மன்னுமதி மலிபுரிசை மாட மென்று வரைந்தொர்திரு முகங்கனவி னவிற் காண, முன்னுதவி நம்மன்ப ன் சேர மான்பான் முடிகென்று விடைகொடுப்பப் போனான் சால, பின்னுபொருள் வேண்டுவன நல்க வாங்கி மேவியிருந் தனன்வழங்கி ச் சொக்கை வாழ்த்தி. (ருரு)

### ருசா-வது பாணபத்திரனுக்குப்பலகையிட்டதிருவிளையாடல்.

பெருகுபொருள் கண்டுமனம் பொறாது மற்றப் பெரும்பாண னிருப்பப்பத் திரனுமன்பா, லுருகுமிசை முச்சந்தி யன்றிக் கங்கு லுற நன்றும் பாடுமென் றெய்திப் பாட, வெருவுறமெய் நோவக்கண்

மாரி யேவ மெய்யன்பு கண்டியாரும் வழுத்தச் சங்கத், திருமையிற் பலகைதந்தோ னிருந்து பாடென் றிசைப்பலகை கொணர்ந்திட்டா னினிமை கூர்ந்து. (ருசு)

ருஎ-வது இசைவாதுவென்ற திருவிளையாடல்.

கலையறுபத் திரண்மனைவி முல்லை மாலை கனிவழுதி நினைவுதனைத் தள்ள காணிப், புவனியிற்றீ பாந்தாத்து நின்றுங் தேடிப் பொருவி லொரு பாடுவாட் கொணர்ந்து தன்பே, ரவையினிற்றேற் றூன்சும ப்ப னென்று பேசி யறுதியிசைத் திட்டவையிற் பாடிச் சார்ந்த, சிவ னருளால் வந்திங்குறலி மாலை முல்லைத் தேமாலை கழுத்தினிடப் பெ ற்று னன்றே. (ருஎ)

ருஅ-வது பன்றிக் குழலைகொடுத்த திருவிளையாடல்.

உயர்தந்தை யிறந்திடப்பன் னிருவர் மைந்த ரூழ்வினையாற் கா ட்டுறைவன் னியர்கள் போந்தோ, ரயர்வறநோற் றிருப்பமுனி வ ன்குழ்ந் தேதம் மங்கைகொட்டி யிகழ்தருவோர் தம்மைப் பன்றி, வயினுதிமி னெனமுனிவன் சபிப்பத் தாயும் வந்துயா முனம்வேட் டைக் காட்டிற் றஞ்ச, யியனுறதா யிழந்தகுரு ளைகளீ ராறு மினிது யத்தாய் வடிவின்முலை யூட்டி னனே. (ருஅ)

ருகூ-வது பன்றிக்குட்டிக்கருள்புரிந்த திருவிளையாடல்.

அருளுமையாள் பெரியவனீ சிறிய பன்றி யாகமெடுத் தணிமு லைப்பா லளித்தா யுண்ட, குருளைகளீ ராறுமுய்யும் வண்ணங் கண் பார்த தருளெனநம் மிறைகருணை கூர்ந்து பார்ப்பத், தெருளுறுவே ளாண்டலைவன் மைந்த ராகித் தென்னனுக்கு மந்திரியாய் விசயஞ் செய்த, மருளறுவன் னியர்பன்றிக் குறும்ப ரென்றூர் வளர்ந்தமலை யைப்பன்றி மலையென் றூரால். (ருகூ)

கூ0-வது கருங்குருவிக்கருள்புரிந்த திருவிளையாடல்.

கொடிக்கஞ்சிக் கருங்குருவி போந்து கூடற் கோயில்வல நாளு ஞ்சூழ் தரவே சொக்கன், படிக்கஞ்சா மிருத்தியுஞ் சயம தென்னும் பகர்வென்றி மந்திரத்தை யுபதே சித்து, மிடிக்கஞ்சாய் கிளைக்கொ டு முச்ச ரித்து வெம்பகைவென் றிருக்கெனவந் தினத்த ளோடு, வடி க்குங்கூர் மூக்கலகாற் காக்கை யாதி வலிதொலைக்கக் கண்டுலகோர் வலியா னென்றூர்.

௬௧-வது மகாமேருவிற்சென்றெங்கயலும்பொறித்ததிருவிளையாடல்.

அந்தணரை யிகழ்ந்திடுமோர் வழுதி தாக்கு மவனியுளோர் மழையின்றி வருந்தல் கண்டிங், கெந்துசெய்வே னெனக்கனவி லீசனெய்தி யிருஞ்செண்டான் மேருவைச்சென் றுணர்த்தி வேண்டு, மைந்துதனந் தறித்தெடுத்துன் கயலு மிட்டு வந்தவனை வாழ்வித்தி யானோங்கக், கந்தரவான் பொழியுமெனச் சொன்ன செய்து காலமழை பொழிதரப்பல் லூழி வாழ்ந்தான். (௬௧)

௬௨-வது சாட்சியமைத்த திருவிளையாடல்.

மல்குபொரு ளுடைவணிகன் கன்னி தன்னை மீதுளைவளம் பதிமிருக்கு மருக னுர்க்கே, நல்குமெனச் சொலித்துஞ்சக் கேட்குஞ் சுற்ற நகரத்தா ரோலைவிட வந்தோன் பாம்பா, லொல்குமிடை யொடும்போங்காற் புறம்ப யத்தி லொழிந்தெழுப்புங் கவுணியரான் மணந்து போத,வல்குமணம் பொருதமுன்கொண் மனைவி காண வழைத்தான்முக சான்றீசன் கிணறு வன்னி. (௬௨)

௬௩-வது நாரைக்கருள்புரிந்த திருவிளையாடல்.

வதிவாவி வற்றமீ னற்றுப் போக்தோர் மாதவர்ச் சிரமத்தாயிட்டு காமுன், புதுநீரா டுறுதவமா முனிவர்ச் சூழ்ந்து புணராமீனவியாது நிற்பக் கண்டு,துதிஞானம் பிறந்துகொலை தவிர்ந்து போதது சொக்கனரு ளுடையனெனக் கோயில் சூழும், விதிநாரை வந்தனைய விரும்பி வாவி மீதெழுந்துச் சிவலோகங் கொடுத்தானன்றே, (௬௩)

௬௪-வது வேதங்களைகண்ட திருவிளையாடல்.

பொற்புறுகண் ணுவன்முதல முனிவ ரெல்லாம் போந்துநிரோமாயுகத்தா திக்கண் கூடி, முற்புகலுங் கலியுகத்தி லிறந்த பான்மைமொழிபவர்யா ரென்றுவருந் துங்கால் விண்மேற், றற்பரமா மதுரைதனி லிருப்பல் வந்தாற் சாற்றுவலென் றருளக்கேட் டணைந்துபோற்ற, தற்பரம குருவடிவாய்ச் சொக்கன் வந்து நான்மறையும் விபரமுரைத் தொடுங்கி னான். (௬௪)

இத்திரு விளையாடற் சரிதை முற்று மியம்பினமுக் கிரனெனுமோர் தென்னன் சொக்க, நாதனையே நியமமாச் சேவை செய்வானெண்ணுங்காற் கதம்பவனத் தினுங்கின் றேகித், தாதவிழ்பூம் புன்னைவனத் திலிங்க மாகிச் சங்கரனு வுடையெனும்பேர் தரித்துப் பாதி,

பாகொருபால் விளங்கவெதிர் காட்சி கலகி மலினியதி கயலிலை புரி
யு மென்றும். (கூகி)

மதுரைத்தலவிசேடம்.

வேறு.

பொங்குபுகழ் மதுரேச னனாதிசதா சிவமென்னும் பொருட்கு மேலாய்த், தங்குதுவா தசவந்தப் பொருளாகி யப்பாலாய்ச் சுயந்தா ளுகி, யெங்குநிறை சர்வத்ர பரிபூர ணப்பொருண்மா விராச லிச, னங்கவன்மா றடிசான்றென் றெசுர்வேதம் வியாதநூ லடையிற் கூறும். (கக)

வந்தடைந்தோ ரியாரேனு மிருதமின்றி யமிருதமா வசித்துமுன்னைப்
பந்தமறு சீவன்முத்த ராயெடுத்த சனனத்திற் பரனே யாக
முந்துதவிப் பாகாத பரவிந்து சொக்கலிங்க மூர்த்தி வாழு
மிந்தவிதி யான்மதுரையமிர்தபுரி யெனவியம்பு மெசுரு வேதம். ()

வேறு.

ஆழி யாழி கடைந்திமை ளமிர்த மதுரை நகர்பரவ
வாழி யமிர்த புரியாய தென்னும் வேத மாலயங்க
சூழுங் குலசே கரன்செய்நகர் சுத்தி பெறச்சொக் கன்றரித்த
வூழி னிந்து வழுதைவிட வுரைக்கு மப்பே ருயர்சுருதி. (கூ)

இடபா சலத்திற் றுணைவரொடு மிருந்தச் சுனங்கல் வியாணப்பிரத்
தடல்வேல் வழுதி மகளாய சித்திராங் கனையை மணந்தடைவின் [ரே
மிடல்சேர் வரம்பெற் றனன்கூடல் விமலன் றிருந்தா டொழுதென்
வடநூல் புராணம் பாகவத மாபா ரதமு மியம்பியதால். (கூகூ)

விண்ணு ரிமையோ ரந்தியத்தின் மிருத்து வரமே தினிப்பிறந்து
தண்ணூர் கிருது மாலிகைநன் னதிநீர் படிந்து தமிழ்மதுரைக்
கண்ணூர்சொக்கைத்தொழுதிறைஞ்சிக்கருதும்வரம்பெற் றிருந்தேகி
யுண்ணு ரமுதுண் டிறவாமை யுற்றா ரெனுநூற் பாகவதம். (எO)

கேத மகற்றுந் தமிழ்மதுரைக் கிருது மாலை நதிதோய்ந்து
மோதி வருங்காற் றுறுதிசையின்மொய்த்துவாழ்பல்லுயிரனைத்தும்
பாதி மதிவே ணியனருளாற் பரமா முத்தி யெய்துமென
வாதி யைந்தாம் வேதமெனு மரும்பா ரதநூ லியம்பியதால். (எக)

வேறு.

புரிவளையந்தளிர்மலர்க்கையங்கயற்கட்பூவையைப்போற் றுலகிலுள்ள
பரிபுரத்தா ளாறுசத்தி முதற்சத்திக் கிறைவிபரா சத்திக் காதி
விரிபுகழ்சே ரிமாசரா சேசுரிசிங் காசனமே லிறைவி யென்றே
திரிபுரசுந் தரிவித்தை யெனும்பொதுமக் கிரநூலிற் செப்பு மன்றே. (

சிவந்தொளிருங் கதம்பவனம் பரமசிவன் மூலமுனை நிலையீர்ய் ஐங்கு, மூவர்த்துறைக்கிற் றலமதுரை பரமசிவ னும்பர்தொழுஞ் சொக்க நாதன், பவந்தநுதற் பராபரையங் கயற்கண்ணாள் வேறிலையென் றெடுத்துப் பன்னுஞ், சவுந்தரிய லகரியினி லானந்த லகரியெனச் சாற்றுந் தொன்னூல். (எ௩)

வேறு.

சத்த கோடிமா மந்திரந் தனக்குநான் மறைக்கும்
வைத்த வாதியாங் காயத்ரி மந்திர வடிவா
முத்தி மாநகர் முதல்வியங் கயற்கணே யென்றே
மித்தை தீர்விசு வாமித்ர கற்பநூல் விளம்பும். (எ௪)

ஆதி யாகிய வாலவாய்ப் பதிதொழ வணுகி
லோது மாமயிர் களைந்துநீர் படிந்துப வசித்துச்
சோதி யைத்தொழின் முத்தியெய் திடுமெனச் சொல்லும்
வேத மூலமே யாகிய சேதுமான் மியநூல். (எ௫)

வேறு.

பாங்குறுபொற் றாமரைநீர்த் தீர்த்தத்தி லுந்தமந்தற் பரமாந் தீர்த்த
நீங்கரிய பல்கோடி யண்டங்கட் காதார நிலையே யாகித்
தேங்குபுகழ் மாமாயா வாரிநீ ராதலின்றச் சேர்ந்து தோன்றுந்
தாங்குநிறம் பேதிக்கில் விபரீத மெனச்சைவ புராணஞ் சாற்றும். (எ௬)

உலகுயிர்கண் மருள்விளையாட் டுலாதின் னருளடைதற் கெண்ணிச் சொக்க, னலகிலென்னென்ன விளையாடல் புரிமதுரை யதன்பெருமை யரனே வல்ல, னிலகுசிவ தலங்களுக்கு மேலாகுங் கேட்கமுத்தி யெய்து மீது, பலகலைநூற் றுணிவென்றே யுருத்திரசங் கிதையெடுத்துப் பகரா நிற்கும். (எஎ)

வேறு.

சுரர்குரு மனைவி வயின்மதிக் குதித்த தோன்றலாம் புதன்மகிழ்ந் தெய்தி,விரைகமழ் கதம்ப வனத்துறை சொக்க லிங்கத்தை விதிமுறை யருச்சித், துரகபூ டணன்ற னருளினாற் கிரகத் தொருவனு மோங்கிய கல்விக், கரசனும் பதம்பெற் றிருந்தன னென்றே சங்கர சங்கிதை யறையும். (எஅ)

வேறு.

சூதசங்கி தையிலுயரெக் கியவைப வகாண்டத்தெ ரகுத்துச் சொல்லு, மாதிகயி லையிலமலன் றன்வணங்கி யரிகேட்ப வமரரே,

யேதவுடல் வருந்தாம லெத்தனத்தால் விசேடமுத்தி யெய்துந் தானே, மோதுகென வவனுரைகேட் டிறையுரைப்பான் கதம்பவனத் துணை மை யுன்னி. (எகூ)

மாலவகேட் குதிலீலா விபூதிநகர் மதுரையதன் மகிமை சொல் வா, மூலமதாம் விபூதியென்ப தழிவில்லா முத்தியெத் தனத்தான் முற்ற, லேலவரும் தவஞ்சனனந் தரங்களின்முன் செய்தவர்க்கே யெய் து மானின், போலியமெய் யன்பருக்கே புகல்வதறி குய்யமெனப் புகல்வ தானேன். (அ0)

பூவுலகி லுயர்ந்தசிவ புண்ணியஞ்செய் திருந்தவங்கள் புரிந்து போத, மேவவரு சரிதைகிரி யாயோக ஞானமுணர் விதியி னற்றிப், பாவுமேனையான் முப்பொருளு முணர்ந்தறிவு விந்தமாகும் பாத்தைக் கண்டாற், றுவின்முத்தி தருந்தலங்கள் பலவவற்றி னௌவிதினல்குந் தானெவ் கூறில். (அக)

அம்பலமா ரூர்காசி காளத்தி விருத்தகிரி யதிக்கிராம *
மும்பர்புகழ் திருவெண்கா டையாறு வேதவன மூவர்கோ கன்ன
கம்பர்திரு வானைக்காக் கேதாரங் கோவனைநற் கும்ப கோணங்
கம்பமுறு மிடைமருது வீமேசஞ் சோமறு தயிரா பீசம். (அ௨)

இத்தலங்க டனிற்பஞ்சாக் கரம்பிரண வத்தோடு மிசையக் கூட டிப் பத்தியினாற் பன்னிரா யிரஞ்செபித்துத் தரிசிக்குங் காலம் பார்த் து, நித்தியமுஞ் சேவைசெய்து நீங்காமல் வசிக்கிலெய்தும் விசேட முத்தி, சத்தியமித் தொகுத்ததலங் களின்மேலாஞ் சிவன்முத்தித் தல மொன் றுண்டால். (அ௩)

தன்னுடலம் வருந்தாது குளியாது செபியாது தவஞ்செய் யா து, முன்னுதற்குக் காலம்பார்த் தந்தந்தக் காலத்தின் முறைதப் பாது, பண்ணுமிதிச் சடைச்சொக்கைப் பணியாதங் கயத்தனத்தாற் படர்ந்து சென்று, மின்னியவத் தலத்தெல்லை யறியாது மிதித்தாலும் விசேட முத்தி. (அ௪)

முன்னொருமா பாதகனத் தனைன்றன்னைப் பயந்தமின் முல்லை மாதர், தன்னைமன மருட்டியணைத் தொருவாது தாதையையும் வதை த்தோ ராண்டு, மன்னுலகி லவனோடுந் திரிந்தனனிப் படித்திரிந்து ம

* அதிக்கிராமம்-வைத்தீசுரன்கோயில்.

றுநாளிற், பின்னுறும்ப் பிரமகத்தி யிருப்புலக்கை யெடுத்தடர்ந்து
பிரமை செய்தே. (௮௫)

அதிபயமுற் றதுகண்டே யுழலுங்கா லாற்றுமுற்புண் ணியத்தி
னாலே, மதுரைநக ரெல்லையடைந் தனனடரும் பிரமகத்தி வருதல்
காணு, விதுபுநமை யதிசயமித் தலத்தில்வசித் துடல்விடுவோ மெ
ன்னப் போந்து, முதிரறிவு பெற்றிருந்தான் முப்போதுந் தொழுது
சொக்க மூர்த்தி தன்னை. (௮௬)

கோலமார் பதியிதெனக் குறித்தறியான் முன்னொருவர் கூறக்கேளா
னாலவா யெல்லையடைந் தனத்தினனு கவுமாபா தகம்பா யாதி
மூலமா கியதலத்தில் வந்தவுடன் முன்செய்வினைப் பவமு நீங்கிச்
சீலமா தவர்பரவு சீவன்முத்த ஞானனுட் டெளிவு பெற்றான். (௮௭)

இதப்படநா மாடுறுகின் மாலியநீர்த் தம்படிந்தஞ் செழுத்தை
யோதிப், பிதக்கணத்தி னுயர்ந்ததங்கப் பிதக்கணமென் றறிந்துபிதக்
கணமுஞ் செய்து, முதற்பொருடேர் மெய்யன்பர் பாததீர்த்த மும்ப
ருகி முன்னரி வைகித், திதப்படுமுத் தியையடைந்தா னமதருளா லமு
தலிங்கஞ் சேவை செய்து. (௮௮)

இன்றுமுள வயத்தனத்தான் முத்திதருந் தலமெனவே றெணவீ
தன்றிப், பின்னுமொரு தலமுளவோ நிச்சயமித் தலமென்றே பின்னு
ங் கூறுங், தன்னிகரித் தலத்தினின்மா தானமருந் தவம்யாகந் தரும
மோமம், பன்னுசெபம் பூசையறப்பஞ் செய்திடிலோன் றனந்தமிவை
பகர்ந்தே முண்மை. (௮௯)

உவ்வேளை யவ்வேளை யுவந்துதொழுங் காலமென லூன்றி யெ
ன்னு, தெவ்வேளை யிற்றொழினு முத்திதருஞ் சத்தியமீ தென்றா ன
ங்கா, ளவ்வேளைக் காய்ந்தபிரான் புகல்வதுகேட் டகமகிழ்வா லவன்
றாள் போற்றிச், செவ்வேளைத் தன்மருக னெனவுடையான் சிந்தித்
தான் செழுந்தென் கூடல். (௯௦)

ஈதன்றி நித்தியவி பூதிநக ரென்றியம்பு மியம்புங் கூடல்
யாதென்று வினவுதிரேற் றேன்றுவவெல்லாமொடுங்குமக்காலத்துந்
தீதின்றி யழிவில்லா திருத்தலினாற் சிவனுமைக்குப் புகன்ற தாக
நாதனரு ணத்தியரிக் குணர்த்துவன்கா ரணமதற்கு நயந்து பின்னும்.

அண்டபுரு டற்குமற்றைத் தலங்களவ யவம்பிரம ரந்தி ரத்தி
ற், றண்டமதி வேணியுறை பெருங்கயிலை யதற்குமேற் றுவாத சா

ந்தத்,. தெண்டகவே யழிவில்லா தெய்வீடு தித்தலமெய் போதுமோ ங்குந்,தண்டமிழ்த்தென் மதுரையென்று னெனச்சுருத சங்கிதைசத்திய மாய்ச் சாற்றும். (கஉ)

எத்தலத்தி னும்விசிட்ட மதுரையென்றான் மாதவத்தோ ரியம்ப ல் கேளா,வித்தகனு ராடுபுறத் தொட்டிகின்மா லியதீர்த்தம் வியன்பெ ற் றோங்கு, மத்திலுறை மிருத்திகைவெம் பிணியெல்லா மகற்றுமெ ன்று புகற்றைத் தேர்ந்து, முத்தமிழ்மா தவவிரித்து மொழிகென்று ரவன்றொகுத்து மொழிய தானன். (கங)

புறத்தொட்டியின்மாலியதீர்த்தமகற்றுநாக

சேடானுபவமியா

வேறு.

அங்கிநீர் விட்ட வித்தோர் சொலித்திடா வழற்குண் டத்திற்
பொங்கிய வோமஞ் செய்தோர் நடுவிடை விட்ட புல்லர்
தங்கிய வங்கி மாந்த நோயினர் தனியன் பில்லாப்
பங்கம்வந் துறவே பந்தி வரைந்துணும் பதகப் பாவர்.

வாயுவோர் டங்கி மாந்த மரோசிகந் தலைநோய் வாட்டு
நோயினர் நறிய வன்ன நிறைகனி காய்மற் றுள்ள
வேயுற வுடனுண் போருக் குதவாதுள் ளிருந்து துய்த்தோ
ரோயுறு சந்து வாத மனப்பீழை யுறுநோ யாளர். (கரு)

அருந்தித்தா முன்பு பின்பு பெரியோரை யருத்து வித்தோர்
பரிந்தநெஞ் சுளைவி றேடு படுமெழு நாயி றென்னும்
வருந்துறு நோயர் வந்த விருந்திற்கு வழங்கா துண்டோ
ருருந்தெழுங் கபோல ரோகங் கன்றோஷி யுறுநோ யாளர். (கசு)

இளைஞர்வந் திடவொ ளித்தோர் மிளர்தரித் திரரோ கத்தோ
இளையுறு நயன ரோக ருண்டல்கண் டசுகை யுற்றோ
ரளைசுர சாத நோயோ டரோசிகர் களவா லன்னம்
வளமுறத் துய்த்தோ ரத்தி மயமாக்கும் வற்ற றோயர். (கஎ)

ஒருவனைத் தள்ளி யன்றோ னுண்பதற் குரித்தா மன்ன
மருவருப் பின்றித் தாமே வலியினு லயின்றோ ரோதம்
பருவரு முடலில் வீக்கம் படுத்துகா மாலை நோயர்
மருவுமன் னியர்ப தார்த்த மடமையால் வலிதிற் றுய்த்தோர். (கஅ)

தெளிவிசு வாச பாதர் தீவிர சத்தி ரோய
ரனிதக வுரும்பி ரேத சிராத்தத்தி லயின்றோ ரன்ன
மெளிவரும் வஞ்ச நெஞ்சோ டநாசார மியைந்து செய்தோ
ருளேயும்வெப் புறுத்துங் கன்னக் கிருமியென் றுரைக்கு நோயர். ()

அரனடி யார்க்கென் றுக்கு மன்னத்தைக் களவாற் றுய்த்தோர்
புரையிவை யென்றெ ணாது புசியாது புசித்தோர் வெம்மைப்
பாமுறு கண்ட நோயர் பமெலங் கழித்தல் வெச்சி
றிழுறக் கழுவா முன்னூண் செலுத்தினோர் கிராணி நோயர். (௧௦௦)

இனியபால் காவிற் றுய்த்தோ ரிடையுநீ ரிழிவு நோயர்
பனிமதுப் புசித்தோர் சொத்தைப் பற்குத்து நோயர் வேசை
வனிதையார்ப் புணர்ந்தோ ராக்கை வருந்துற விரந்தி நோயர்
புனிதமாப் புசிக்குங் கல்லைக் கிலைகராந் தெடுத்த புல்லர். (௧௦௧)

எங்கவே யறுப்புண் டாரு விலிங்கமின் னமதா நோயர்
நீங்கலுற் றிடுமூ னுண்டோ ரொருவர்தந் தீமையைச் சொற்றோர்
தாங்கருங் கலக்கங் கொள்ள யானையுந் தனிவீ டித்தோர்
வாங்குதற் க[illegible]ராம் பித்த மயிதரு கயரோ கத்தர். (௧௦௨)

அலவன்கா லொடித்தான் சால வருந்தினோ ரழுகிக் கைகா
னிலைகுறைந் திடவே வாட்டு நீங்கருந் தொழுநோ யோடு
புலவுநீ ரொழுகி மாறாப் பொங்குவெண் குட்ட நோயர்
பலவுமென் பகர்வ தன்றோர் படுந்துய ரெவரே சொல்வார். (௧௦௩)

வேறு.

உவவினிற் பிதிர்நா ளினின்மனச் செருக்கா லொண்டொடி மாதனைத் தோய்ந்தோ ரவமுறு விழிகண் குருடொடு மாவி யயர்வுறு மண்டவா தத்தர், கவலொடு கிரணத் தன்னிய மடவார்ப் புணர்ந்தவர் தபக்கய ரோகர், தவறறு மயலார் வாழ்ந்திடப் பொருதோர் சன்னிபா தக்கய ரோகர். (௧௦௪)

பூத்தவா ருச மாதனைப் புணர்ந்தோர் புரைபடு பவுத்திர நோயர், கார்த்தொரு வரையா யத்தடித் தவர்கைக் கிரந்திகை வாதரோ கத்தர், தீர்த்தனு லயத்திற் காமத்தை விளைத்தோர் செறிமுட ரோமவெம் பிணியர், பார்த்திடார் நீதி யிரவினிற் புணர்ந்தோர் பற்பல வாதரோ யாளர். (௧௦௫)

## இலீலாசங்கிரகவத்தியாயம்.

இழுகிய வெண்ணெய்த் தலையொடு காம மின்புறின் மலசலங்
கழிக்கின், விழுகுறு மூடைசேர் நரகினிற் புகுந்தும் வெள்ளெரி கி
ளங்குபல் விளக்கி, ஞெழுகுபூப் பெனவா சூசகா ளொருமூன் றுண்
டெனு தன்னவை புரிவோ,ரழுகுமூ லத்தோ டழிவுறும் வெகுநீரிழ்
வெனுங் கன்மரோ யாளர். (௧௦௬)

மனைவியைத் தொடாது வரைந்துளோர் கழுத்தி லெழுந்தவன்
கழலைரோ யாள, ரனைவருந் தொழுமெய்ஞ் ஞானியை நிந்தை யறை
ந்துளோர் பெரும்பித்த ரோகர், வினைவழி வரும்பா ரியர்க்குளாங்
கொருத்தி யாளுடன் மற்றையர் வெறுத்தோர், நனைமலர்க் குழ
லார்க் காகொளு வலிரோ யொடுமுடை நாற்றரோ யுடலர். (௧௦௭)

தன்மனை யாளை முகரதஞ் செய்வித் தவர்தமு மத்தொழில் செ
ய்தோர், கன்மமார் வழுக்கற் கொடித்தலை யாக்கிக் காட்டும்புண் கி
ரோகுட்ட ரோகர்,புன்மைசேர் முடையின் தியம்புசிப் பித்தோர் புக
ல்குறி சோர்தரு மலிநோய், பன்மலர்க் குழலார் வெறுத்திடுந் தாது
நட்டநோய் பாண்டுரோ கத்தர். (௧௦௮)

கற்புடை யயலார் மனைவியைப் பார்த்தோர கண்ணிற்றொண்
ணூற்றறு நோயர்,முற்படு நல்ல பாம்பினை வதைத்தோர் மொய்விட
ப் பாகவெம் பிணிய, ரற்பொடுந் தன்றேறு மதித்தவட் புணர்ந்தோ
ரடர்வெகு நீரிழி வாளர், வற்பொடு பயந்த வன்னையைத் தோய்ந்
தோர் மதுப்பிர மேகரோ கத்தர். (௧௦௯)

மருகியைச் சிறிய தாயரைத் தாமுன் வணங்குதற் குரியநா ரிய
ரைச், சருவியே யணைந்தோ ரோய்ந்திட விசிக்குஞ் சந்துவா தக்கொ
டும் பிணியர், குருவெனூர் புணர்ந்தோர் தொழுகுல மாதைக் கோர
மா கிரந்திரோ யாளர், வெருவிடா தவையி லபானவா யுவிட்டோர்
மிகுசூலைக் குச்சவெந் நோயர். (௧௧௦)

கன்னியை யயற்பன் னியைவித வையையாற் கால்விலங் கினைத்
தனி புணர்ந்தோர், துன்னியே சுறுக்கொண் டெற்றுநீர்ச் செறுப்பு
நோயர்சொற் கன்னியர்க் கலந்தோ, ரன்னியர் மனையை நாடின ரு
யிர்கொன் றருந்தினர் செய்ந்நன்றி கொன்றோர், மன்னுநண் பினர்
க்குக் கபடமே செய்தோர் வருந்துறுங் கருங்குட்ட ரோகர். (௧௧௧

பரிவொடுந் தனைச்சே வித்தவன் மனையைப் பரிசித்தோ ரங்கை
வர்.தத்தர், குருமனை தொட்டோர் கருவிடை யழித்தோர் கொடிய

ந்த மகோதர நோயர், மருவியே தம்மைச் சேவகன் கொண்டேகின் மனைவியைத் தேவெனார் மணந்தோர், கருகியே பாவி பாதபித் தோயக் காட்டும்வா தாதிக்க ரோகர். (ககஉ)

விரதமா மாதர் விரதத்தை யழித்தோர் வேசைபாற் றூதசென் றெவர்க்குஞ், சாதமாஞ் சந்து பொருத்திநாள் கழித்தோர் தளர்ந்தநீ ரிழிபிர மேகர், அரதவே சையரோ டளாவியே சதுரங் காதிய சூதனை பொருதோர், புனிதவா வற்ப கேசத்த ரலவம் புரிந்திடும் புழுவெட்டு நோயர். (ககங)

கலந்தவே திருவர் புணர்ந்திடு மின்பக் கலவியைப் பார்த்துட னிருந்தோர், நலிந்துட னெழுகு நீர்ப்பற்ப ரோக முதலிய நயன வெங் நோயர், வலிந்துவே சையனைப் பொருள்கோடா தணைந்தோர் காவித ரொல்த்திடும் வண்ணார், பலந்தரும் கூலி யளித்திடா ரனையாய்ப் பெரிகுட்டங் கிரந்தியன் னோயர். (ககச)

ஆசையாற் கோயிற் கணிகையர்ப் புல்லி யன்னரை வனைந்துதம் மில்லைவத், திசர்சந் நிதிரு வியஞ்செய்தோ ரதனுக் கிடைப்படு மடக்கொடி மடவார், காசுசேர் கயரோ கம்பெரு வியாதி யொடுகடி குட்டநோய் பிரமை, சீசியென் றெவரும் பழித்திட வலக்கண் செயுமுட ரோமரோ கத்தர். (ககரு)

பொருடுகில் கவர்ந்து கலவிவஞ் சித்தோர் புழுச்செறி யல்குற் புற்றுறுநோய், சருளவே வலிக்கும் வயிற்றுறு சூலை தொடருமென் புருக்கிவெங் நோய, ரிருடருங் கைம்மை யாகியும் பலரோ டிச்சையாய்ப் புணர்ந்திடு மாதர், வெருளுறச் செய்யு மழுகுபுண் குட்ட முதலிய மேம்படு நோயர். (ககசா)

தூய்மையொன் றின்றி யெச்சிலங் கையிறைற் றொடாதனைத் தொட்டுட னெடுத்தோ, ரேமுற வாவி மயங்கிடச் செறுக்கு மெக்கிய வயிற்றெட்ட னோயர், காமுற வொண்ணாப் புலைச்சியைச் சேர்ந்தோர் கருதினோ ரன்னரோ டயின்றோர், மாமைதி ருடலம் வாட்டியே வருத்து மெரிகுன்ம வாயுநோ யாளர். (ககஎ)

உப்புவெண் ணீறு வெண்கலந் துகில்காற் பாசமுங் கிலைகரந் தெடுத்தோர், மெய்ப்புறப் படித்தோர்த் தூடித்தோர் கஷணம் விளம்பினோர் வெண்குட்ட ரோகர், தப்பறு பட்டுத் துகில்வெள்ளி கரந்தோர் சதித்திடும் பலகுட்ட நோயர், செப்பருஞ் சொடுங்கோ லானைந்தவர் காதுஞ் சேவடி நாசிவெம் பிணியர். (ககஅ)

ஆயலவர் மகவைப் பொருளைமயிற் காய்ந்தோ ரன்னியர் பெற் றுணங் மணிகண், மயலொடு காந்து வவ்வினோர் தூய புதப்பெரு மல்ட்டுவெங் நோய, ருயர்திரு முறைக ளெழுதவே வாங்கி யுதவி லர் களவினு லெடுத்தோர், செயலறு பிறவிக் குருடுகை வாதங் கிய க்குவாய் வாதரோ கத்தர். (௧௧௯)

ஆவினெய் கவர்ந்தோ ரென்னெய்யிற் றுண்டோ ரரும்பொ ருட் கூலியேற் றில்லின், மேவிடங் கொடுத்தோ ரூர்ப்பொருள் கவ ர்ந்தோர் மெலிகண்ட மாலைரோ கத்த, ரேவயில் வங்கங் கரந்தப கரித்தோ ரீளைமேழும் சுவாசவெம் பிணியர், நோவுறுங் கொடுங்கோ ளுரைத்தவர் குன்ம வாயுநோய் நுவறந்த ரோகர். (௧௨௦)

எண்ணெய்தேய்த் திருநீ ராடினோர்த் தடுத்தோ ரிரசவர்க் கங்க ர்ந் துண்டோர், நண்ணிய குற்ற மின்மையை யறிந்தும் யாரையு ந லிந்துபீ டித்தோ, ருண்ணிறை யகற்று மையிரு சிரநோ யொழிவி லா வொருதலை நோயர், தண்ணறுங் கனிகாய் களவினிற் கவர்ந் தோர் சலங்கொள்விப் புருதிவெம் பிணியர். (௧௨௧)

சோரர்பொய்ச் சோரர்க் குபாயங்கள் பகர்ந்தோர் சொன்ன வன் னவர்க்கிடங் கொடுத்தோர், கோரமே விளைக்கும் பாதரோ கத் தர் கூறரு நேத்திர ரோக, ராருமக் கள்வர் கட்பினர்க் கோறல் விலக்குனர் ழிவழக் குரைத்தோர், செருறுங் குற்ற மிலருயிர் செகுத்தோர் திர்வில்கால் கரங்குறை நோயர். (௧௨௨)

ஈதலை விலக்கும் பாவிய ரொருகண் ணிழந்தவர் தரித்திர ரோக, ராதரா யடைந்தோர்க் காசைபே சிக்கை விட்டவ ரடைக்கலப் பொருளைப், பேதுறக் கவர்ந்தோ ரிராசவெங் கயநோய் பீடிக்கும் வீக்கவெம் பிணிய, ரோதுமுச் சிட்ட வளைவிலார் விரண வாதருண் முடக்குவா தத்தர். (௧௨௩)

அமைச்சரா யரசு கொன்றவர் செருக்கி னநீதியாற் புவிக்கி டர் விளைத்தோ, ரிமைப்பொழு தேனுந் தணிந்திடல் செய்யா திடர் செய்யுஞ் செங்குட்ட ரோகர், தமைப்பொரு ளென்றே சேவகங் கொ ள்ளுந் தலைவனை நிந்தனை பகர்ந்தோர், குமைத்திடும் வலிய மூலக ன் வலிமூன் கூறும்வாய்க் கிரந்திவெங் நோயர். (௧௨௪)

அன்னிய னொருவ னியல்பல செய்யி னரசலா தவனிவன் கத் தைத், தன்னதிச் சையிலீர்ந் தவரறுப் புண்பர் தனிவினோ லிங்க

வுட டினைத்தார், மன்னுபோர்க் களத்தி லாண்டவன் றஞ்ச மடிந்தி டார் புறமிட்ட வீரர், தன்னிய தாகங் குறைப்பிணி இடுக்கம் பிள வைதுற் றிளைப்புவெங் நோயர். (கஉரு)

பண்பொடு சேவிப் பவர்பொரு டமைநேர் பகைகடி வீரர்பொ ன் கவர்ந்தோர், கண்படு தொன்மை யடைப்புநோய் கடியு மிராச வெங் கயக்கடும் பிணியர், புண்படக் கவிநா வலவரை யவையிற் பொ ருமையின் வாதித்து மூறித்தோ, ரெண்படு நடுக்கு வாதநோ யங்க சே ட்டைநோ யிடர்ப்படு நோயர். (கஉசு)

ஒருவரைப் பாடி யவர்செவிப் புகுத்துங் கவிதனைமற் றொருவர் மேல் விரும்பித், திருவிலார் சாத்துக் கவியெனப் பிணைத்தோர் தெ ரிவிலா மூங்கைநோ கத்தர், வருபெரும் புலவர் கவிதைகேட் டவர்க் கு வரிசைநல் காதமோட் டிலுத்தர், வெருவுயிர் நீக்கு மவமிருத் தல று சன்னியோ டின்னல்வெம் பிணியர். (கஉஎ)

நயிட்டிக விரத மழிந்துளோர் சுகசன் னிப்பிணி நலிவிய கோ ய, ரயிர்ப்பில்சந் நியாசக் கோபியர் மூல வெருணியோ டருங்கய ரோகர், செயிர்ப்பறு விரத்த மழிந்தயற பன்னி விதவைநிக் கணிகை யர்ப் புணர்ந்தோர், வியப்பொய் புசிப்பை விரும்பினோ ரரத்த மூல நீர்ச் செறுப்புவெங் கயத்தர். (கஉஅ)

துறவியாய் மண்பெண் பொருண்மனம் வைத்தோர் சூதுகொ ள் குத்திரம் விளைத்தோ, ரறவனு லயங்கள் பரித்தொரு நிருப்போ ராசர்ச்சேர்ந் தோர்குறை நோயர், மறமகல் குருவாக் கிகழ்ந்தவர் முகநோ கத்தர்மா நெறியுடை யோனை, முறைவழு வவமா னம்பல செய்தோர் முடிவில்கால் வாதரோ கத்தர். (கஉகூ)

ஆரருட் குருவைக் கடிந்துநீ யென்றோ ரந்தண ரோடுதர்க் கி த்தோர், கீரறு வனத்திற் பிரமராக் கதையாய் நிற்பது மன்றிவாய்ப் பிணியர், சீர்பெறு பண்டைத் தேசிகர்ப் பகைத்து மற்றொரு தேசி கர்ச் சேர்ந்தோர், பூரிய ராவ தன்றியும் வெம்மை பொங்குதா பச் சுர நோயர். (கங0)

எங்ஙனே சிகனே பெரியனுங் குரவ னிழிஞனென் றொருவர்த்த ர்க் கித்தோர், பங்கமா முடக்கு வாதத்தர் பார்த்தோர் கேட்டவர் குருடொடு செவிட, ரங்குரு நிலைதிர்ந் தாசனத் திருந்தோர் துகில் போர்த்தா லயம்வலஞ் செய்தோர், முங்குதிர்த் தத்தின் மண்ணொடு குனித்தோர் மூங்கைநோய் தரித்திர ரோகர். (கஙக)

தாதைதா யாசா னிவரொடும் பகைத்தோர் சர்வாங்க வாயு
ரோகத்தர், வேதியர் பொருண்மேல் வேசைமே லுள்ளம் வைத்தவ
ர் சலப்பிரமேக, ரேதிலார் மனம்பீ டிக்கவே செய்தோ ரின்னற்சே
தக்சர ரோக; ராதியான் மடத்திற் றம்பல மூமிழ்ந்தோ ருக்கெரு
ண்டை யடைப்புநோ யாளர். (கக௨)

அந்தணர்க் கொன்றோர் பிறருயிர் செகுத்தே தன்னுடல் பேணி
னோ ரசர்ன், மைந்தரு கற்பின் பன்னியா லுள்ளம் வைத்தவர் வா
தவெங் கயத்தர், முந்திய வுபதே சமுங்குரு வாக்கு மறுத்தவர் முய
ல்பணி விடையில் , சிந்தியார் தவசிப் பிள்ளையாய் வஞ்சஞ் செய்தவ
ர் திமிர்வாத ரோகர். (கக௩)

புராணநூ லோதும் புனிதலாச் சிவதே சிகனைனர் நரனை
னப் புகன்றோர், விராவிய புழுவான் மிகைசெயும் வாய்ப்புண் மிகு
ந்தவாய்க் கிரந்திவெம் பிணியர், தராதலம் பரவு முண்மைநூ லுள
த்தன் பின்றியோ துசர்மறந் தசைகள், பராவியே தூய்த்தோர் நர
கசே டத்தாம் பண்பறு மூங்கைநோ யாளர். (கக௪)

ஈசனே முதலாந் தேவகா ரியவிக் கினஞ்செய்தோ ரிவர்பொ
ருள் கவர்ந்தோ, ராசிறுன் மறையோர்க் கிடர்செய்தோ ருழலையா
க்குநோ யுட்சுர நோயர், பூசுநீ றணியு மீசனு பரணங் கவர்ந்துபொ
ய்க் குரம்பையிற் பூண்டோர், சிசியன் மனைவர்நோ யாரெடுத் துரைப்
பார் செறிபுழுக் குட்டரோ கத்தர். (கக௫)

துலங்குமா லவட்டம் விசிறிகள் கவர்ந்தோ ருட்டண துக்கவெ
ம் பிணியர்,பலங்கெழு மீசன் றிருப்பணி பூசைபடித்தரங் குறைத்
தநீ ரகர்,கலங்கவே செய்யு மலிப்பிணி வருத்தங் காட்டிறு மருங்கய
ரோகர்,நிலங்கெழு மீசன் சமயத்தை நிந்தை நிகழ்த்தினோர் சலவாத
நோயர். (கக௬)

இணையிலாச் சிவனுக் கிணைசொலி யிறக்குந் தேவரைப் பரம்பொ
ரு ளென்றோர்,புணையிலாத் துன்பக் கடலிடை யழுத்தும் புழுச்செறி
வாய்ப்புற்று நோயர்,மணமுறக் கொடுப்போர் தங்களை யிகழ்ந்தோ
ர் புழுக்குடை பல்லுநோய் மலிசர்,பணவிடைத் துயின்றோர்ப் பழி
த்துநிந் தித்தோ ருதாவங் கிப்படும் பிணியர். (கக௭)

சிவனிடத் துதிக்கு மூவரை நிந்தை செப்பினோர் வியாதிசேர் வ
யிற்றர்,வெழுறு கோயிற் சுற்றினிற் கணிகை காரிய ரொடுகளிப் பக்

ன்றோர், தவறுற மலச லாதிகள் கழித்தோர் தலைமயிர் கோதியே முடி
த்தோர், பலமெனு தெச்சி லுமிழ்ந்துளோர் பிதற்றும் பழிபடும் பெ
ரும்பித்த ரோகர். (க௩௯)

கோயிலுட் டியின்றோர் தலையிடி மண்டை நோயினர் குளிர்தீர்
த்தத் துறையின், வாயினீர் மூக்குச் சிந்தினோ ரிரத்த பீனசர் கந்தனை
வன்றி, லேயுற வெச்சி லுமிழ்ந்தவர் தாலு வாதத்த ரிருந்தவ ரறத்த,
ராயுநற் றேவ ரிவருக்கண் பில்லோ ரற்புத வாயுவாய்க் கோணர். ()

பிதிர்தினஞ் சிராத்தஞ் செய்திடார் மிகவும் பீடிக்கு மக்கினி மாந்த
முதிர்தரு மிரண வாதநோய் வந்தி நோயினர் முனிந்துபாற் பசுவை
யதிர்தரு துக்கஞ் செய்தவர் நாசி கோணும்வா தத்தரார்த் தழுதோர்
கதிபெரும் பாரஞ்சுமத்தினோர்சுடுநீர்ச்செறுப்பொருகெடியும்வாதத்தர்.

களவினு லன்னம் வேதியர் செம்பொன் கவர்ந்தவர் கிரணகா
லத்தி, லொளிவிளை மாதர்ப் புணர்ந்தவ ரநாசா ரஞ்செய்தோ ருயர்ப
சு வதைத்தோர், விளிவுறப் பொசியு மூலரோ கத்தர் விழுப்பசு வழித
ப்பி முறித்தோர், தெளிவின்மா பாதப் பேச்சினைக் கேட்டோர் செ
விப்புற்றுச் செவிடென் றோயர். (க௪க)

அந்தணர் ராசா னருந்தவர் பெரியோ ரறிஞர்தற் சூழ்ந்துட னட
ந்து, வந்திட வேறி வாகன மிவர்ந்தோர் வருந்துமா வாதரோ கத்தர்,
சிந்தியா வொருவன் றலைமிதித் துதைத்தோர் தாகத்தி னீருத வாதோ
ர், சிந்தியார் சிகா லத்தினீர் படிந்தோர் சிரத்துநோய் கபாலநோ
யாளர். (க௪௨)

புண்ணிலை யறியார் சத்திர மிட்டோர் பூதநோய்த் தூலகா யத்
து, ரெண்ணெய்தேய்ப் பவரைப் பிரித்தவர் கபால ரோகத்தோ டி
டிதலை நோயர், கண்ணுகுஞ் சாய்கொண் டவர்திமிர்ப் புழுவா னலி
ந்திடு முதாவெம் பிணிய, ருண்ணுதி யெனத்தீ விடத்தைமற் றொரு
வர்க் கூட்டினோ ரக்கினி மாந்தர். (க௪௩)

கண்ணியால் வலையா லுயிர்பல செகுத்தோர் கனிமரச் சோலை
யை யழித்தோ, ருண்ணுநீர்க் குளங்கர லணையிவை முறித்தோர் கு
றைப்பெரு வியாதிநோ யுடலர், வண்ணநீர்க் கிணறு விகடட மழித்
தோர் வருந்துநீர்ப் பாடுநோ யாள, ரெண்ணடி யற்றார் சொம்பரி
க் தெடுத்தோ ரெழின்முகம் வீங்குவெங் கோயர். (க௪௪)

புண்ணினிற் கோலிட் டலைத்தவர் கைக்குத் தாகநல் லோர்களைப் புடைத்தோர், கண்ணுபோ ரின்றிக் கபடமாய்க் காயம் படுத்தினோர் பிளவைநோ யாளர், வண்ணவான் மாடு மாந்தரே முதல வுறப்பொய்ந் திடவலிந் தடித்தோ, ரெண்ணரும் வருத்தஞ் செய்துடன் முறித்தே யெழுமுறி வாதரோ கத்தர். (௧௬௫)

களவிலா வடியா ளைக்கள வுறுத்துங் கடியர்கோ யழுகுபுண் குட்ட, ருளேபல மிலனைச் சுமக்கொணுப் பாரஞ் சுமத்தினோ ருற்றுநீர்ச் செறுப்பர், வளமில்பொய்ச் சான்று பொய்வழக் குரைத்தோர் வருத்தும்வாய்க்கிரந்திபுண் ணேய,ரளியர்பொருள் மறையோர் நிலைபிடித் திர்த்தோ ரடைப்புநீர்க் கடுப்புக்கல் லெரிப்பர். (௧௬௬)

செட்டுநீ தியைநீத் தறக்கொடுஞ் செட்டுச் செய்தவர் நிறைதுலை குறைத்தோர், வட்டிவை யறவாங் குநர்மட மையிற்றும் வாங்கிய தனிசுநல் காதோ, ருட்டெறு மிரண வாதநோய் குறைநோ யினர்தனி ரகசிய மொற்றித், தட்டறக் கேட்டோர் வெளிசெய்தோர் வருத்தந் தணிவிலா நெஞ்சுளை நோயர். (௧௬௭)

பிணியராய் வந்த பெரியரை நீத்தோர் பிறங்குகண் கால்கர் நோயர், தணிவறு கயன பாடையா விறையாற் சன்னைசெய் தொருவருக்கொருவர், துணிவுறு சண்டை மூட்டினோர் வாயிற் றுர்க்கந்த நோயரு ருணிச, ளணிகெழு மன்ன சாலைநீர்ப் பந்த ரழித்தவர் நீர்க்கோவை நோயர். (௧௬௮)

எருதுவந் தேறி வழிநடத் தினவ ரிடர்செயு மரைப்புண்ணினோயர், மருவரு மனத்து வஞ்சகர் வாக்கு மாறினோர் பெரியர்சொன் மறுத்தோ, ரருளுரை கேட்கிற் பராமுகஞ் செய்தோ ரழுகுபுண் குட்டரோ கத்த, ருரைசெயி லநேக நாகசே டத்தா முறுபிணி சுருக்கொமுரைத்தேம். (௧௬௯)

தோற்றிய கபத்தால் வாதபித் தத்தாற் றொடருநா லாயிரத் தொகைநோ, யூற்றுநாற் பானு விரண்டுநோய் பவநோய் நுவலுதற் கருமினை நோயர், மாற்றரும் பில்வி ருணிய நான்கோண் மற்றெவற் றினும்பய முற்றே, ருற்றிருந் தொழுகு நறைமலர்க் கடம்ப வனத்திவ்வந் துண்மையா யெண்ணணி. (௧௭௦)

தடமலர்ப் பொற்று மரைப்புனன் மூழ்கித் தாவினீ றுருத்திர வக்க, மடையினி லணிந்தஞ் செழுத்தையுச் சரித்தே யருட்டிரு

னைந்தலிற் றொழுது, மடவா ளுமையங் கயற்கணு மிமைச் சொர்க்கி லிங் கத்தைமுன் வழுத்தித், திடமுற விவர்பின் மாலிய தீர்த்த மிருந் திகை தினமுமுட் கொண்டு. (௧௫௧)

மண்டல மொன்றே னும்மதிற் பாக மேனுநன் னியமமா வழி பட்டு, மண்டென மனத்தி லெண்ணிலம் மருந்தா லுறுபிணி பாதக மொழியு, மண்டர்கா யகன்ற னருளினு லெடுத்த சனனத்தின் முத்தி யு மடைவர், தண்டலி றவத்தீர் கேண்மின்முக் காலுஞ் சத்தியம் புக ன்றன மூண்மை. (௧௫௨)

வேறு.

என்ன மாதவத் தமிழ்முனி யியம்புதல் கேளா
முன்னை மாதவப் பேற்றினன் மொழிதரக் கேட்டே
மின்ன லாலெமக் குரியதே சிகரெவர் நிகழ்த்திற்
பன்னு மாறெமக் கின்னமுண் டெனவவை பகர்வார். (௧௫௩)

அணிவெண் பூதிமற் றுருத்திர வக்கமஞ் செழுத்துத்
தணிவ ருஞ்சிவ நாமநூல் சாற்றுறு விரதம்
பணிவு றுஞ்சிவ புண்ணியம் பகர்சிவ புராணந்
துணிவு றுஞ்சிவத் துரோகஞ்சொல் லருஞ்சிவ பூசை. (௧௫௪)

குரும் கத்துவங் கூறுமெய்ஞ் ஞானத்தின் றன்மை
யருளு மீசனுக் கற்புத மாகுமீ ரைந்தும்
பொருள்வி ளங்கிடப் புகலுதி யெனத்தவர் புகலத்
தெருள கத்திய னன்னவ ருளங்கொளத் தெரிப்பான். (௧௫௫)

---

விபூதி.

அரந்தை தீர்தவ முனிவிர்கா ளறைகுவங் கேண்மின்
கரந்தை வார்சடைக் கண்ணுதற் கற்புதப் பத்திற்
பரந்த பூதிமுன் பகருதும் பல்லுயிர்க் கெல்லாம்
புரந்து காப்பதும் பரகதி யளிப்பதும் பூதி. (௧௫௬)

வேறு.

எந்தை யநாதி நிட்களமே சகளீ கரித்தீன் றிறைவியையு
முந்தை முதல்வி யைந்தொழிலு முறையி னீயே யளித்தியெனத்
தந்தம் முதல்வன் சுவேச்சையா யிருந்தா னந்தத் தனிமுதல்வி
யைந்து தொழிற்குங் காப்பாய்பின் னடையா ளந்தந் தருளென்றான். ()

## இலீலாசங்கிரகவத்தியாயம்.

என்று முன்னர் தனைத்தானே யீன்று தருமப் பெயர்சாத்தி
நின்றார் கலையி னுயர்தருகல் லறமே நிகழ்த்துஞ் சிலகலைமுன்
யன்று டவருசெய் பாற்கடலிற் பசுவா யுதித்தி யெனப்பணி,
னங்கா னதுசென் றடைந்துதிப்ப வயிர்தங் கடைந்தா ரிமுதலோர

நந்தை சுரபி சுமனையெழி னலஞ்சேர் சுசீலை பத்திரையென்
றைந்து பசுவாய்ப் பாற்கடலு ளரனா ரருளா லவதரித்து
முந்து சிவலோ கத்தடைந்து முயங்கு மிடபத் தொடுமிருந்த
தந்த வுலகங் கோலோக மதுவும் படிகத் தால்விளங்கும். (௧௫௯

கோமா தாக்க ளாமவற்றைக் கூறுந் திருமா லயன்முதலோர்
தாமா தரவாற் பூசித்துத் தாழ்ந்து பணிந்து போற்றிடுவார்
மாமா தவத்தீ ரவற்றினது பெருமை யெவரே வகுத்துரைப்பார்
பூமீ துறையு முலகிலவை யிருக்குந் தானீ மிகப்புனிதம். (௧௬௦

துதிசா லந்தக் கோமயத்தை யெடுத்துச் சிவன்சொல் லாகமநூல்
விதியால் விளைத்தங் கீறள்ளி மிளிர்தன் றிருநெற் றியிற்றரித்துக்
கதியார் பூதி யிதுவேகாப் பென்று விமலை கைக்கொடுத்தான் [ளால்
மதியார் நுதலா டானணிந்தைந் தொழிலோ ரெவர்க்கும் வழங்கின

அருமா மறையின் றுணிவிதுவென் செருக்கா லுரைத்த தன்ற
ருள்சேர், பெருமா னுருவே வெண்ணீறு பேசிற் பிறிதொன் றிலை
ப்புவனி, புரிமா தவத்தா விமையவர்க்கும் புகழ்ப்பூ சுரர்க்கும் பூசு
ர்க்குந், தருமா தரவாற் பசுக்கணெறி தழைக்கநிலத்தின்வந்தனவால்.

ஆவின் பெருமை யெவருரைப்பா ரவற்றின் சிருங்க மத்தியினின்
மேவுஞ் சிவனங் கிருபாலும் வேத னெடுமா லுறைந்திடுவர்
தாவி லுனிதங் குஞ்சர்வ தீர்த்த முயர்தா பரசங்கந்
தூவண் ணெற்றி தனிலமருஞ் சுடர்வேன் முருகன் கணபதியும். ()

மூசு காசி யிருபுடையின் முயங்குஞ் சேட்டைமொய்செவியிற்,
றேசு பெறுநன் மருத்துவர்கண் ணிணையிற் றிகழ்செங் கதிர்மதிய,
மாசில் பல்லின் மாருதகா வருணன் வசிக்கு மூங்காரத்,தோசை பெ
றுவெண் டாமரையா ளுறையுங் கபோலத் தியக்கர்கமன், (௧௬௪)

அதர மிரண்டிற் கந்தரத்தின் மகவா னமருங் குரங்கிற்
றிதமா ரிசைக்கர் திருவர்நுனி சிறக்கும் பாந்தட் டொகைகுரமேன்
மதர்வா ளரிக்கண் ணரமகளிர் வருமா கணங்க ளினிதுறையும்
பதமார் தசநா டியிலுமுருத் திரர்தா முறைவர் பாங்குறவே.(௧௬௫)

பனைசயார் தருமென் சந்துகளின் பலவா யுக்க ளினிதமரு
நகைசயார் தருகான் மூலையடியிற் பிதிர்தே வர்களுான் மூலைநுனியில்
விகைசயார் தாங்கக் கடலுளத்தின் மேவு முமைமயின் ஞுதரத்தி
லினைசயார் தருநன் விலமகண்மால் வரைக ளிருங்கா னகிமையையும்.

தனியின் வாலின் யோனியினிற் றங்குங் கமலை யுரோமமெலா
நனிசேர் தேவர் முனிவர்கண நனுங்கோ மயமே முதலைந்தின்
பனிசேர் மலரோ ருதிசதா சிவமீ றுறையும் பகர்பசுவின்
புனித மெவரோ புகன்றிடுவார் பொருள்சேர் வேத வடிவாகும்.

காயில் கபில நிறநங்கை தவளஞ் சுரபி மறையோர்க்கா
மேவு சுமனை நிறஞ்சிவப்பு விறல்சே ராசர் தமக்குரித்தா
மேவ மகவுஞ் சுசிலைநிற மினைசுநாம் பிரஞ்சொல் வசியருக்காம்
பூவி னுயர்பத் திரைகருமை பொங்கு நிறஞ்சூத் திரர்க்காகும். (கசுஅ)

வேறு.

சாந்தி கம்பவுட் டிகந்தனிக் காமத மெனவு
மேயந்த மூவித மியம்புங்கோ மயமெய்த் திவற்றி
னுயர்ந்த சாந்திகம் பிரமமோ ரைந்திரு லாவின்
போந்த யோனியிற் படாதுபு மியின்விழா தேற்றே. (கசுகூ)

ஏற்ற கோமய மியம்புமந் திரத்தினால் விளைத்தல்
சாற்றும் யோனியிற் றுக்கிநன் னிலத்தின்வீழ் மயத்தை
மாற்றி மேலொடு கீழ்நடு மயஞ்சடங் கத்தா
லூற்ற மேபெற விளைத்திடல் பவுட்டிக முறைக்கும். (கஎ0)

புவியின் வீழ்மயம் பிரசாத மந்திரம் புகன்று
விவித மாமுழு வதுமெடுத் துரைத்தமுன் மறுவா
னவையு ருதவை விளைத்திடல் காமத நாதன்
கவுரி கேட்பமுன் னுரைத்தது கழறுவம் விரித்து. (கஎக)

ஒன்று கற்பமோ டநுகற்ப முபகற்ப மகற்ப
மென்று சிற்பா நீறுநால் வகைப்படு மிவற்றுட்
டொன்று கற்பத்தி னீற்றினுங் குரியதாய்ப் பசுக்கண்
மன்ற வத்திறம் புகலுவங் கேண்மின்மா தவத்தீர். (கஎஉ)

ஈன்றெ ருக்கன்னி கொடுமையூப் பிலக்கண மின்மை
யான்சி னைப்புசு வால்செவி கொம்பறை வந்தி
யாண்ம லங்களைப் புசிக்குமா நோய்ப்பசு வீன்று
பாண்மை சேர்பதி னைந்துநா ளுட்படும் பசுக்கள். (கஎங)

இறந்த கன்றுடைத் தாய்முடக் குருடிருஞ் செவிடு
மறைந்த நீங்கெனத் தகையவீ ரெண்குறை யகற்றி
நிறைந்த நற்குண மமுகுமுன் னிகழ்த்திய நிறத்தான்
சிறந்த பங்குனிச் சாலித்தாண் மேய்ந்தவை சிறப்பாம். (௧எச)

விடியு முன்னெழுந் தனுட்டானம் விதிப்படி முடித்துப்
படிபு கழ்ந்திடும் பசுவுறை கோட்டத்திற் சென்று
வடிவு மைந்தகோ சாவித்ரி யென்னுமந் திரத்தாற்
கடிகொள் சந்தமுங் கமழ்நறு மலர்களுஞ் சாத்தி. (௧எ௫)

இலங்கு தூபதீ பங்கொடுத் தினியதூ யன்ன
நலங்கொள் பாகிலே நிவேதன நல்கிநற் பசுவைப்
பலங்கொ ளன்பினுற் பணிந்தருச் சனைபுரிந் ததற்பின்
வலங்கொண் மந்திரஞ் சதஞ்செபித் தேற்பர்கோ மயத்தை. (௧எ௬)

சானு மீருவா வட்டமி சதுர்த்தசி யினை
கால மின்னதில் விட்டகோ மயத்தையக் கணத்தி
ஞலும் பூமியில் விழாதுமுன் னம்புய விலையா
லேனும் வாழைமெல் லிலைநறும் பலாசிலை யிவற்றால். (௧எஎ

ஓதும் யோனியிற் படாதுமே லாகவொண் சத்யோ
சாத மந்திரத் தேற்றுமேல் வழும்பினைத் தள்ளி
யாதி வாமத்திற் கவ்வியம் பெய்தகோ ரத்தாற்
போத நன்குறப் பிசைந்துதற் புருடத்தி னுருட்டி. (௧எ௮)

பன்னும் வெய்யவோ மத்தினிற் பதடியோ டமைத்து
முன்னு ரைத்திடு மகோரத்தால் விளைவித்து மொழிந்த
விந்தி லந்தொழும் பாகங்கண் டீசானத் தெடுத்து
மன்ன லந்தரும் புதியதூ யாடையின் வடித்து. (௧எ௯)

சங்கு பொன்வெள்ளி தாமிர பாத்திர மடைவிற்
றுங்க வுத்தம மத்திம மதமமுஞ் சொல்லு
மிங்கி "தன்றியு மண்சுரை பித்தளை யிவையும்
பங்க மில்லதாம் விளங்குமப் பாத்திரத் தனமைத்து. (௧௮௦)

வண்ண வெண்பொடி யிறையுரு வெனமனத் தெண்ணி
கண்ண ரும்பஞ்சப் பிரமகற் சட்கமு நயந்தே
யெண்ணு தற்கரும் வியோமவி யாபியென் றிசைக்கு
மண்ணலன் மந்திர மிவற்றினு கமவிதி செபித்து. (௧௮௧)

நறிய சண்பகங் கேதகை பலாசம்புன் னைகுஞ்
சிறிய சண்பகந் தாமரை துளவபா திரிப்பூ
வெறிக ருப்புரம் வெட்டிவேர் மருவிலா மிச்சுக்
குறிகொண் மல்லிகை தக்கோலங் கொழுந்துநா யுருவி. (௧௪௨)

தருப்பை யின்னுனி யாகமஞ் சாற்றுமற் றெவையுந்
தெரிப்ப ருஞ்சத்யோ சாதமீ சானமுஞ் செபித்து
மருப்ப யின்றவெண் பூதியுண் மணங்கொளச் செறித்து
விருப்ப முற்றுவெண் ணீற்றின்கா யத்திரி விளம்பி. (௧௪௩)

சுத்த மாகிய வில்வத்தில்லைத் தணிமலர் சூட்டிப்
புத்தி யீதென வண்டுகில் வாயினிற் பொதிந்து
பத்தி சேர்கவ சத்தவ குண்டனம் பண்ணி
யத்தி னந்தெறித் துத்தேனு முத்திரை யடைவாய். (௧௪௪)

மூலத் தாற்கொடுத் திடுவாம் முழுவெண்ணீ றெடுக்கி
னேலத் தாஞ்சிவ மந்திர முச்சரித் தெடுப்பர்
ஞாலத் தார்தொழும் பெரியர்முற் கற்பமா கவின்றோருஞ்
சீலத் தார்பஞ்ச வில்வத்தால் விளைத்தலுஞ் செப்பும். (௧௪௫)

கற்ப மித்திற முத்தம மிருத்தலுங் கருதி
யுற்ப னத்தொடன் றெடுத்தகோ மயத்தையன் றுருட்டி
யற்பி னுக்கினுஞ் சென்றுவே றுணக்கியே யடினு
நிற்ப தப்பெய ரநுகற்ப நிகழ்த்துதுங் கேண்மின். (௧௪௬)

இணங்கு சித்திரைத் திங்களிற் செறிவனத் தெய்தி
யுணங்கு நன்மயங் கொணர்ந்திடித் தூரியகல் வியம்பெய்
துணங்கொர் பாகனன் றறைந்தமுன் மனுப்படி விளைப்பார்
கணங்கொண் மாதவத் தீருப கற்பத்தைக் கழறில். (௧௪௭)

இலங்கு நீள்வனத் துணங்கிய மயங்கொணர்ந் திடித்து
கலங்கொள் கோசல மொன்றுமே பெய்துமுன் னவின்ற
வலங்கொ ளாகம விதிப்படி மனுமொழிந் தடைவின்
பலங்கொ ளப்பிசைந் துருட்டிவைத் தெடுப்பர்பாங் கறிந்தோர். ()

அகற்ப மாவன வனத்திற்று பாக்கினி யதனால்
விகற்ப மின்றியே யியற்கையின் வெந்தவெண் பொடியை
யுகப்ப வேகொணர்ந் தானீந்தும் பெய்துமுன் னுரைத்த
வகைப்பு லெந்திறன் மந்திரத் துருட்டிவைத் தெடுப்பார். (௧௪௯)

சான்ற நூல்புகல் சர்வசங் காரகா லத்திற்
றோன்றும் யாவுந்தன் னுதல்விழி யங்கியாற் றொலைக்க
வான்ற வார்குழை பாகனம் மயானத்து நடித்தா
ணுன்ற நீறெலாந் தோய்ந்திட மேனியி லவற்றை. ( [illegible] )

திருக்க ரத்தினால் வழித்தெறிந் தனன்றிகழ் விடைமுன்
விருப்பி னலவை யயின்றந்த விடைதன்வீ ரியத்தை
யருப்ப மீக்கொளப் பசுக்கள்பால் விட்டதப் பசுக்கள்
பெருக்கு கோமயம் விபூதிக்கு விசேடம்பே சினவால். (௧௧௧)

நீற்றின் மிக்கது கோமயத் தாக்குவெண் ணீறே
யேற்ற மாயின தாதலிற் காரண மிசைத்தே
மாற்றல் சான்றிடு முனிவிர்கா ளாதியோ டந்தந்
தேர்ற்ற மீறிரண் டிற்குங்கா ரணந்தொகு பூதி. (௧௧௨)

வேத ராதிய மூவர்க்கும் விமலனா லயத்து
மோது சூத்திரர்க் குயர்மடப் பள்ளியி னகத்து
மேதந் தீர்குறை யேனையர்க் கடவித்தீ யிடத்தும்
போத வாக்கிய நீறுரித் தாமெனப் புகலும். (௧௧௩)

பரவு நீலர்தீப் பிணிஇவப் பிசையின்மை பகர்தூம்
விரகி றத்தவர் யுகந்தெறும் பீதநல் குரவா
நிரவு மித்திற நிறம்படா தெடுத்திடு நீற்றி
னுரவு வெண்ணிற மெண்ணிலாப் புண்ணிய முதவும். (௧௧௪)

அங்கு லம்மொரு பானிரண் டியாத்தி னகலந்
தங்கு மெட்டள வாடையாற் றனிப்புலித் தோலாற்
பொங்கு கான்பிணை யுரிவையாற் பொருந்தவாய் வட்டந்
துங்க நீறடைத் திடுமொரா லயஞ்செய்வர் தூயோர். (௧௧௫)

பூதி யாலயஞ் சத்தியன் னதிற்புனை தருநா
லாதி நான்முகன் பங்கிக்குங் கயிறுமா லதனுட்
டீது தீர்தர வுறைவெண்ணீ றருட்சதா சிவமாம்
வேத வாகம மித்திறம் புகன்றிடு மெய்ம்மை. (௧௧௬)

ஒருகை யிற்கவர்ந் தனதுஇற் றலையின வொருவர்
தருவி லக்குவாங் கினவழிக் கையாளித் தனமுன்
கருது பூதிகந் கவிழ்ந்துமங் காந்துங்கம் பித்துந்
தெருடெ றிப்பட கடந்தும்பூ சினதருந் தீங்கு. (௧௧௭)

அந்த ணாளர்தம் பதாந்தமே யள்வுமுத் தூளம்
வந்த காவலர் நாபிமேல் வணிகரா யவரு
முந்து பட்டம்போன் மூவிரற் கொண்டெழுத் தாகச்
சிந்தை செய்துருத் திரணி குவர்விதித் திறத்தால். (௧௯௮)

நுதலு ரம்புய நுவன்றிடு நெடுமைநீற் றளவை
மதிகொண் மூவிரு விரற்களா மற்றவற் றொன்றாந்
துதிகொள் சென்னிக்குங் காதிற்குந் தொடுதலே போதும்
பதிகொண் மூவிரற் படவணி குவர்பக ருறுப்பின். (௧௯௯)

வளைத நுங்கடு விழுத்தலும் வன்மையு மாசு
மளவி யொன்றொடொன் றுறுதலு மறப்பிரிந் திடலும்
விளையு மூவிரு தீக்குணம் விளங்கநீ றணிந்தா
லுளைவு றுங்குறை யிலாதவர்க் கலக்கண்வந் துறுமால். (௨௦௦)

பூசை மந்திரந் தியானநூல் புரிதவம் வணக்கம்
பேசு நீறின்றிப் பிறங்குமெக் கிரியையுஞ் செய்யார்
மாசி லந்தணர் மகத்திறுங் கனைத்தும்வந் துறினுந்
தேசு றும்விதித் தியின்றி முடியுமோ முடியா. (௨௦௧)

அரவன் மூன்றுநூ லறைதரும் யாகத்தின் மூன்றுங்
குரவன் மூன்றுநீ றணிவது நீதவைக் குறியார்
பரவு பூதியோ ரணுத்துணை பாரிடை வீழ்ப்பின்
விரவு மெண்ணிலாக் கற்பங்கள் வெந்நர குழப்பார். (௨௦௨)

தொகுத்த வாழ்க்கையாற் பூதியுஞ் சோதிமேற் றலாற்
பகுத்த நூல்புகல் பசிதமும் படுமலம் பிணிமா
சுகுத்த லாலுயர் கார * முங் காத்தலாற் காப்பு
மிகுத்த தீதுநீற் றிடுதலா னீறும்பேர் விளம்பும். (௨௦௩)

சிரத்த ணிந்திடிற் கழுத்தள வுறுபவந் திரு
முரத்திற் பூசிடி னுள்ளத்தால் வரும்பவ மொழியுந்
தரிக்கி னுபயி னிலிங்கத்தால் வருபவந் தணியும்
பொருத்து பாரிசத் திடின்மடந் தையர்ப்புணர் பவம்போம். (௨௦௪)

குதத்தி னுக்குமேற் பூசிடிற் குதத்துறு பவம்போம்
விதித்த திண்புயத் திடிற்கையாற் செயும்பவம் வீடுங்
கதித்தி டும்முழந் தாளினி லணிந்திடிற் காலான்
மதிக்க வேவரும் பவங்கதிர்ப் பனியென மாறும். (௨௦௫)

---

* க்ஷாரம் என்னும் வடமொழி காரமென்றாயிற்று.

பார்த்த தாலுறு நீற்றினை யின்னமும் பகர்வாம்
யாகத் தானவெண் ணீறுநால் வருணர்க்கு மிடலா
மோகத் தார்வினை களைதரு மீதன்றி முதன்மை
மாகத் தார்தொழு மியற்கைநீ றதிகுய்யம் வழுத்த. (உ0சு)

நீறு பூத்தன னழல்வடி வியற்கைவெண் ணீற்றைப்
பேறு நல்குவோன் மூலகா ரணம்பெரி தென்று
வீறு பல்லுயிர் நாகுரு வாறுமென் மருந்தாய்க்
கூறி னன்கரத் தால்வழித் தம்மைகைக் கொடுத்தான். (உ0எ)

விரித ரும்புகழ் நீற்றினை யறிந்துமே லணியா
ரிரிஞ் ஞற்றநீர் பதிதாய் விடுவராந் தணர்க்குஞ்
சுருதி யோதுநீ றிடாமுகஞ் சுடலையம் முகத்தைக்
கருதி நோக்கினா றஞ்செழுத் தோதுவர் கற்றோர். (உ0அ)

வேறு.

ஆலவா யெல்லையிலு ளகப்பட்ட சாம்பரிவற் றதிகங் காழிப்
பாலனார் பூதியன்வெப் பமனைழித்து வாதுவென்ற பான்மை யானு
ஞாலமேழ் பரவுசிவ சைவசம யம்பொருளா நாட்டலானு
மேலவார் குழல்பாகன் றென்மதுரைக் காகுச மின்மை யானும். ( )

எங்ஙீறு பூசினுந்தென் னாலவா யான்றிருநீ றென்றே பூசிற், பன்னூறு கோடிசன னத்தறிந்து செய்தகொடும் பாவந் தீரு, மூன்னூறு படுத்தவரு கமனையுங்கா ளூர்முடிவின் முத்தி சேர்வார், நன்னீறு தனையணிந்தோர் பெற்றவா சிலவுமக்கு நவில்வாங் கேண்மின்.

முன்னமொரு பிரளயத்து நான்முகனு தியவொரடுங்க மூராரியான்மேற், றன்னகந்தை மிகுந்திருப்ப வவனுதலிற் சங்கரன்வெண்ணீறு சாத்த, மன்னகந்தை நீங்கியவன் மோகினியாய் மருவியுந்திவனசத் தின்று, பின்னொருநான் முகனையும்பே றறிவும்பெற்றான் பிறிதில்சிவன் பொருளென் றெண்ணி. (உகக)

திமையுறு பிரமராக் கதனொருவன் பாதகமே செய்வான் முன்னாள்
வாமதேவப்பெயர்மா தவனனுக் கண்டறிவு வரலுந் தாழ்ந்து
தாமநீ றொளிருமவன் மேனியைத்தன் மேனியினாற் றழுவி வேணுங்
காமுறுநல் லுருப்பெற்றுப் பூதியுமெய் யணிந்துசிவகதியும்பெற்றான்.

தென்னவனாட் டொருமறையோ னயன்மாதைச் சேரவவள் கொழுநன் சீறி, யன்னவனை ருயிர்செகுத்தீர்த் தாவனைத்திட் டான்கிடக்குமவனி னைற்றி, தன்னிலட லையிற்கிடந்த சுனைங்கன்னா னி

றுபடத் தரித்த லாலே,கொன்னுறுவே னமன்படைத் தூர்ந்துகண்டும் விடக்கயிலே குறுகி னுனல். (உகங)

தன்னையறி யாதுடலி னீறுபரி சித்தோரித் தன்மை பெற்ற, ரென்னிலறிந் தணிந்தோர்கள் பெறும்பயனிவ் வளவையென வினச க்கற் பாற்றே, பின்னுமதிச் சடைமௌலிப் பெம்மானே யவர்வே றுபிறிதொன் றன்று, லன்னவரை நரனென்போர் நரகாழ்வ ரமல னென்போ ரரனே யாவர். (உகச)

வேறு.

இயம்பிய நால்வகை நீறு மிங்ஙனை
வயம்பெற வணிந்திடு மாறு மாறிலா
வியம்பெறு புண்ணிய வினைவுஞ் சொற்றன
நயம்பெறு கண்டிகை நவில்வங் கேட்டிரால். (உகரு)

---

உருத்திராக்கம்.

வேறு.

திரிபுர ரொனும்பே ரவுணராற் சிதைந்து சிந்திய மான்முதற் றேவர், புரிதரு தவமோ ராயிரம் வருடம் புரிந்திட வியந்துபோய்ப் புராரி, யரிதிதென் றிரங்கிக் கண்ணிமை யாது பார்ப்பமுக் கண்ணி னு மனமந்த, விரிதுளி தாழ்ந்து கண்டிகை மரமா யெழுந்தது விழுந் ததொண் புவியில். (உகசு)

அன்றுதொட் டுருத்தி ராக்கமென் பெயர்மூப் பானுடெண் பேதமாம் வெண்மை, யொன்றிய சிவப்பவ் விருநிறங் கலந்த துனை த்திடுங் கருமையிந் நான்கின்,றென்றுநான் மறையோன் வெண்மை மன் சிவப்புச் சொன்னிறங் கலந்தது வணிகன், வன்றிறற் கருமை சூத்திரன் சாதி வருணநால் வர்க்குமிவ் வகைத்தாம். (உகஎ)

ஒருமுகஞ் சிவன்றன் வடிவுநான் மறையோர்ச் செகுத்ததீங் கொ ழித்திடு மிரண்டா,வருமுகஞ் சத்தி சிவம்பசு வதைத்த வன்பழி மாற் றமும் முகந்தீப்,பெருகுபெண் கொலைதீத் தருளுநான் முகனுன் முக ன்பிழை நாகத்தி போக்கு, மருமையைம் முகங்கா லசங்கிருத் திரனு னரித்தலர்ப் புணர்ச்சிபோய் யகற்றும். (உகஅ)

அறுமுகன் வேலன் வலக்கையி லணிவ தகன்றிடும் பிரமகத் தியுமே, மூறுமுக மனந்தன் கோக்கொலை யொடுபொற் களவினல்

வ்ருயவ மொழியு,மறுவிலென் முகம்வா ரணமுகன் குருபன் னிமைய
த்தொடல் வருதுலை முதலாப், பெறுபல தானம் பிறன்கையி னன்ன
மேற்றிடும் பிழைநீங் கிடுமால். (உககூ)

இயம்பிய் வொண்பான் முகம்வயி ரவனு மிடக்கையிற் றரிப்ப
து வன்பார், வயம்பெறு தக்க கண்முத லாவம் வதைத்தல்போ முத்
தியு மெய்து, நயம்பெறு மொருபான் முகந்திரு கேமொ ஞெனாடு
கோள்பெறும் பூத, முயங்குபேய் பிரம ராக்கதன் மற்று முடற்றிடும்
பெரும்பய மொழியும். (உஉ0)

பதிதொரு முகம்பன் னொருருத் திராம் சர்பரி மேதமா யிரம்
பன், னிதியொடு கோதா னம்மொரு நூறு யிரந்தரு பயன்களை நிறை
க்குங், கதிகொள்பன் னிருமா முகங்கதி ரோருபா னிரண்டதாங் கா
ஞ்சன மேரு, விதிதரு தானம் புரவியச் சுரபி மேதநல் கியபயன் றரு
மால். (உஉக)

செறிதரு பதின்மூன் றுமுகங் கந்தன் சிந்தையில் வேட்கைபொன்
னிரத, நெறிதரு சயமு மளிக்குநற் றுணைதாய் தந்தையர்த் தெறுங்
கொலை நீக்குங், குறிதரு பதினான் முகருசிவந் சத்தி கூறும்வின்
னவர்தவ ரிறைஞ்ச, வறிதரு வசிய நல்கியூ ழியினு மழிதரா வுலகி
லுய்த்திடுமால். (உஉஉ)

கிளர்த்திய பதினைன் முகம்பெற லரிது கிட்டுமேற் கண்டத்திற் றரி
ப்போ, துளத்தினி னிங்காச் சிவன்சத்தி மந்தி ராதியு மெய்ப்பதொண்
முத்தி, விளைத்திடும் பதினோ முகம்பா நாதம் விளம்புமெய் பாவமும்
வீட்டிப், திளைத்தெழுங் கருணைச் சோதியோ டொன்றித் தீர்விலா
முத்தியிற் சேர்க்கும். (உஉங)

நீசராங் குணுங்கர் குணுங்கர்கள் னியரு னெறியிலா மனுமுதல்
புசித்தோர், நீசரு ரருட்கண் மணிசிரந் தரித்தா லிருவினை தொலைந்
தா ருவர், மாசிலாக் குலத்த ராயினு மீசன் கண்மணி வனைந்திடார்
நீசர், ஈசியன் னரைத்தின் டினுமதி பூவ மணியிலா ரலக்கணுர் தெ
ரிப்பார். (உஉச)

வேறு.

உச்சியிலொன் றணிசிரத்தி னொருமுப்பத் தறெண்ணுன்
கொளிர்கண் டத்தி, லிச்சையுறு செவிக்கவ்வா றாத்திலைம்பான் கை
த்தலத்தென் னிரண்டீ ராறும், லிச்சைதரு மணிக்கட்டிற் றீழ்வட

ங்க ணூற்றெட்டும் விளங்கச் சாத்தி, நச்சிநடந் திடுமடிக்கோ ரய
மேத நவிற்றிலுருத் திரனே யாவர். (௨௨௫)

காணினுமக் கண்டிகையின் பயனிலக்கம் பரிசிக்கிற் கோடி க
ண்டு, பூணினுமா யிரங்கோடி செபத்தனந்தம் பயனிமையோர்
பூசைக் கேற்ற, தாணுவைப்போ லுவர்பகைக்குந் தாழ்ந்தடங்கார்
கணந்தரிக்கிற் சுணங்கற் கேனு,மாணுறுநற் கதிகொடுக்கும் புகழ்ந்த
ணிந்த மானிடர்க்கென் புகல்வ தம்மா. (௨௨௬)

சிகையினிற்கண் டிகைதரிக்கிற் பயன்கோடி திண்செவியி லொரு
பான் கோடி, மிகையறுகந் தரத்தினிலா யிரங்கோடி மிளிர்சுரத்தி
லனந்த மாகும், பகைதருவெந் தீவினைக ளெத்தனைசெய் தோருமிது
பரமென் றெண்ணித், தொகைபெறுநாட் கழித்திறுங்கா லருந்துவ.
ரோற் பிறப்பவரைத் தொடரா தம்மா. (௨௨௭)

நீங்கரிய முப்புரிநூ லின்றிமறை நிகழ்த்துவதெவ் வாறவ் வாறே
தாங்கரிய கண்டிகையும் புண்டரமுந் தரித்திடுமந் தணருக் கேனு
மோங்கியிடத் தவ்வாறு தரித்திலரே லிராட லோத லீதல் [தால்.
பாங்குபெறத் தென்புலத்தோர்க்குதவுதலர்ச்சனைமற்றும் பயன்படா

கண்மணியா யிரந்தரித்தோர் சிவனெனமான் முதற்றேவர் கரு
திப் பூசை, பண்ணுவர்மா முடிதரித்து மூழ்கியிடிற் கங்கைபடி பல
னுங் காசி, லெண்மணியை முழுதுமணிந் தவர்மூவேழ் சுற்றமிடர்
நரகு நீங்கு,மொண்ணனவமா மணிபடிகம் பொன்னிடைகோத் தணி
யிலவ ருறுவர் முத்தி. (௨௨௯)

ஏகமுக மைந்துமுகம் பதினொன்றே ழிரண்டுமுக மிவற்றை
யெண்ணி, வாகுறுமஞ் சனம்புரியா தன்பினொடு முனமிரங்கி வழுத்
தி யீச, ஞகமநூல் விதியினருச் சனைசெய்வோர் செல்வமுத்தி யடை
வர் நாரி, பாகனுருச் சின்மயமா மணியணிந்தோர் பெற்றகதை பக
ர்வாங் கேண்மின். (௨௩௦)

நந்தியெனு மொருநகர்வா ழீசனு லயத்தடிச்சி நங்கைப் பேரான்,
விந்தைசெறி சேவலொன்று வானரமொன் றிற்குமணி மிலைந்து
தானும், புந்தியுறத் தரித்தவற்றோ டான்கயிலை யடைந்தனள்போய்க்
கழுதை யொன்று, நந்துமணிப் பொதிசுமந்து விந்தையினி லிறந்துக
ற்பங் கயிலை நண்ணும். (௨௩௧)

புட்காதே யத்துமன்னன் சவுமியன்றன் மனையொருவிப் பெரும்
மைம் மாதர், கட்புறுவா னவன்மனைவி வசுமதியும் வேன்கனையா
னலிந்து வாடிக், கட்புலனீ ரொழுகவரும் துறுவாள்கண் மணிதரி
த்தக் கணவற் சேர்ந்தாள், கொட்புறுமம் மனன்றரித்தொன் ஞர்புலி
யுங் கொண்டனன்போய்க் கயிலை புக்கான். (உ௩௨)

கனைகழன்மே ஞட்டாசன் ருமலைக்கண் ணன்கால ஞானி
யென்று, மனைவியொடு மிகலிரீ பதியெனக்கு நிற்குளான் மனைவி யா
வேன், புனைசுவர்ச்சித் திரமாயன் புகலிலெண வவன்கண்மணி பொ
ருளென் றேத, வனையன்மட வரலாறு னவள்புருட ஞேள்சேர்ந் தா
ன்றூள் சேர்ந்தார். (உ௩௩)

உருத்திரவக் கம்புனைவோர்க் கனமிடும்வே தியன்சுப்ர தீப்ஞெ
ங்கு, மருத்தியிறு லவனருளால் விண்ணர்கர்போய்த் தருக்கொணர்
ந்தே யளிக்கும் பூஞைஞ், வருத்துபசி யால்வந்த மறையவஞே டிகலு
மறு சமயி யான,விருத்தமறை யோகாங்கன் கண்மணிபூண் டான்க
யிலை மேவி ஞால். (உ௩௪)

மிளிர்கலிங்க நாட்டுவியாக் கிரபுரத்தோர் வேதியன்சா மித்ர
னென்போன், களவினின்மேம் பட்டோன்பல் லுயிர்செகுத்தோன்
வளந்தமறைக் கள்ளத் தாதை, தளர்வுறவே செகுத்தயன்மர் தைப்
புணர வன்னள்ளிளை தடிய வீந்தான்,றிளைதரார லாநாளிற் காகமணி
யுடல்வீழ்ப்பக் கயிலை சேர்ந்தான். (உ௩௫)

மாகரநாட் டுறையுமொர்வே தியன்மதலை சாங்கிகஞேர் மணி
மேற் பூண்பான், சாகரநாட் டாசுகொளத் தான்காளி நரபலிக்கு
விலைப்பட் டேகி,யாகரநாட் டதுவிலக்கி யவ்வரசன் மகளைமணந் தர
சா யிந்து, சேகரன்கண் மணியணிவித் தவன்கிளைதன் கிளையொடு
ம்போய்க் கயிலை சேர்ந்தான். (உ௩௬)

அக்கமா மணியணிந்தோர் பெற்றகதை யிற்சிலநா மறைந்தோ
மம்பொன், மிக்கதா மிரம்வெள்ளி யியன்றவற்றூற் பொதிந்தவற்று
ல் விளங்கும் பின்னற், ரெக்குறுகம் பியிற்கோத்துப் பொரிதணிந்
தோர் முப்பொருஞந் தெளிந்த தூயர், தக்கமணி யணிதோரைச் சி
வமெனவே பாவிப்போர் தக்கோர் தாமே. (உ௩௭)

உரைத்தனமா மணிப்பெருமை படிப்பவர் துண்மையென வுவ
கை கேட்போர், ரிரைத்தநதிச் சடையோனை சேர்ப்பர்மணி வெ

ஞ்ஞானிறோ டியைந்து பூண்டு, நிரைத்ததிரு வஞ்செழுத்தை யுச்சரித்
தந் நிலையுணர்ந்தோர் நேர்மை யாரே, வரைத்துரைப்பா ரறிந்தவா
தொகுத்திசைப்பே மென்னமுனி வரர்க்குச் சொல்வான். (௨௩௮)

---

## பஞ்சாக்கரம்.

### வேறு.

அருளை யஞ்செழுத் தாக்கியே யம்பிகைக் கமலன்
பொருள்வி ளங்கிடப் புகன்றதிம் மந்திரம் புகல்சற்
குருவ றிந்துளந் தேறுறத் தெளிப்பதாங் குணித்து
வருப யன்பெற வுணர்ந்துளோர் பேற்றையார் வகுப்பார். (௨௩௯)

அஞ்செ ழுத்தினு ளோரெழுத் தின்பய னளவை
கஞ்ச நாண்மலர்க் கண்ணனுங் கண்ணனுங் காணார்
செஞ்ச வேபிர ணவத்தொடுஞ் சேர்த்தியுச் சரிக்கிற்
பஞ்ச பாதக ராயினும் பரனெனப் படுவார். (௨௪0)

இன்ன வஞ்செழுத் துணமலி னுமுயிர் சென்று
பன்ன 'காபர னென்பதஞ் செறிந்திடும் பரிசா
லன்ன மந்திர மேபரப் பிரமமா துணர்ந்து
மன்னு வோர்நிழற் படினுங்காண் கினும்பவ மாறும். (௨௪௧)

மூன்று காலமு மாலயத் தனுகிமுக் கணன்ற
னூன்றி யேதொழு துள்ளத்தவ் வஞ்செழுத் தெண்ணிற்
றோன்று புண்ணிய மியாவும்வந் தடங்குந்தொல் வினைபோ
மேன்ற பார்புரந் திருங்கதி மூவரிற் பொலிவார். (௨௪௨)

### வேறு.

மந்திரித்த விறையெட்டுப் புத்திரசீ வத்தொருபான் மணியாஞ் சங்கி
னிந்தமொரு நூறுபளிங் காயிரமுத் திலக்கநூ றுமரையின் கோடி
சந்திரத்திற் பதின்கோடி குசைமுடிப்பா யிரங்கோடி தானு வான
முந்துசிவன் கண்மணியின் பயனனந்த மெனவேத முடிபுசொல்லும்.

வளமனையி லொன்றுபகுத் தொழுவிறொரு பதுநதியின் மருங்கு நூறு, கிளர்தருமா லயத்திலுளா யிரம்வனத்து விலக்கமுயர் கிரியிற் கோடி, முனைமதிச்செஞ் சடைமவுலி திருமுன்ன ரளப்பில்பயன் முற்றும் பெற்ற, வளமுறவஞ் செழுத்தாதி கண்மணித்தா ரொடுந்துணர்ந்துச் சரிப்போர்க் கம்மா. (௨௪௩)

நிரைத்தகடற் புவியோற்று மஞ்செழுத்தைச் சிந்தைசெய்து தெளியப் பெற்றோ, ரிரைத்தமறை யாகமநூல் விதியறிந்து செயிப் பர்முறை யியல்பு கூறி, னிரைத்தசெப வடங்களோ நூற் றெட்டென்று மதிற்பாதி யிகழ்ந்த தென்று, முரைத்திவெ ரதிற்பாதி யளவென்று மின்னுமுரைத் திடுவாய் கேண்மின். (உசரு)

முத்திநெறிக் கையைந்து சோபனத்திற் கியம்பியமூ வொன்பான் கூறு, மெத்துசித்திக் கொருமுப்பா ஹபிசாரத்தொழிற்கு மேனைம் மூன்று, வித்தன்மணி வடந்தொடுப்பின் மேற்குமேல் கீழ்க்குங்கீழ் மேரு மேலாய்ப், பத்திபெற வொன்றுபடுத் திடைமுடிந்து தொடுப்பர்பயம் பாறுரல் கற்றோர். (உசகூ)

உடல்வெறுத்தான் மேல்போக்குங் கீழ்போக்கு முறுபோகஞ் சரீர்வான் மேரு, வடைவுபெற விலங்கியா தனுமிகையே மத்திமைதர்ச் சனியங் குட்டங்,கிட்டமுறவே வடகடத்திற் பிணியறலுந் தனம்புகலுந் தெய்வர் மாயப்பு, மிடாநூகன் முத்தியடை தலுமடையு மென்பர்கதிக் கிலக்கந் சொல்வார். (உசஎ)

வேறு.

இனைய தாகிய வஞ்செழுத் தெண்ணியே
வினையி னீங்கின ரெண்ணிலர் மேதக
வனையர் பெற்ற வருங்கதை யிற்சில
முனைவிர் கேட்குதி ரொன்று மொழிகுவான். (உசஅ)

வேறு.

மதுரையம் பதிவா ழெதுகுல மன்னன் றசாருகன் காசிமன் மகளாம், புதுமதி வதனக் கலாவதி யின்னே வேட்டனன் புணர்ந்திடப்புகுங்கால், விதுகதி வேணி யஞ்செழுத் தோதி மேவெனக் கர்க்கர் பால் வினவிக், கதுமெனக் கொடியாய்ப் பவங்கரிந் திடப்போ யவட்புணர்ந் தடைந்தனன் கயிலே. (உசகூ)

இல்லறத் தினிலஞ் செழுத்துணர்ந் திருக்கு மியன்மறைத் தருமனே டிகலிப், புல்லறத் தியோகி சுந்திர னில்லிற் றுறவதே பெரிதெனப் புகன்று, மல்லல்கூர் மகவான் மலாய னிவனை, வருவிக்குந் தருமற்குத் தோற்றே, யொல்லையன் னவற்றுழ்ந் தஞ்செழுத் துணர்த்த் வுணர்ந்தில்வாழ்ந் துறைந்தனர் னென்றுள். உ௫0)

சூரிய சன்ம னென்றொரு மறையோ னனந்தன் புணர்ப்பினுற் சுதனேச், சீரிய பசுவை மருகியை யறியான் வதைப்பவச் செழுங்கவு

இன்னுமொரு விதிபுகல்வார் தேசமியிலங் குரித்தேகா தெசியிற் பான்மை, மன்னுதிருப் பாற்கடலின் மந்தரநாட் டினர்கடையிமாலைக் காலந், துன்னுவிடஞ் செனித்தெழுந்தங் கமலனுண்டான் றுவாதசிநா ளயிர்தந் தோன்றப், பன்னுமிமை யவரயின்று த்ரயோதெசிமா லையிற்பரனைப் பணிந்தர்ச் சித்தார். (சசஅ)

விடைமேனின் றமலனருள் கொடுத்துமக்கு வேண்டும்வரம் விளம்பு மென்னக், கடலால மூண்டிருண்ட கண்டாவென் றடிபோற்றிக் கமலன் கூறுந், திடமாக வருந்தெசமி யெனக்கென்று னரியேகா தெசியெற் கென்று, னடைசேருந் துவாதசிப்பா ரணமுமென்று னவர்க்கவர நல்கி ளுனல். (சசகூ)

ஆதலினு லரிவிரத மென்றுயிற் றரனரிக்கும் பொதுவுமாகுமோதியவவ் விரதத்துக் கிணையாக வொருவிரத முரைத்துக் கூடாவேதுவினுற் பிரதோட மென்றுயிற் றிரணியனை நார சிங்கம்வரனைபுரிந் தவெங்கால நித்தியப்பிர தோடமென வழங்குங் காலம். ()

அத்தமன முன்பின்மூன் றேமுக்காற் கடிகையதூஉம் விசேடமாகும், பத்தியினு லக்காலம் பாம்பரனைத் தெரிசிப்போர் பவங்கணீங்கி, முத்தியடைந் திடுவர்முன மொழிந்தபதின் மூன்றுநாட்பிரதோ டத்திற், சித்தமுற வான்மார்த்தம் பூசிக்குந் திறம்புகல்வாந் தெளிந்து கேண்மின். (சருக)

பிரதோடவிரதம்.

ஐப்பசிகார்த் திகைசித்திரை வைகாசித் திங்களென வறைந்தநான்கி, னுப்பில்சனிப் பிரதோட முதற்றொடங்கி நாற்பானு டொன்றைம் பத்தைந், தெப்புவன மூந்தொழவெண் பத்தொன்று தொண்ணூற்றே ழேனு மெண்ணித், தப்பறுபூ ருவமபர பக்கந்தோறனுட்டிப்பர் தணவா ராகி. (சருஉ)

இந்தமுறை யனுட்டித்தே யான்மார்த்தம் பூசிப்ப ரியம்புஞ் சங்கை, முந்துரைத்த தொகைதீர்ந்த வந்தியத்தின் மொழிந்தசனிப் பிரதோ டந்தான், வந்திடுநாள் வரையனுட்டித் தந்நாளுந் தியாபனமும் வரம்பிற் செய்வார், புந்திதெளி யான்மார்த்த பூசையுமுத் தியாபனமும் புகல்வாங் கேண்மின். (சருங)

பிரதோடபூசாகாலநிண்ணயம்.

இரசனிமா முகந்தொடங்கி யேழரைநா ழிகைமூன்றி யாமமென்றே, யுரைதருமப் பிரதோடத் துரியவகோ ராத்திரமுந் தமம்

யர் தென்னில், வரையுமிரண் டாம்யாமத் திரண்டுதெள்ளி மற்றைய
ரைக் கடிகை சொல்லுங், தெரிதருபூ ருவவித்தை யபரவித்தைமூன்
றும்யா மத்தைச் செப்பும். (௨௫௪)

சொற்றனவும் பூசைக்கு விசிட்டமாங் துலங்குதுவா தெசிமுப் பா
னென், றற்றிடினுங் கடிகைமுப்பா னுறுதிது மாம்பிற்றை யுறுநா
டன்னிற், பெற்றதிர யோதெசிமுப் பான்முப்பத் தொன்றிருபத்
தொன்பான் பேசின், முற்றியபூ சனைக்காகா முப்பானுன் முப்பத்தஞ்
சுறினு மாகும். (௨௫௫)

பிரதோடபூசை

திதிநிலைய மியம்பினமத் தமனகாற் கடிகையெனத் தெண்ணீர்
மூழ்கிப், புதியவத்தி ரத்திரங் துவட்டியுத்தூ ளனநீறு பூசிப் பின்னர்ப்,
பதிமிருத்தி யுஞ்சயத்தாற் றனைக்காக்குங் கவசமதாய்ப் பாவித் தன்பி
ன், புதியகலை யிரண்டுடுத்துத் தரிகமணிக் தாரமுதல் பூண்டு பொ
ற்பூண். (௨௫௬)

ஆன்மதத் துவமுதலா சமனமுடித் திடக்கையினி லமைத்துப் பூ
தி, யாண்மைபெறு மலாமனுவாற் சுத்திபண்ணி யஞ்செழுத்தாற் பனி
நீர் விட்டு, மேன்மைபெறக் குழைத்தந்த மந்திரத்தாற் சிரமுதல்வி
ளங்கப் பூசி, நான்மரபிற் கைகழுவி நுவல்கும்ப முத்திரையான் முடி
யின் மீது. (௨௫௭)

சிவமனுவாற் புரோக்கித்துப் பிராணயா மமுஞ்செய்து சிவாச
னஞ்சி, பவமறவே வியாசித்தல் வஞ்செழுத்தா லங்கவி யாசஞ்செ
ய்து, தவறறுமம் மந்திரத்தாற் பதினென்றே னும்பதினொ ரேனுங்
தர்ப்பித், திவர்தரவா சமித்தனிக்தஞ் செழுத்தானீ றனுட்டான மிய
ல்பிற் செய்து. (௨௫௮)

எழுதா ஞென்பதயி மந்திரித்தல் வஞ்செழுத்தா லிருந்தண்
போதாற், முழுமூ தருச்சிக்குந் தனையும்பூ சாத்தானத் தையும்பு ரோ
க்கித், தூழுறுபச் சிமத்தினிலைங் கரனவற்குத் தரத்தந்ர துவார
பாலர், வாழுறுவாத் துவதிபதி பிரமன்றெற் கவரவர்மந் திரத்தர்ச்
சித்து. (௨௫௯)

இருபான்மேல் கிழ்பாசு பதாத்திரத்தால் விக்கினங்க ளைவை
யும் போக்கி, யொருவாது நித்தியம்போற் பூதசுத்தி யோடுமந்த ரியா
கஞ் செய்து, பரிவாக வத்திரத்தாற் கழுவிவிசே டார்க்கியபாத் திரத்

தைய பணபு, தருமாறு சதாசிவப்பஞ் சாக்கரத்தாற் செறிதருதண்
ணீர்பூ ரித்து. (சகூ0)

அறுகீரலு மைங்காலும் பத்திரத்தாற் சுத்தபஞ்சாக் கரத்தார்ச் சி
த்து, கறுமலர்மூ லத்தணிந்து திக்குபந் தனமவகுண் டனஞ்செய் தற
றிச், செறியவமி மந்திரித்துப் புரோக்கித்துத் தனைத்திருமஞ் சனத்
துக் தெண்ணீர், செறிமலரா லிட்டுவிந்து வெனநுதலிற் சந்தனப்
பொட் டணிந்து நீரால். (சகக)

மூலத்தா லஞ்செழுத்தாற் செய்துசுத்தி சிவன்றுனைய முழுதும்
பாவித், தேலத்தான் பரலிங்க மிறைவிவிடை நானவே திகையில்
வைத்தே, யாலத்தார் களத்தனைச்சா மானியவர்க் கியஞ்சிவகா யத்ரி
யாலே,சிலத்தாற்புரோக்கித்துத்தூபமளித்திபிடேகஞ்செய்து பின்னர்.

குச்சுப்புற சாத்தியயின் னஞ்செழுத்தாற் றிரயம்பகத்தாற் குளிர்
நீ ராட்டி, விச்சைதரு மம்பிகைக்குப் பாசுபதாத் திரம்விடைக்கா யத்
ரி யாலே, யிசைசைமழ விடைகாட்டி யாமஞ்ச ணெல்லிபா றயிர்நெய்
யிக்குப், பச்சிளநீர் பஞ்சவமிர் தந்தேன்சந் தம்பஞ்சாக்கரத்தாலாட்டி.

சுத்தநீ ராட்டிமிருத் தியுஞ்சயத்தால் விசேடவருக் கியந்தைத்
தொன்மை, நித்தியமூ லத்தாட்டித் திருவொற்று டையுஞ்சாத்தி நிம
லன் றன்னை, வைத்தரியா சனத்திலிங்கத் தெதிர்முகமாய் மழவிடை
யை வைத்தர்ச சித்து, முத்திதரு மிடபவீ சாக்கரத்தோ டாசனஞ்செய்
மூர்த்தி மூலம். (சகச)

நால்வேதம் பாதமுட றருமமுகம் பனைசிருங்க நாதஞ் செங்க
ணூலோதும் விந்துகன்னங் குடிலைபவ மண்டநுவல் வாறி ரோமை
மேலோது மவ்விடையின் சிருங்கமத்தி விளங்குமுமாமகேசனென்ன
மாலோதுஞ் சிவலிங்கப் பெருமானை யன்பினொடு மனம்பா வித்து.()

தருமமொடு ஞானமுத லறுப்பாகும் பதுமவா சனம்பூ சித்து
திருமல்லுங் கிருப்பதாய்ப் பாவித்தா சனமூர்த்தி நினைந்தர்ச் சித்து
வருதிரியம் பகமூல வுமாமகே சுரத்தாலா வாகித் தான்ற.
பொருவறுதா பனசன்னி தானசன்னி ரோதனமும்பொற்பாலாற்றி.

துலங்குசுவா கதவருக்கி யங்கொடுத்துத் திருவடியும் விளக்கிச்
சோதி, யிலங்குதிரு வொற்றுடை சாத்திப்பாத் தியாசமனூர்க் கியமு
மீந்தே, நலங்கெழுசந் தனமுழுக்காப் பணிந்துபஞ்சாக் கரத்தா

னன் மலரோ டிண்டை, பொலங்கெழுவே சாத்திப்பா யதங்குன்னான்
னந்தியோ தனந்தாம் பூலம். (௪௬௭)

அஞ்செழுத்தா னிவேதித்துக் குளான்னந்தாம் பூலமேனுன் மனி
க்கு மாக்கித், தஞ்சவிடைக் குழுந்தெள்பசுங் தண்டுலந்தேங் காய்த்து
ருவ றண்ணென் வாழை,விஞ்சுகனி யிவைவிரவிப் பாகிலையும் விடை
விசாக் கரத்தா லீந்து, தஞ்செனவே யிடபகா யத்திரியாற் றிருப்பள்
ளித் தாமஞ் சாத்தி. (௪௬௮)

ஈற்றூப தீபமுப சாரம்பாத் தியாதிபஞ்சாக் கரத்தா னல்கி,யுற்ற
வுமா மகேசுரசம் வாதமிருத் தியுஞ்சயத்தா லுருநூற் றெட்டெப், பற்
றுறவே செபித்துமலர் சாத்தியபி னெழுந்துநின்று பதக னென்யான்,
நற்றியரோ கத்தினனஞ் ஞானனெனப் புகன்றிறைஞ்சித் தொழுது
போற்றி. (௪௬௯)

பராமுகவர்க் கியங்கொடுத்து விடைச்சிருங்க மத்தியினிற் பாவி
த் தன்பா, லராவணிவே ணியனையுமா மகேசனென வுறைகுவதா ய
டைவிற் போற்றித், தராதலத்து வீழ்ந்திறைஞ்சி யென்பூசை கொ
ண்டருட்ற பானே யென்று,விராவுறப்பூ சித்திடுவர் பூசிப்போர்,பெ
றும்பயனை விளம்பற் பாற்றே. (௪௭௦)

இந்தமுறை யாலுலகில் யாதொருவன் பூசித்தா னெண்ணிற்றெ
ல்லாஞ், சிந்தைமகிழ் வுறத்தருமெம் பரன்விரதத் தொகைச்சங்கை
தீர்ந்தா லப்பா,லந்தியத்தி லுயர்ந்தசனிப் பிரதோடம் வருமளவு மருச்
சித் தன்பாற், புந்திமகிழ்ந் தத்தினத்தி லுத்தியா பனஞ்செய்வர் புகல்
வாங் கேண்மின். (௪௭௧)

பிரதோடவிரதோத்தியாபனம்.

முன்னுரைத்த படிபூசாத் தானத்தை யலங்கரித்தம் முறைவ ழாது
பன்னரிய பிரதோட பூசையடை வுடன்முடித்துப் பண்பி னேய்கு
மன்னியவா கமவிதியின் மண்டபமுண் டாக்கிநடுப் பதத்தின்மன்னூ
ழுன்னியவே திகையமைத்தே யதற்கடுத்த கிழக்கிலுறு பதத்தி லோங்க.

விருத்தகுண்ட மாவதுநாற் கோணமா வதுகுண்டம் விரைவி
ற் செய்தே, யுருத்தகுசிர் நிருதியிலீ சானதிக்கி லொவ்வொருவே தி
கையுண் டாக்கித், திருத்தியமண் டபமுமலங் கரித்ததனுட் சென்றத
னை நிரீக்க ணாதி, பொருத்தமுறு சுத்திபண்ணி யைங்தரனை விதிமு
றையிற் பூசை யாற்றி. (௪௭௨)

நில்பெறுசா மாணியவர்க் கியந்தாபித் ததன்பின்பு நிருதி திக்கிற்
பலமுதவு மியற்பஞ்ச கவ்வியத்தா பனஞ்செய்து பரிவா லெங்கு
நலமிலகு புனிதமுறப் புரோக்கித்தீ சானதிக்கிலிருந் தநன்கா[க்கெல்.
யிலகியவொண் பதின்குறுணி யெழுகுறுணி யைங்குறுணியேனுஞ் செ

எண்டகவே பாத்தியந்த நெற்பாதி தண்டிலமேல் விரித்தே யங்
த ,வெண்கடுகெட் சிறுபயறு கடலைவே யரிசிபடி யொவ்வொன்றாக,
நண்புறவே கொணர்ந்தவற்றின் மறுநீக்கி யொன்றுமே லொன்று ந
ன்காய்ப்; பண்புறவவ்வுடையின் விரித்ததன்மீதிலங்கு தளபதுமங்கீறி.

தட்பமுறு மெண்ணிரண்டை யிரண்டுபடி குறுணிநறுந் தண்
ணீர் கொள்ளக், கட்புலனுக் கழகுபெறு மிலக்கணம்பெற் றுடைய
கும்பங் கொணர்ந்து காம, ரெட்கிடைநெற் கிடைகெசரேந் திரக்கி
டைமாத் திரைவெளிவிட் டிழைநூல் சுற்றி,நுட்பமுறு பிரமகூர்த் திர
ஞ்சேர்த்தி விதிமுறைமுந் நூலுஞ் சாத்தி. (சஎசு)

அந்தமணிக் கும்பத்தை யத்திரத்தி னாற்சோதித் ததனைக் கட்க
மந்திரத்தி னாற்கழுவி யுபசாரத் தோடுமணி தூபங் காட்டிக்
கந்தகற்பூ ராதிமுதன் மணங்கமழு நறும்புனலைக் கனியு மன்பான்
முந்துமுமா மகேசுரத்தாற் பூரித்து நவமணியு முறையா லிட்டு.(சஎஎ)

சுத்தமுறு தருப்பையின்முப் பானிரண்டா லமைகூர்ச்ச, மிறுவிச்
சுத, பத்திரம்வைத் ததன்மீது நாளிகே ரமுமமைத்தைம் பத்தைம்
புல்லால், வைத்திலகு வாகுவள வாயிலம்ப கூர்ச்சமுமேல் வாய்ப்பச்
சேர்த்தி, யொத்தகரும் பரிவட்ட முழும்பதினொ ரொருபானே ழிவற்
றி லொன்றை. (சஎஅ)

சாத்தியிறை கும்பத்தின் கீழ்வடக்கே நுனியாய்க்கூர்ச் சத்தைச் சே
ர்த்தி, பூத்தவன்பி னங்ககர ணியாசமுடன் பூதசுத்தி யந்தர் யாகஞ்,சீர்
த்திபெறச் செய்துவிசே டார்க்கியந்தா பித்ததனாற் சிறப்பி னோங்குங்,
கூர்த்தறிவாற் புனிதமுறத் தன்னையுங்கும் பத்தையும்பு ரோக்கித்துக்
கொண்டு. (சஎகூ)

நெற்றியினிற் றிலதமணிந்தஞ்செழுத்தாற்சுத்திசெய்துநிறைகும்பத்தி
லர்ச்சனைசெய் திடல்வேண்டி யதன்கீழா மாதார சத்தி தன்னைப்
பற்றுறவச் சத்திமுதற் குடிலாந்த மருச்சித்துப் பரிவாற் போற்றி
புற்றதனி மந்திரசிங் காசனமா கப்பாவித் துவகை கூர்ந்து. (சஅ0)

சிறந்தகலை சத்தியையுஞ் சிவாதனமுஞ் சிவமூர்த்தி யையுமர்ச் சித்தே
யுறைந்ததிரோ தானசத்தி நீக்கியுமா மகேசுரமந் திரத்தா லுண்மை
நிறைந்திடுமீ சனைக்கும்பத் தாவாகித் திடப்புறத்தி னேயங் கூர
வறைந்தமனோன் மனியென்னுஞ் சத்தியையும்விதிமுறையி னாவாகித்து.

நிலவுமுமா மகேசுரற்கீ சானாதி தெண்டபங்கி நெகித்து நீங்கா
திலகுமனோன் மனிக்குமெழிற் சத்தியா திக்கிரம நெகித்தே யேய்ந்து
குலவுதிரு வடிவிளக்கி வாமத்தாற் சந்தனமுங் குளிரச் சாத்தி
மலைவறுமீ சானத்தான் மலர்மாலை முதலியன மகிழ்ந்து சாத்தி. ()

வேறு.

தேவ சேனா மகாசேனா வுக்ர சேனா திறல்வீமா
தாவி லாத மகேசுவரா சருவா பராய சருவாய
காவா யிடபே சுவராய கால கண்டா பினாகீச்
சேவில் கலியா னாவுசித வீச்வ ரகங்கா தராயவென்றும். (சஅகூ)

சிறீகண் டாய வுயர்வாம தேவா நடேச திகழொளிசேர்
சறுவ சம்பு சங்கரனே சாசொ தாய சசிமவுலீ
செறியும் பட்க லாயவர்த்த காய பஞ்சாக் கரதேக
விறைவ நமவென் றருச்சித்தே யியம்புஞ் சிவனா கமவிதியால். (சஅஉ)

வேறு.

பாத்தியம்பா தத்தினுமா சமனமுகத் தினுங்கொடுத்தர்க் கியநீர்
பண்பார்லேத் துசிரத் தினுங்கந்த மேனியினு மலர்மூர்த்தா வினுந்தூ
பந்தான், சேர்த்தியநா சியினுநேத் திரத்திற்றீ பமுங்கொடுத்துச் சிற
ந்தகையில், வாய்த்திடுஞ்சத்திரசாமராதிகளாலுபசாரம்வாம்பிற்செய்து.

ஆன்றமுதல் யாமத்திற் குளான்னமும் வடையுமிரண் டாம்யா
மத்திற், கேன்றமுற்கான் னஞ்சுகியன் மூன்றும்யா மத்தினிற்பா ய
சத்தோ டப்பம், தோன்றியநா லாம்யாமந் தனிற்றதியோ தனத்தொ
டதி ரசமுந் தொன்மை, சான்றவுமா மகேசுரத்தா னிவேதனஞ்செய்
திடவேண்டுஞ் சாமந் தோறும். (சஅகூ)

சண்பகந்தா மரைப்போது முதல்யாமத் தருச்சிக்க விரண்டா
ஞ் சாமம்; பண்புறுநீ லோற்பலந்தண் ணிருவாட்சி மூன்றதனிற் பாரி
சாத, நண்புபெறு கருநெய்த லினைந்தி யாவர்த்த மடுக்கு வெள்
ளை, விண்பரவ வருச்சிப்பர் விளம்பியயா மந்தோறும் விதிவ ழாமல்.

இப்படிசெப் பியமுறையா லருச்சனைமுற் றித்தூப தீப மீந்தே
யொப்பரிய மந்திரத்தா னிவேதித்துத் தூபதீ பாதி யோங்க
வைப்புறுமம் மந்திரத்தா லுபசாரஞ் செய்துமலர் செபித்துச் சாத்தி
மெய்ப்புறங்கனிரோதவருக்கியங்கொடுத்துவழிபாடுசேர்ந்தபின்னர்.

நடுவுவே திகையினில்வந் திருந்தரிசி யைக்குறுணி பாத்தி நன்கார்[ய்
விடுசுடர்ப்பொன்கழஞ்சிலெண்பத்தோரரிசியதன்மீதுவிரித்துமீதாய்
வடுவறவே யட்டதள பதுமத்தைக் கீறியத னடுவின் வாய்ப்பக் [டும்.
கொடுவருபொன்னைங்கழஞ்சின்முக்கழஞ்சிலேனுமுருக்குறிக்கவேண

அங்குலமான் இனிலேனு மூன்றிலே னுஞ்சதுரத் தகடுண்டா
க்கிப், பொங்குமுமா மகேசுரவிம் பத்தையந்தப் பொற்றகட்டிற்
செய்து பொற்புத், தங்கியகல் வியத்திரு வுபிடேகஞ் செய்துமுறை
தணவா வன்னம், அங்கமுறு கருடணமா திப்பிரதிட் டாந்தமன்பு
தோன்றச் செய்து. (சகூ0)

பிரதிவிம்பந் தனையந்தப் பதுமதளத் தினிலமைத்துப் பிறழா வ
ன்னம், பாலியபாத் தியாசமனார்க் கியங்கூட்டி யருச்சிக்கும் படிசே
ன்ற மின்மிழப், பொருவறுகூர் மாசனந்தன் மந்திரத்தாற் பூசித்துப்
பொலிவின் மீதா, யரியவட்ட நாகந்தன் மந்திரத்தி னலருச்சித் ததின்
மேனாச. (சகூக)

புருவதிக் காதியதன் மாதிகளைப் பூசித்து விதிக்கி* னிதி
கூறுவதன் மாதிகளர்ச் சித்துமம் திரசிங்கா சனமாய்க் கொண்டு
தேருமுமா மகேசபா தேவதரியம் பகசோம சுந்த ரேச
யோர்சருவ வீமமகோற் பலாயசிறி நீலகண்ட வென்றர்ச் சித்து. ()

நேசித்துச் சத்தியா திகளாலே தெண்டபங்கி செசித்துப் புந்தி
யோசித்து வித்தியா தேகமுமா வாகித்தே யுமாம கேசம்
பேசுற்ற சருவபாவ விமுத்திதாய பிறங்குமி ரீம்ரி காய
வாசிப்பொற் புறுசருவ வயிச்சுரிய சமர்த்திதா யென மன்னும். ()

பகர்தருமம் மந்திரத்தோ டுமாமகே சாபஞ்சாக் கரமுங் கூட்டி
த், தகவுறவா வாகித்துத் திருவடியும் விளக்கிமிருத் தியுஞ்ச யத்தாற், றி
கழ்தருபாத் தியாசமனார்க் கியங்கொடுத்துக் கருப்பூரா திகனிவேதித்
தே, யகமகிழ்சந் தனமலராம் மந்திரத்தாற் சாத்தியலங் காரஞ் செய்தே.

---

விதிக்கு-மூலை.

பத்தர்புகழ் சருவவயிச் சுரியமக தேவசர்வ பாவ காச
சத்தியோ வாமவகோ ரேசதற் புருடவீ சான வென்றே
யித்தகைமந் திரங்களிலர்ச் சனையியற்றி யெழிற்றூப தீப மீந்து
சித்தமிருத் தியுஞ்சயத்தா லமுதொடுதாம் பூலாதி நிவேதித் தேத்தி. ()

மணங்கமழ்தூ பதீபஞ்சத் திரசாம ராதிபணி மாறப் பண்ணி,
யிணங்குமிருத் தியுஞ்சயத்தாற் செபித்துமலர் சாத்தியுளத் தெண்ணிற்
றெல்லாங், குணங்கொளுநீ கொடுத்தருள் வேண்டுமெனப் பிரார்த்த
னையுட் கொண்டே பின்னர்," துணங்கறிவி னிடபவான் மார்த்தம்பூ
சிப்பாது நுவலக் கேண்மின். (சகூசு)

விரவுபுக ழான்மார்த்த விடபத்தைப் பஞ்சகவ் வியமே யாதி
திரமுறுமர்க் கியாதியபி டேகஞ்செய் தேதிருவொற் றுடை சாத்தித்
தரைபுகழ்தென் னடுவிதபூதி லெழுந்தருளப் பண்ணியிரீம்ரிகாயசர்வா
பாணபூ டிகதருமவிடபவெனு மந்திரத்தாற் பரிந்தர்ச் சித்து.(சகூஎ)

வதனத்தி லருட்சத்தி யிச்சாஞா னக்கிரியை மருவு கோட்டி
விதமுற்ற நேத்திரத்தி லங்கியா தித்தனிருஞ் செவியி லாதி
விதமுற்ற பராசத்தி நாலுபா தத்தினுநால் வேத மேனி [த்து.
நிதமுற்ற தருமஞ்வா றிரோதையண்டத் தனிற்பவமுந் தெளிந்தர்ச் சி

பாவித்தே யிடபகா யத்திரியா லேயாவா கனமும் பண்ணிப்
பூவொத்த செய்யதிரு வடிவிளக்கி யெள்ளினறும் பூவுஞ் சாத்தி
மேவுற்ற கருப்பூரம் விரவுசந்தஞ் சாத்தியலங் கரித்து நல்கி
நிவுற்ற மணங்கமழ்தூ பந்தீப முற்காரன்ன நிவேதித் தேத்தி. (சகூகூ)

திடமுறுதாம் பூலநிவே தித்துரிய தூபதீ பாதி நல்கி
யிடபகா யத்திரியான் மலர்சாத்தி நிரோதவருக கியத்தை யீந்தே
யடைவுடனன் மார்த்தலிங்க முன்புகலும் பிரதோட விதியா லன்பி
னிடமுறுபத் தியிற்பூசித் திடவேண்டு மவ்வாறிங்கியம்பக்கேண்மின்.

விதிமார்க்கத் தாலபிடே கம்பண்ணி யீசான தளத்தின் மீதே
பதிவாகப் புகழ்ந்தனைத்துப்பூசாதிசெபாந்தமுற்றும்பண்பிற்செய்தே
துதிமார்க்கத் தாலுளத்தில் வேண்டுவனபிராத்தனையுட்கொண்டுதூய
கதிமார்க்க முதவுநிரோ தார்க்கியமுங் கொடுத்தன்பு கனிந்து பின்னர்.

குண்டத்தி னிடத்தடைந்து குண்டசங்கக் காராதி பூரணாந்தம்
பண்டுற்ற விதிப்படிசெய் தங்கியித யப்புனிதப் பதும மீது
மண்டுற்ற புகழுமா மகேசனையா வாகித்து நிவேத னப்போ
தொண்டுற்ற மகேசுரத்தாலுருவையா யிரமென்னாலோமஞ்செய்து.

உருப்பதிஞ யிரமிருத்தி யுஞ்சயத்தா னெய்யில்வள ரோமம் பண்ணி, யருத்தியொடு பிரதிவிம்பங் தனில்விபோ மவியாபி யாதி யாகப், பொருத்தியவெண் பத்தொர்பத மந்திரத்தாற் *புகல்வரொவ்வொன் றிற்கை ஸ்வத்தாய்த்,திருத்தருமா குதியென்னா னெய்திகழ்வெண் கவி கவரை துவரை யோடு. (௫௦௬)

நற்கடலை நாயுருவி யரிசிவே யரிசிவிளை நறிய தூய்ச்செங் நெற்பொரியிங் நவதானி யங்களிஞ ணிறைதருமா குதிவ மூாதங் [ச் குற்பனமாமொவ்வொன் றிற்கொன்பதுமந்திரமூகவோமம்பண்ணி சிற்பரமா லிங்கவிம்பத்திற்செயுமோமஞ் செப்பக் கேண்மின்.

பானெய்தேன் கலந்துதிரி யம்பகமா யிரத்தோமம் பண்ணிப் பின்னர், மேன்மைபெறு சருவபூ பம்புதிய மலர்பிருத்யுஞ் சயத்தா னல்கிக், கானமர்தரிப் பூலாதி யியம்புதிரி யம்பகத்தாற் கமழோ மஞ்செய்,தேனையபூ ராதிமந்திரங்களிஞலும்மோமமியல்பிற்செய்தே.

ஓமசமாப் தியும்பண்ணி யாமந்தோ றும்பூசை யோம மெல்லாங். காமுறவே முடித்ததற்பி னலாம்யா மாந்தத்திற் கரிசு நீர்க்குஞ் சேமநிறை யங்கியுளக் கமலத்தி லகோராத்தி ரத்தைச் செவ்வே தாமுறவா வாகனஞ்செய் தன்பினொடு புகன்றதன்மந் திரத்தி னலே.

பசுவினெய்யால் வெண்கடுகாற் பகர்தருபங் கயப்போதா னொவ் வொன் றிற்கே,யிசையுமூறு வாயிரமா யிரமாக விதிமுறையி னியற் றி யோம, மசைவறுசீ ரகோரவீ சாக்கரத்தா லுருப்பதிஞ யிரத்து மாற்றி, நசைவுறுகுண் டத்தினுக்குக் கிழக்காக நயந்திருமண் டலமு மிட்டு. (௫௦௭)

உத்தரமண் டலத்திலந்தர்ப் பெலிதென்றி யுயர்ந்தபெகப் பெ லியூ முண்மைப்,பத்திபெறச் சருக்கரையும் பழமுமமு துங்கூட்டிப் ப ரிவா லிட்டு, நித்தியமாம் பூராதி மந்திரங்க ளாற்பழஞ்சர்க் கரைதே னெய்பா, லித்தனையொன் றாய்மதத்தி தொவ்வொருமந் திரத்திற் கோர் பப்பத் தெண்ணி. (௫௦௮)

ஊன்றியவா குதிசெய்தங் கோமசமாப் தியுமுடித்தேயுயர்குண்டத்தி லான்றசிவ னைப்பிரதி விம்பத்து மதினின்று மருங்கும் பத்துந் தோன்றியவக் கும்பத்தி னின்றுமிலிங்கத்துமுறைந்திடவேதொண்ணூ லேன்றவிதி வழுவாம லுத்தியா பனம்பண்ணி யிறைஞ்சி யேத்தி. ()

பழையவிலிங் கத்தினுக்குப் பாராமுகவர்க் கியங்கொடுத்துப் பண்
பா லன்பு, தழைதராவாத் தியமுழங்க வவ்விலிங்க மடத்திலெழுந் த
ருளப் பண்ணி,யிழைதருகும் பம்பிரதி விம்பமிரண் டுங்கிராம வலஞ்
செய் தேத்தி, விழைதருபுண் ணியதீர்த்தத் துத்தியா பனஞ்செய்து
மீண்ட பின்னர். (ருக0)

ஆசானை மண்டபத்திற் பீடத்தி னினிதினெழுந் தருளப் பண்ணித்
தேசாரங் கேயூரங் குண்டலா திகளிலலங் காரஞ் செய்தே.
காசார்வெவ் வினைதவிர்க்கும் பதத்திலபி டேகிவே தாதி காமர்
கேசாகே சத்தோடு நூபதி பங்களுப சார சேர்ந்து. (ருகக)

அருளுமிருத் தியுஞ்சயத்தான் மலர்செயித்துச் சாத்தியஞ்சட் டா
ங்கத் தோடு,தருவெனவீழ்ந் தடிவணங்கிச் சருவாப ராதமனம் பொ
றுத்தா னென்றும்,திருவருளால் யான்விரும்பி வேண்டியவெல்லாமரு
ளிச் செய்வா யென்றுங், குருபான்பூ சனையாற்றி யவனருளைப் பெ
ற்றுள்ளங் குளிர்ந்து வாழ்ந்து. (ருகஉ)

அருணவுத யத்துமற்றை நாளநுட்டா னம்பூசை யடைவி னா
ற்றி, வருணமிகு மறையவர்போ சனமகே சுரபூசை மரபிற் செ
ய்தே, கருணைதரு குருப்பிரசா தம்பின்பு தான்கொண்டு கைவாய
பூசிப்,பொருணிலைநிவ் விதிமுடிப்ப ரிகபாமு மவர்க்கேயாம் புக
ன்றே முண்மை. (ருகங)

இப்படியா சுமியாப்பும் விதியாலிவ் விரதவுத்யா பனஞ்செய்
விப்போன், செப்புமவற் கேயட்ட வயிச்சுரியஞ் சம்பத்துச சிவமெ
ய்ஞ் ஞான, மொப்பறுமுத் தியுமுண்டா முரைத்தனமிப் பிரதேசட
த் துண்மைப் பேறு,முப்புவனந் தொழப்பெற்று ளப்பிலரச் சரிதை
சில மொழிவாங் கேண்மின். (ருகச)

வேறு.

கருப்பை யொன்றவி நீபதது நெய்யுணக் கருதி
விருப்பி னாற்றிரி யசைப்பவிட் டொளிர்சொழுந் தழல
வருப்பு றும்புவி தானவத் தோற்றமு மழகுந்
திருப்பொன் மோலியும் பெற்றுமா வலியெனச் சிறந்தான். (ருகரு)

தானை மன்னனுச் சீனிவாழ் சந்திர சேனன்
ஞான பூசைகண் டிடைமக னயந்துமன் மணலால்
வான மேதரு பூசைசெய் தவனெனும் வாழ்ந்தா
னூனந் தீர்கதி பெற்றன ரிருவரு மோவார். (ருகசு)

புரமெ ரித்தநா ளட்டமி புகலுமத் தினத்திற்
பரனை யாவின்பா லாட்டியே வலஞ்செய்து பரவில்
விரவு வெம்பவ நீக்கியே வீடுபெற் றுய்வார்
திரம தாகிய சிவார்ச்சனைப் பேறுசெப் புதுமால். (ருகஎ)

விண்டு வேமுதல் வானவர் வேதிய ராதி
தண்ட லில்லதோர் மானிடர் தங்கியே முதலா
மண்டு பன்மிருகங்கள்வான் கலுழன்முற் பறவை
யண்டர் நாதனைப் பூசித்துப் பெற்றமைற் றியாவும். (ருகஅ)

வேறு.

மகதநாட் டொருமறையோன் சக்கி ராங்கன் மைந்தனுந் திரிதி
ராட் டிரனென் பேரோன், புகலருந்தங் குலவொருவி மதுவுண்ணுன்
பான் போந்துபொது மகட்புணர்ந்தன் னவளோ டேகி, நகைமலர்
நந் தனவனத்திற் செழுமண் கொண்டே நற்சிவலிங்கம் வாணித்து வி
ளையாட் டிற்றான், றனைபெறுவா ரனைசுரனைப் பூசித் தீசன் றனிநடத்
திற் குடமுழவ மிசைக்கப் பெற்றான். (ருகக)

பப்பரநாட் டினில்விளங்கும் வளஞ்சே ரோரூர் பகவதிவாழ்
சுபனன்மக னசித்த னென்பேரோன், விப்பிரர்தங் குலவொருவிக் கள்ளு
ண்காம விருப்பினனாய்க் களவொழுக்க மேன்மேற் செய்வான்,
செப்பருமோர் பார்ப்பனியைக் களவிற் சேர்வான் றிரண்முலையைத்
தனேச்சுரனென் றருச்சித் தேத்தி, மெய்ப்படியுங் கண்டனெதிர்ந்
தருளை நல்க மன்மதனா யுலகாளை வழங்கப் பெற்றான். (ரு௨0)

மாளவதேயத்துவயி னைவப்பே ரூரில் வாழ்கணித நூன்மறை
யோன் சிருது வென்பேரோன், மூனுறுபொய்க் களவொழுகிப் பொ
ருள்கைக் கொண்டே மொய்குழல்வே சையர்க்குதவி முயங்குதிம்பன்,
கோனுறுபுன் புலைச்சியைச்சேர் துழனுள் வாசக் குளிர்மலர்ப்பூங்
கூடைகொண் டோரன்பன் செல்ல, வேளையிதென் றேபறித்தா
னணிந்தான் றப்பி வீமொருபூத் தேவனுக்கென் றமன்றான்சேர்ந்தான்.

வேறு.

அறிவிலார் விநோத பூசை யளித்திடும் பயனீ தென்றாற்
பிறிவிலா துயிரு னிற்கும் பிரான்றனை யுணர்ந்து பேட்பின்
மறுவிலா கழத்தாற் பூசை மயினிற் செய்தோர் பேற்றைக்
குறிபடுத் தெவரே சொல்வார் குழகனே யவர்வே றன்றால். (ரு௨௨)

எழுசுயம் பிலிங்கம் தன்னிற் சயனந்திவ் வியத்தி ருப்பு
மழுவலா ளரி டத்தி னிற்றன்மா னிடம்வி னைதஞ்
செழுமில வேந்தன் கோயில் சேர்ந்துறை செய்கை போலாம்
பழுதில்சற் குருவ ரம்பின் பகுதியைப் பகர்வாங் கேண்மின். (ருஉங)

---

குருமகத்துவம்.

முக்கணன் கயிலைப் பாங்கர் முராரியே முதலோ ருய்யத்
தெக்கணா மூர்த்த மாகிச் சிற்பர முபதே சிப்பான்
றக்கவெற் பிமையங் கோளந் தடங்கொளா மர்த்த னத்து
மிக்கபிச் சாட னத்தின் பொருப்பினும் விருப்பின் மேவி. (ருஉச)

நற்பொரு ளுபதே சிப்ப நால்வரைக் குரவ ராகிச்
சிற்பரந் தெளிந்து ஞான தேசிகர் சிறப்பின் வைகிப்
பொற்புறு தமது நாமம் புனைந்தபி டேகஞ் செய்ய
விற்பொலி மண்ணில் வந்தார் விழுத்தவ விரத மேலோர். (ருஉரு)

குருபரம் பரைபு கன்றே மன்னவர் நிலைமை கூறி
லொருவனே யுலகில் யார்க்கு முன்னிருந் துணர்த்துந் தேச
னருள்வழி சீடர் யாரு மமலனைப் பூசை செய்வார்
மருவுமச் சீடர் தன்மை யுரைக்குது மரபிற் கேண்மின். (ருஉசு)

சீடரிலக்கணம்.

வேறு.

நீர்படிந் திடுங்கான் முன்னர்நின் றுட னின்றிடி லிருந்திடல்கி டத்த,லோர்வற வுறங்கு முன்னர்த்தா னுறங்க லுண்ணுமுன் னுணவு ளை யெறுது, நேர்பட வுரைத்த லறம்பழி கூற னிகழ்த்திய பணியினை மறத்தல், சீருட் குருவை யன்றியோர் தெய்வந் தேறிடல் சீடருக் காகா. (ருஉஎ)

தம்முளத் தியையா செய்யினு மிடரே தரினுமன் பின்னெறியென்றே, செம்மையார் குருவின் செய்கையி னொழுகா தொழிதறங் குலத்தினுக் கியையா, வெம்மைமை கூறினு மாச்சிர மத்தை வழுவினும் புகழ்நம் வீட்டி, மெய்ம்மையான் மற்று மிழப்பினு மேய்ந்த நிலைவிடல் சீடருக் காகா. (ருஉஅ)

அறைந்திட லருள்பே றமைத மல்லா துரைத்திட லிடையிலொன் றறைத, னிறைந்திடு பொருள்பே றறிவதா னுரைத்தலகங்கரிப்

பாகவே நிகழ்த்தல், குறைந்திட வுள்ளம் பொடிவன கூறல் கோட்டி
கொண் டியம்புத விருள்சேர்ந், துறைந்திடு செவிச்சொல் லேவுத லி
றையுள் ளுணர்தரு சீடருக் காகா. (௫௨௯)

இடமறி யாதொன் றுரைத்தல்சந் நிதியிற் றேசிகன் கீர்த்தியை ய
ன்றி, மடமையாற் பாடல் பொருளலா துரைத்தல் வழுத்துத றவிர்
தல்சொன் மறுத்த, றிடமுறக் கொடுத்தன் மாற்றுத லாசான் றிரவி
யம்புசித்தலீந் திடுத, றடைபடு பொய்ம்மை யுரைத்திட றொடுஞ்
சூற்றுதலெ சீடருக் காகா. (௫௩௰)

முன்னுற நியமா வருதரு ணணிந்தவேடத்தோ டணைதலம்முதல்வன்
றன்னிழ றம்மேற் படுதலா சான்மேற்றமதுறுசாயைபோய்ப்படுதன்
மன்னியே யிருக்குந் தலத்தின்மேலிருத்தல்வதனத்தோடுளமுகிழ்த்தல்
பன்னருங் குரவன் முன்செலன் மறுமைப் பற்றுள சீடருக் காகா. ()

சயனமா தனம்வா கனமிதி யடிவத் திரங்குடை தயிலமா பரணம்
பயனுறு குளிர்பூச் சந்தனந் தரித்தல் பாதமுன் விளக்கல்பல்விளக்கல்
வியனுறு மணங்கொள் பாகிலை யருந்தல் விமலதே சிகன்முன மாகா
நயனுறச் செய்யுஞ் சீடர்தம் மியல்பு நவிலுவ னன்குறக் கேண்மின். ()

நெறிகளிற் பயமா மிடத்துநீ ரிடத்து நிசியினுங் குரவன்முன்
சேறல், செறியுமற் றிடத்திற் பின்செலல் பிறிதோர் சிந்தையற் றரு
ட்டிரு வடியே, பொறியெனச் சாயை போல்விடா தமர்தல் பெர்
குந்துதன் றீங்குமுன் புகன்று,குறிபட வாரா வகையொரு மிருத்தல்
கூறிய சீடருக் கியல்பாம். (௫௩௩)

தன்னலிய ரெனினுங் குருவுளம் வைத்தோர் தமைப்பரம் பொ
ருளென வுணர்த, லென்னுமான் முதல மூவரே யெனினு நற்குரு
வருளடைந் திலரே, லெண்ணணீத் தவரைக் கைவிடன் முத்திக் கி
ழைக்கிடுஞ் சீடருக் கியல்பாம், புண்ணியப் பொருளாங் குருநிலை வ
ழாது பேர்ற்றுவோ ரீசன்வே றன்றால். (௫௩௪)

சிவனடியாரிலக்கணம்.

பரம்பரை யாசா னுணர்த்திடத் தெளிந்து பதிபசு பாசமூன்
றுணர்ந்து,வரம்பெறு மெய்ம்மைச் சிவனடி யாருக் கிலக்கண முள
வவை வகுக்கி, னிரம்பிய விருபான் மூன்றுமூ விதமா நிகழ்த்திடிற்
புறத்தினி லொருபா, னுரம்பெறு முடலி னத்தொகை யோங்கு மு
ள்ளத்தின் மூன்றமைந் திடுமால். (௫௩௫)

சொல்லுமு விதமா மிலக்கணத் தொகையிற் றெகலுறும் புற்பபஃது ரைக்கே,மல்லல்சேர் பூதி யுருத்திர வக்கம் வனைதரே சிகரையர்ச் சித்த, லல்லணி கண்டற் போற்றல்பேர் விளம்ப லறஞ்செயன் மாக்கதை கேட்ட, லொல்லையா லயங்கள் போற்றன்மெய் யன்பர்க் குதவுத லவரொடுந் துய்த்தல். (௫௩௬)

மெய்யிலக் கணம்பத் திறையிய லுரைக்கின் விம்பிதங் கண்டத் துட் காட்டன், மையணி கண்ட னியற்கையை யுணர்ந்து மகிழ்தொறு நாத்தடித் தெழாதன், மொய்ந்நகை துடித்தல் பூதியார்த் தனிதன் முழுதமங் கங்குலுங் கிம்தல்,செய்யதம் மேனி மயிர்ப்புறம் புளகஞ் செறிந்திடல் குறுவிய ரரும்பல். (௫௩௭)

தன்வச மன்றி விளம்புநாப் பெயர்த்திடாதலா னந்தநீர் தழைத்து, நன்விழி சொரிதல் பரவச மாத லுதனை யுளப்படுத் தயர்த, லன்புற வுரைத்தே முளத்திலக் கணமூன் றஞ்செழுத் துன்னன்மானதத்தா, பின்புறு பூசை யீசனைத் தன்னை யிரண்டற வொன்றெனக் காண்டல். (௫௩௮)

எம்மையாள் டருளுந தொண்டர்பா னிகழு மிலக்கண மிருபத்து மூன்றுஞ், செம்மையா வுரைத்தேம் புகலிலக் கணத்துட் சிறந்தயிலுமிலக் கணமூங், தம்முளே யுன்னு முத்தமத் தலைத் தனி முதற் சிவனெனத் தருமான், மும்மைசே ருலகம் போற்றுமத் தொண்டர் பூசையே முதன்மையாம் பூசை. (௫௩௯)

இல்லறந் துறவென் றிரண்டினுஞ் சரித்தே யியம்பிய சிவனடியாருட், புல்லறத் தொழுகா வில்லறத் தினர்க்குப் புகலருங் கிரியையின் வழுவி, லல்லறு சாந்தி யால்வழு வகலு மாற்றிய துறவறம் வழுவிற, றெல்லற மாகும் விரத்தம தழியி னரகலாற் சாந்தியிற் றொலையா. (௫௪௦)

துறவியரிலக்கணம்.

வெண்மதின் முதலாம் பஃறுகி றரித்தல் விரும்பித்தாம் பூலத்தை யருந்தன், மண்டொளிர் பொற்பூண் மணங்கொள்சந் தாதி வனிதையர் புணர்ச்சியாஞ் சித்தல,கண்டமே லன்றி மயிர்சரு வாங்கங் கனைந்திடல் கோபமுற் றிடுதல்,பண்டையோ ராசா பாசத்தை யடைதல் பற்றறு விரத்தியர்க் காகா. (௫௪௧)

காவியுந் தரித்தே யரசர்தங் கோயிற் கடைத்தலைச் சேறலா லயங்கண், மேவுறப் பரித்தல் பொதுமடங் கழனி தருமத்தின் பொ

துப்பொருள் விழைத, றேவர்வா ளரசர் தேசிகர் வேலை சினவித்
தடிச்சியர் பாத்தை, யேவமார் விதவை வேதிய ரிவர்பொன் னேற்றி
டல் விரத்தியர்க் காகா. (௫௪௨)

நீசர்கைப் பொருளா யத்துறை பரிப்போர் றிப்பொரு ணிரை
ப்பசு விலைப்பொன், னீசறு லயங்கள் ம்ரிப்பவர் கோயிற் றெருழும்பி
ன ரியற்பரி சரா, ராசில்கற் றச்சர் கொற்றனூற் சிற்ப ராட்டிலா
ணிகர்திலர் சாரர், பேசுமீன் வலைஞர் நரைமது வுண்போர் பெரும்
பொருள் விரத்தியர்க் காகா. (௫௪௩)

நசையுறு காம விருப்பினல் விதவை முதலிய நாரியர்த் [illegible]ய்
த, னிசியிடைத் தயிலிற் சொப்பனைந் திரியம் வீழ்ந்திடிற் [illegible]தி
நேர் செயாதல், வசையறு மன்னய் குக்குடாண் டத்தின் மாத்தி
ரை நாலிரு பிண்ட, திசைவதை யன்றி யவாவினு லதிக மிசைந்திட
ல் விரத்தியர்க் காகா. (௫௪௪)

ஒரிடத் துண்ட விருத்தலோ ரூரி லுறுபொருள் விரும்பியா சித்
தல், சார்தருங காமங் குரோதமே முதன்மே விடம்பொய்கொள் சந்
தியுஞ் சரிற, லாருறு சிவவே டத்தினர்ப் பணியா தகந்தையா லிகந்
று மாத்த, ரூருறு பாதெத் தந்தம தாக்க னற்றவ விரத்தியர்க்கீகா.

தெளிகுரு விலிங்க சங்கமத் துரோகஞ் செய்திடல் காவியஞ் சி
ரை, வளர்முழந் தாண்மே லுயிப்பதை யன்றிக் கீழ்த்தழைந் திடவரிர்
துடுத்த, லளியிலா துண்டிப் பொருட்டினற் பந்தி வரைந்துதாம் பல
வுமே யயிறல், வினையுமந் திரவா தஞ்செயல் பொன்னே டெனூர்கொ
ளல் விரத்தியர்க் காகா. (௫௪௬)

தேசிக னருளிற் பாத்திர மேந்தித் தீக்கையிற் சுத்தார யன்பர,
னேசரா யுறைவோ ரில்லினே றிடத்தி னியமமர்ப் பிச்சையேற் று
ரைத்த,வாசிலெண் பிண்ட மருந்துத லன்றி யோரிடத் தேற்றினி த
ருந்தல்,வாசிவா னைங்க ளேறியே யிவர்தன் மாதவவிரத்தியர்க்காகா.

ஆதலாற் புகலும் வழுவறு குரவா றதிதரா யருணிலை நிற்கு,
மாதவ விரத்தர் பரம்பொரு ளன்றோ பெருமையை யெவர்வகுத்
துரைப்பார், தீதறு சரியை கிரியையர் யோகர் தெளிசிவ ஞானிய
ருணர்ந்தே, யோதுறு பொருளாய்ப் பிரமமா மூர்த்தி விசேடமு மூ
ரைக்குதுங் கேண்மின். (௫௪௮)

## மகேசுரவடிவம்.

ஆதியம் பரம னருளினப் பொருடான் மகேச்சுரப் பிரிவினிற் றோன்றி, யோதுமர் வுடையா னிலிங்கமு மாகி யுயிருத வன்னையத் தனுமாங், நீதில்சுந் தரநா யகரெனும் வடிவாய்ச் செப்புயிர் விகாரந் தீர்த் தருளு,மாதொரு பாகத் துருவமா யாண்பெண் மன்னுயிர் புணர்ந்திடப் புணர்க்கும். (௫௪௯)

அம்பிகை கரந்தொட் டணிமணஞ் செய்தே யாருயிர் மனைவினை முடிக்கு,மும்பர்சூழ் மணக்கோ லத்தொடு மவளோ டுறைந்துயி ராண்பெண்ணே டிருத்து,மெம்பிராட் டியைத்தன் னுருவொடுங் கலந்து பெண்ணொடாண் புணர்ந்திட வியற்றுந், தம்பமா யிருந்தம் பிகைகுக னொடுந் தனயரோ டுறவுயிர்க் குதவும். (௫௫0)

அரியுல களிக்கத் திகிரிதந் தருள்வா னுருவெடுத் தவனிமன் னுயிர்க, ளுரியபோ கந்துய்த் திடச்செயு முதன்மூ வுருவெடுத் துயிர்த் தொகை யனைத்து, முரிதரு மாய தூலசூக் குமமா முச்சட மெடுத்திடச் செய்யும், பிரிவிறைக் கணமா மூர்த்தியா யுயிர்கள் குருவருள் பெற்றிடச் செய்யும். (௫௫௧)

எம்பிரான் பிச்சா டனவுரு வாகி யிருந்துயிர்க் குதவுமெய்ஞ்ஞானம்
பம்புகங் காள வேடமா யிருந்து பல்லுயிர்க் கோகினை யளிக்கும்
வம்பலர்க் காமற் காய்ந்திடு வடிவாய் மன்னுயிர் காமநீத் திடவே
யிம்பரினளிக்குங்காலனையுதைக்குமுருவெடுத்துயிர்ப்பயமொழிக்கும்.

சலந்தாற் கோறு முருவெடுத் துலகஞ் சாற்றுமா தவர்தவம் வளர்க்கும், வலந்தரு புரஞ்செற் றிடும்வடி வாகி மாற்றுமா ருயிர்க்குணத் திரைய, நிலந்தொழ நார சிங்கவெவ் வலியை நீத்திடு சரபத்தி னுருவாய்க், கலந்திடு பாசங் கழிந்துபல் லுயிர்க ணிலைபெறக் கருணைசெய் தருளும். (௫௫௩).

கருவிட நுகரு முருவெடுத் துயிர்க்குக் கலங்குமா ணவமல மகற்று, மிருகலை தரிண்மூன் றிரிரு மருப்போ டெழுகைசேர் பிரமமே மூாகி, மருவுயர் கிரியை ஞானமூ தறிவு மன்னுயிர் தெளிந்திட வளிக்குந், தருமதே வுருவா யுயிர்க்கெலாங் கருத்துட் டருமமே பொருளென நல்கும். (௫௫௪)

வயிரவக் கடவு ளுருவமா யுயிர்க்கு மன்னிய துறவினை யளிக்குஞ்
செயிரறுவிடைமேலிருந்தருள்வடிவாய்ச்செகத்துயிர்க்கினிதுபேறுதவு
மயர்வில்சக் கிரசே கரவடி வாகிப் பிறப்பொழித் தருங்கதி நல்கு
முயருமா னந்த நடேசனு யுலக முவகையிற் சிறந்திட வளிக்கும். ()

கங்கைவே ணியனும் வடிவெடுத் துயிர்க ளானந்தக் கடல்புகக் காட்டுங், துங்கமா மிருபத் தைந்துதோற் றத்தின் றொகுவழி யுலகுயிர் நடக்கு, மெங்குமாய் நின்ற பரப்பிர மத்திற் றோன்றியே யிப்பரி சியற்றும், பொங்கும்ப் பிரமஞ் சிவன்முத் தீசன் றுவாதசாந் தப்பொருட் சொக்கன். (ருசு)

வேறு.

உறைவதுதென் மதுரைநகர் சாத்தன் கீழ்பா லோங்குதென்றி சத்திமா தாக்கண் மேல்பா, னிறைதருமல் லாண்டதின்மே டோண் மூதுந்தன் றார்க்கை நெஃறிவீர பத்திரனுங் குவப்பின் மேவிற், குறைவில்வட பாற்காளி ராமச் செல்வி கூறியவிந் நகர்காக்குங் கெ மூதா, நிறையுருவா மதன்பெருமை யளந்து கூடா வெந்நூலும் நூலு மின்னுஞ் சொல்லும். (ருஎ)

இன்னுமுள வனேகமிவ ணறிந்த வாறிங் கியம்பினமிக் கதை படிப்போ ருரைப்போர் கேட்போ, ருன்னுசிவ சதியடைவ ருண்மை யென்றே யுரைத்தனன்மா மலையமுனி யுரைப்பக் கேளா, மன்னுமுனி வரர்துதித்துப் பின்னுஞ் சொல்வார் மதுரைவசிப் பவர்பயனும் வசித்து ளோர்கட், கன்னியதே யத்தருப காரஞ் செய்தே யப்பயினுற் பெறுபயனுஞ் செப்பு கென்றார். (ருஅ)

பத்தாவது இலீலாசங்கிரகவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௦௬௬.

---

பதினொராவது

## துன்மதன்முதலானவேடர்முத்திபெற்றவத்தியாயம்.

---

என்னவுமா தவமுனிவர்க் கிருந்தமிழ்மா முனிபுகல்வா னினிது கேண்மி, னின்னலஞ்சேர் தருகாதை பூதியுருத் திரவக்க நயந்து பூணுந், தொன்னலஞ்சேர் சிவனடியார்க் குக்கிருகங் கேத்திரந்தொன் மடமுண் டாக்கிப், பன்னலஞ்சேர் மீதுனியினில் வசித்திடநல் கினர்பலத்தைப் பகுத்தார் சொல்வார். (க)

உரைத்ததிலொவ் வோர்துகளுக் கிமையவராண் டொவ்வொன்று யுறுநாட் கெல்லாம், வரைத்ததொகை யெவ்வளவுண் டவ்வளவு கோலமும்வான் கயிலை மேவி, கிரைத்திசிவ கணமாவ ரெப்பாவ

ஞ் செய்யினுமப் பாவ நீங்கும், விரைத்தமல ரிதழியர்தா ரரனருளான் முத்தியும்பின் மேவு வாரே. (உ)

வேறு.

எண்ணரின்மா னிடரிக் கதம்பமா வனத்தி னிருந்திடுஞ் சிவனடி யார்க்கு, நண்ணிய தான தருமமு நல்கி நாடொறு மவர்க்குப காரம், பண்ணியே யந்தத் தலத்தினை யறியார் பவமகன் றுயர்சிவ லோகத், தண்ணலா ரருள்பெற் றுறைந்தனர் தலத்தை யறிந்துசெய் பவர்பய னெளிதோ. (௩)

ஆதிகா லத்தி னிகழ்கதை யொன்றுண் டதன்றிறங் கேண்மெ [illegible]புகல்வான், காதுவெவ் விலைவேற் கிராதர்தங் கோமான் கடிய துன் மதனெனு மொருவன், றீதினை யிழைக்குங் கரவடர்க் கெல்லாஞ் சிகாமணி யெனத்திரிந் துழல்வான், சோதிசேர் பிறைவே ணியைத்தொழு தறியான் றொழுஞ்சிவ தலமிதென் றறியான். (ச)

அளவிலா வனங்கள் செகுத்துளான் றேரு மளவிலுன் மறையவர்க் கொன்று, னளவிலா நரா ருயிர்க்கொலை செய்தா னளவிலாப் புட்குலம் வதைத்தா, னளவிலா விலங்கு வேட்டிருன் புவியி லதிதியர்க் கன்புசெய் தறியா, னளவிலாக் களவு செய்வது மன்றி யவன்செய்த பாதக முலதோ. (ரு)

அன்னதோர் வேடன் சையமால் வரையி லளவிலாக் கிராதரோ டிருந்து, முன்னியே தீர்த்த யாத்திரை செய்வோ ரியாரையு மூடி டியே கொலைசெய், துன்னுமுன் னவர்கைப் பொருளினைக் கவர்ந் தே யொறுத்திடு நாடொறு மோயான், றுன்னியா றலைத்துப் பாவ மே தொழிலாய்ச் சுழறரு நாளிலங் கொருநாள். (சு)

வேதிய ரனேக ரவ்வழி யணுக வேண்டிய தெதிர்ந்தெனக் கிரா தன், போறிவெங் [illegible]த்தென் றன்னவரை மறித்துப் பொருளொடு துகில்பல பறித்துக், காதிவே தனைசெய் திடுதலு மவரிற் கருதுமான் மறைவலா னொருவ, னீதிசேர் பாவ புண்ணியப் பயனை நிகழ்த்துவான் றுணிந்திவை நிகழ்த்தும். (எ)

துன்மதி வினிக்கேள் பாவியென் செய்தாய் துகிலொடு பொருளெலாங் கவர்ந்தாய், நன்மதி யில்லா வுயிர்க்கொலை தவிர்தி யளவிலுன் மறையவர்ச் செகுத்தா, யென்மதித் துரைக்கே னீசெயும் பலவ்க ளெண்ணினு மடங்குறா திதற்கு, வன்மதிக் கால வேதையு நரக் வாதையு மலாற்கதி யுள்தோ. (அ)

போயது காலஞ் செல்வுசேட் சிறிது பொய்யுட னிலையென வேண்டா, பாயுநீ ரெழுத்தாம் போனது போக பவகொலை களவிலை யினிமே, லாயினுஞ் செய்யா தொழிதிமுன் செய்த வருவினைப் பாவநீத் திடுவா, யேயுமப் பவத்தீர் தருமமாங் கடைவிற் செய்துகொண் டிருங்கதி பெறுதி. (௰)

காடொரு முன்னி யீட்டிய மாழை நலமிலி யாடையா பரணங்
தேடிய மற்றுஞ் சிவனடி யார்க்குஞ் செழுந்திருநான்மறையவர்க்குங்
கேடுதலின்றி யுதவுதி மற்றுங் கூறிய தருமதா னங்கள்
நீடுறச் செய்தி யுய்திறம் புகன்றேன் பிறைகபா லியைத்தொழுதெழுதி.

என்னநான் மறையோன் புகன்றனன் கேட்ட அன்மதன் [illegible] துள் மிரங்கி, முன்னோர்ல் வினையாற் றருமத்திற் புந்தி முற்றிய வேதியர்க் குரைப்பா, னின்னுரை கேளா வுளமிரங் கியது நீங்கிய கொடுமையுஞ் ஞானம், பன்னுமா தவத்தி னுயர்ந்தமா தவநீ யுறைதலம் பகருதி யென்றான். (௧௧)

யானுறை தலம்பே ராலவாய் கதம்ப வனமதன் மகிமையா ரிசை பயார், தானமுந் தவமுந் தருமமுஞ் செய்யி லொன்றொரு கோடியா யத் தழைக்கும், கானவ வெனது மனமுமுன் றேயிங் காஞ்சன மாடையா பரணம், பூவிலத் துயர்ந்த புண்ணியஞ் செய்கென் றுரைத்தனன் பின்னரும் புகல்வான். (௧௨)

தேசிக னெனக்கு நீயலா துண்டோ சிறப்பொடு மென்பெயர் செப்பி, நேசமார் நீப வனத்தினி லிருக்கு நின்மல னடியவர் தமக்கும், பூசுரர் தமக்கும் வேண்டுவ நல்கிப் புரிசிவ புண்ணிய மென்றே, வாசமா மலர்ப்பொற் றாளிணை தொழுது வணங்கினன் வாங்கினன் மறையோன். (௧௩)

சேறனு மற்றைக் கிராதரு மறையோன் [illegible] பன்முறை வணங்கி, யாறலைத் துணுமெம் பவமெலா மகல வாலவாய்ப் பதியினிற் கொடுபோய்க், கூறலை கங்கைச் சடிலியன் பினர்க்குங் கோதில்வே தியர்க்குமே-நல்கி, மாறலை தரும மெவற்றையும் புரிகென் றுகவினர் தங்கள்வான் பொருளை. (௧௪)

அப்பொருடனையும் வாங்கிய மறையோ னந்தணர் குழாத்தொடுஞ் சென்றே, யொப்பறு கதம்ப வனத்திில்வந் துற்று றுறுபெருந் தனமெலா மெடுத்தான், மெய்ப்பொருட் சொக்க னருளினு லந்த

வேடர்க்கிப் புண்ணிய மென்றே, செப்பரு மாசி கூறினன் வணங் கிச் சிவனடி யார்க்குமுன் கொடுத்தான். (கரு)

பூசனைக் குரிய மடங்களுஞ் செய்தான் க்ஷேத்திரம் பொலிவுறக் கொடுத்தான், மாசறு வேத வேதியர்க் கெல்லா மகம்பொரு ணனி வழங் குற்றான், பேசரு மன்ன தானமு மற்றைத் தருமமும் பிறங்கி டப் புரித்தான், பாசவெவ் வினைதீர் புண்ணிய பலத்தாற் றுன்மதன் முதல்பல வேடர். (கசு)

அந்தியன் தன்னிற் கிளையொடு கயிலை தனிற்கண கணங்களாயடைந்து மூந்திய போக மளவில துய்த்து முடிவிலா முத்திய மடைந்தா ரெந்தையார் மதுரை யறிந்திடார் செய்த வேடரீ டேறினரென்றாற் புந்தியால்வசித்தத்தலத்தினிற்றருமம்புரிபவர்பேற்றையாருரைப்பார்.

அன்னியர் பொருளை வாங்கிறற் றரும மியற்றிய வருமறை யோனும், முன்னரு முயர்வான் கயிலையி லடைந்தே யிரண்டற முத்தி பெற் றுய்ந்தான், றன்னதாய்த் தானே தேடிய பொருளாற் றருமத் தைச் செய்பவர் பெறும்பே, றின்னதென் றெம்மாற் புகலவும் வச மோ வீசனே யியம்புவ தல்லால். (கஅ)

க்ஷேத்திரங் கிருகம் வத்திர மன்னங் கிளர்மணங் கமழ்ந்தராஞ் சூலம், பூத்திரண் மாலை சந்தனம் பான காதிய பொலங்குடை விசி றி, காத்திரம் வருந்தாத் தோற்கழல் கதம்ப கானம்வாழ் சிவனடி யார்க்குப், பாத்திர மிவரென் றெண்ணியே கொடுப்போ ரடைகுவ ர் பரன்சிவ லோகம். (க௯)

சங்கர னிடத்தி லன்புசெய் மறையோர்க் குதவிய தருமதா னங் கள், வெங்கர வடர்த்தோ னயனனந் தறியா மேன்மையுத் தமபல னளிக்கும், பொங்கரா வளைந்த வாலவாய்ப் பதியிற் பொருந்துப கா ணங்க ளோடுங், கங்காந் தரித்த சிவனெனக் கிருக தானஞ்செய் பவ ர்பயன் கருதில். (உ0)

சேடனுன் முகன்மான் முதலியோ ராலுஞ் செப்பொணு கந்தி வேண் முருகன், கூடனு யகன்ற னருளினு லறிவ ரெனிலவர் பேற் றையார் குணிப்பார், காடருந் தேசாந் தரியாய்த் தலத்தை நாடிய சிவனடி யார்க்கு, வீடிடங் கொடுப்போர் துகளுக்கா யிரமாங் கற்பமே வுவர்சிவ லோகம். (உக

அன்னதா னத்தை நிகரென வியம்ப வரும்பெருந் தானமு மில்லை, யன்னதா னத்துக் கிணையதாய்ப் புகல வரியமா தவங்களுமில்லை, யன்னதா னத்தை யொப்புற வுரைக்க வரியதாந் தருமமு மில்லை, யன்னதா னம்போ லறம்பொரு ளின்பம் வீடிவை யுதவுவ தியாதே. (௨௩)

அன்னதா னந்தீர்த் தந்தல மூர்த்தி யருமறை வேள்விய கமங்க
ளன்னதா னம்பூ சனைசெபந் தியான நிட்டையட் டாங்கமா யோக
மன்னதா னந்தின் சரியைநற் கிரியை யோகமெய்ஞ் ஞானமு மாகு
மன்னதா னத்தி னன்றியீங் குரைத்த யாவையும் பயன்படா தன்றே.

அதிதியர் கோடி துய்ப்பதி லதிக மரனடிக் கன்புளோன் றுய்த்த, றதியுறு மவனிற் கோடிமெய்ஞ் ஞானச் செயலுளோ னொருவன் றுய்த் திடுதல், பதியுறு ஞான வானிலுங் கோடி பாத்தொடு மயிக்கவான் றுய்த்தல், கதியுறு மன்னங் கொடுப்பவர்க் குமையுங் கடவுளுந் தொண்டுசெய் திடுவார். (௨௪)

. கதம்பமா வனத்தின் மேன்மையான் மலத்திற் கிருமியுங் கடவுளா மென்று, விதம்பெற வடைந்தோர் யாரையும் வரையா ரறிஞரெம் மீசனென் றெண்ணி, விதம்பெற வாறு சுவையுட னன்னம் விரும்பியவதிதியர்க் களிப்பார், நிதம்பெறு கயிலைப் போகமுந் துய்த்துச் சிவமதா முத்தியுஞ் சேர்வார். (௨௫)

அரிவையர் மறையோ ரனேகமாங் கோடி யிலக்கமாக் கொன்றவெம் பாவம், விரிபுவி யுளதீர்த் தங்கண்மூழ் கினுமூ வேள்விசெய் யினுமுற்றுந் தீரா, வரிசடை யமல னடியரை யிறைஞ்சி வாழ்த்தி நன் மலரடி விளக்கி, யுரியநீ ருட்கொண் டருத்தியூண் சேட முண்டிடி லொழியுமீ தண்மை. (௨௬)

நவையிலா வொருமண் டலமதிற் பாதி நாளேனு நியமமா நவிலுஞ், சிவனடி யாரை யமுதுசெய் வித்துச் சேடமுண் டிடின்முயல் வலிபெரு மவமுறு கயநோ யுதரநோய் வெகுளி கிழிவுவெஞ் சுரம் பெரு வியாதி, தவலறு வாதங் கபம்பித்த மிவற்றாற் றங்குநோய் மற்றும்போ முண்மை. (௨௭)

குடும்பியாய் வந்த வதிதியர்க் கன்னங் கொடுத்தொரு வருசாம் புரக்கி, விடும்பைதீ ரவிழுக் கொவ்வொரா ண்டாகக் கயிலைவாழ்ந் தெய்துவர் முத்தி, நெடும்பெருஞ் செல்வ மெய்தினர்க் கீதே னிலைகடன் கொடுத்துவாங் குதலா, மடும்பனல் குரவா லேற்பவர்க் கீதே லாயிர மடங்குநற் பயனும். (௨௮)

தி; தேசமுறு குருசேட்டர் கனிட்டர்முறை யதேதிருத்தி நிறைவு செய்வோர். (௩௫)

வேறு.

சாத்திரம் புராண மாகம மெழுதித் தருகுவ பததருக கனிப் போர், தித்திரன் வாதை யனுகுரு வாறு புரந்துளோர் திருமுறைக் களி, பூத்திடு மன்பாற் கயிறெழுத் தாணி பொலிதரு சாசுவதி பீட, மேத்திடு படிப்போ ரிருந்திடும் பலகை யிரத்நகம் பளமுத வீவோர். (௩௬)

சொல்லிய வினைக்கோ ராயிரம் வருடஞ் சோமகந் தரனுரு வடைந்தே, யெல்லொளி விரிக்கும் பெருஞ்சிவ லோகத் தெய்திவாழ் குவர்திரு முறையை, மல்லல்சே ரில்லத் தெழுதிவைத் தன்பால் வழிபடுவோர் பூசிப்பேர் பவதீத, தொல்லையின் மீளா முத்தியை யடைவ ரும்பர்நா யகன்றிரு வருளால். (௩௭)

வாணமே முதல விலியகங்கள் பூசித் திடுமென வான்முறை யளிப்போர், பேணிய சங்க மருக்கிய மணிநீர் பெருக்குபாத் திரமுருத் திராக்கம், பூணுமா சையிறுற் பூசும்வெண் ணீறு போற்றுமெய் யன் பினர்க் கீவார், வேணிய னருளான் முப்பதங் கடந்து விமலமா முக்கியெய் துவரால். (௩௮)

நீபவா ரணிய மெனுமுரை கேட்க முத்தியெய் திடுமெனி னீமல, மாபான் றலத்தில் வசித்தறம் புரிவோர்க் குரைப்பதென் வளம்பெறு ஞான, தீபமா மவர்கள் கொடுத்தபோர்க் குண்டாஞ் சிவனருண் மீள்கிலா முத்தி, தாபா மிஃதென் றிக்கதை கேட்போர் தனிப்பெரு முத்தியை யடைவார். (௩௯)

இக்கதை படிப்போர் தங்களுக் கன்பா லிரும்பொரு ளாடையா பரணம், மிக்குயர் வாக வுறுதிய பசுக்க டாணியம் வேண்டுவ நல்கிச், சொக்கநின் றவரைப் பூசனை புரியிற் சொக்கனே கொண்டருள் செய்வார், றக்கபே ரருளாற் செய்பவர் முத்தி யெய்துவர் சத்தியம் புகன்றேம். (௪௦)

கருணைசேர் மதுரை நாயக னுமையுங் கயற்கணாள் கணபதி கந்தன், வருணமார் நந்தி கேசன்மால் பிரமன் வானவர் முனிவருஞ் சிறந்து, பொருணனி விளங்கும் புராணதே சிகனைப் போற்றியே கேட்டினு முவப்பார், தருணமார் புராண மண்டபஞ் சிவனு லயஞ்சத்தி சரசொதி பீடம். (௪௧)

தோரணந் திகழ்மேற் கட்டிபட் டாடை தொடுத்தபூ மலர்விதா னத்தாற், றூணணி புகழ்மண் டபமலங் கரித்துச் சரசோதி பீடம் வைத்தலரா, லாரணம் பரவு முறைமையைத் துமையையர் னையா வாகித்தர்ச் சித்தே, பூரண பத்தி யொடுமணி தூப நிவேதனங் கொடுத்துடன் போற்றி. (௬௨)

படிப்பவர் முகம்பார்த் தினிதுகேட் டிடுகெ பாரமுகஞ் செய் யொறு செய்தோர், மடிப்புறு நெஞ்சர் விருப்பிலர் புராண மாக்கதை பொய்யெனப் புகல்வோர், துடிப்புற மூன்று கோடிமா நிரையக் துளைந்துகாய்ச் செனனமே யெடுப்பர், கொடிப்பொடு புராண தேசனை மனித னென்பவர் வாய்ப்புழு நோயர். (௬௩)

பத்தியாய்க் கேளா ருயர்ந்தவா சனத்தி லிருந்துகேட் பவராழுக் காற்றாற், சித்தம்வே றாகி வேறொரு பொருள்கற் பிப்பவர் வாதிக்குஞ் சிதடர், மொய்த்திடும் பன்றிச் செனனமே யெடுப்பர் மூடரா யன்பிலார் வன்பான், மத்தரா மனமற் றகந்தையாற் கேட்போர் வனத்தினி லெட்டியாய் முளைப்பார். (௬௪)

நியமமாய்க் கேட்டு முற்றுமுன் னடுவே யெழுந்துதங் கருமத் தானினைந், யயமறப் போகிற் செல்வந்துய்த் திடுநா ளீறுறு தழிந் டைவிழப்பார், பயமற வஞ்சத் தேறியே யிருந்தும் பாகிலே யருந்தியுங் கேட்போ, ருபமதி யிலராய்க் கழுநுனை யேறி யுயிர்பா தபித்திடக் கிடப்பார். (௬௫)

கண்டுயில் கொள்வோர் கூகையா யுதிப்பார் கதையடித் திடுஞ்சிவ சபையிற், பண்பொடு கேளார் சேக்கையிற் கிடந்து கேட்பவர் பணிவரை விடரிற், புண்படு கொடிய பாந்தளாய்ப் பிறப்பர் புகலுமிக் குணமெலா நீக்கி, யெண்படு தாழ்ந்த வாசனத் திருந்தே யினிது பசாரமு மியம்பி. (௬௬)

பத்தியாய் நியமம் படைத்துநூல் விதியாற் பகருமிப் புராணநூல் கேட்போர், சித்தியுந் தருசம் பத்துநல் லறமுஞ் செல்வமுங் கல்வியும் பொருளும், புத்தியுந் தெருண்ட மனையும்புத் திரரும் புகழுநற் போகமு ஞான, முத்தியும் பெறுவர் சத்துரு நசிக்கு நினைத்தவை முழுது மெய் துவரால். (௬௭)

தொடங்குமா தியினும் புராணமத் தியினுந் தொகுத்தவந் தியத்தினுந் தொன்னூ, லடங்கவுங் கேட்ட பயன்றரு மகேசு ராபூசைக்

தண்ணர்கள்போ சனமு, மிடங்கெழு மன்புர வியற்றிட மேவணமு மய
ம்புமிக் கதம்பமான் மியநா. ரிடங்கொளப் புகன்றேந் திருவிளை யா
டற் கதைக்குமூந் தினதிருப் புராணம். (௪௮)

காசிவி னுமக்கிம் மூற்கதை புகன்றே மிலேயா னனுக்கையாற் க
ருதி, நேசமோ டிவணீர் வினவலான், முழுதும் புகன்றன நிறைந்
துளம் வாழ்ந்திர், மாசின்மா தவத்தி ரெனத்தமிழ் முனிவன் கூறின
ன் மாதவர் கேட்டுப், பாசவெவ் வினைதீர்த் துய்ந்தன மென்றார் பா
வின்மலன்முறை பணிந்தார். (௪௯)

எந்தமா தவமுன் செய்தன மூன்று விக்கதை கேட்கவென் றி
யம்பிமுந்துமா தாவா லிரக்குண் டல்மு முயங்குபொன் னுடையுந்
தரித்துக்,கந்தகாண் மிஸ்ரா லருச்சனை செய்தார் கடமுனி கதம்பமா வ
னத்தின், வந்தருள் சொக்கைத் தியர்னித்தன னவர்க்கு மகிழ்சிறந் தா
சிகூ றினனால். (௫௦)

கும்பமா முனியும் வசிட்டனே முதலோர் கூறுமெண ணாயிரத்
தவரு, மெம்பிரான் றிருமுன் னெழுந்துசென் றிறைஞ்சி யேத்தினு
ரேத்தலு மிமையோர், தம்பிரான் மூல விலிங்கத்தி னின்றுந் தனிவி
ண்ட வீதினிற் றோன்றி, யும்பர்கா யகியோ டகமகிழ்ந் தவர்க்குக் கா
ட்சிதந் தொருமொழி புகல்வான். (௫௧)

மாகமார் கதம்ப வனத்தின்மான் மியநீர் கேட்டக மகிழ்தலான்
மற்று,மாகம புராண மனைத்தையுங் கேட்ட பயனுறு மகத்திய முனி
வை,மோகமார் வினைதீ ரன்பினீர் பூசித் திடுதிர்கம் பூசையா முனிவீ,
ரேகமா மெம்மைக் கேளுமின் வரமென் றியம்பிட மாதவ ரிசைப்
பார். (௫௨)

சோமசுந் தரநின் றாளிணை தொழலாற் றெண்மைசேர் பாண்டிய
மியர்வுங், காமுற வடைந்தே நின்பதந் தன்புங் கதம்பமா வனத்தின்
மான் மியமா,மாமைசேர் கதையை நாடொறுங் கேட்டு மகிழ்வொ
டும் படித்தும்போற் றியுமே,சேமமார் தலத்தில் வசிக்கவும் வேண்டு
ம் வரந்தரு கென்றனர் சிவனும். (௫௩)

தந்தன னுமக்கிவ் வரமெனப் பின்னுஞ் சாற்றுவான் வைகையி
ன் வடபால், முந்தைநான் மலரோன் கரிசுதீர்த் தருளு மூலலிங் க
த்திற்கு மேல்பா, லுந்துநீர் நதியின் மூழ்கியே யெம்மை யுவந்துசே
வித்துநீ ரிருமென், றிந்துசே கரனு மிலிங்கத்தி னுள்ளே யிருந்தமிழ் மு
னிவரோடா யிருந்தார். (௫௪)

காலகா லத்தி னதியினீ ராழ்கிக் கருணைசேர் சொக்கநா தனை யு, மேலவார் குழலங் கயற்கண்மா தினையு மிறைஞ்சினர் போற் றி வாழ் வுற்றார், தாவ்மேழ் பாவு மகத்தினிற் பொதிய வரையிற்றன் ஞெருகலை யிருத்தி, மூலமா மதுரை வாழ்வாழ் வுறுவான் முத்தமிழ்ச் சிவனரு டழைக்க. (௫௫)

என்றுபா தவத்து நயிமிசா ரணிய முனிவருக் கிம்பினன் சூத ன், ஞொன்றுமாக் கதைகேட் டனைவருந் தொழுது துதித்தனர் பூச னை செய்தார், வென்றிமா தவவிக் கதையுளந் தேக்கி மெய்ந்நீதவத் தழைத்தன மென்றார், மன்றல்சேர் மதுரை நாயகன் றிருத்தாள் வாழ்த்தினர் திருவுளம் வாழ்ந்தார். (௫௬)

வேறு.

ஓதுமஞ்செ ழுத்துவாழி யோகுகூடல் வாழியென்
றைதனீ தி யங்கயற்க ணங்கைபங்க னன்மலர்ப்
பாதபங்க யங்கள்வாழி பாவுநூற்பு ராணநா
மாதுபூதி வைதிகம் வழங்குசைவம் வாழியே. (௫௭)

பதினோராவது துன்மதன்முதலானவேடர்முத்திபெற்றவத்தியாயம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-௧௦௬௦.

கடம்பவனபுராணம்
முற்றுப்பெற்றது.
திருச்சிற்றம்பலம்.



# பிழைதிருத்தல்.

| பக்கம். | | பிழை | திருத்தல். |
|---|---|---|---|
| க. | உஎ. | கெண்ட | கொண்ட |
| உ. | அ. | வீயூகி | வியூகி |
| ௩. | ௩. | வக்கிரிதர் | வக்கிரிதா |
| எ. | ,, | கதயை | கதையை |
| ௩உ. | கரு. | சேய்யும் | செய்யும் |
| ௩௩. | க0. | சாணை | சாணை |
| எ0. | எ. | சாணை | சாணே |
| " | கடு. | பெவ்விலி | புங்விலி |
| கஉ௯. | உ௬. | பாகமந்தமா | பாதகமம்மா |
| ககஅ. | ௩. | காரிய | கார் |
| கருக. | கஎ. | கொடி | கோடி. |